தவத்திரு தூ.தா. சங்கரதாஸ் சுவாமிகளின்

# லவகுச நாடகம்

பதிப்பாசிரியர்

முனைவர் செ. உலகநாதன்



International Institute of Tamil Studies

உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம்

தவத்திரு தூ.தா. சங்கரதாஸ் சுவாமிகள்

இயற்றிய

# லவகுச நாடகம்

பாதுகாத்தவர்

**கலைமாமணி திரு.எம்.கே. துரைராஜ்**

இசை நாடக நடிகர், மதுரை

பதிப்பாசிரியர்

**முனைவர் செ. உலகநாதன்,** எம்.ஏ., பி.எச்.டி.



உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம்

சி.ஐ.டி. வளாகம், தரமணி, சென்னை - 600 113.

# BIBLIOGRAPHICAL DATA


| | | |
|---|---|---|
| Title of the Book | : | **lavakuca nāṭakam** |
| Author | : | Thavathiru T.T. Sankaradas Swamigal |
| Editor | : | Dr. S. Ulaganathan, M.A., Ph.D. |
| Publisher & © | : | International Institute of Tamil Studies<br>C.P.T. Campus, Chennai 600 113. |
| Publication No | : | 358 |
| Language | : | Tamil |
| Edition | : | First |
| Date of Publication | : | 2000 |
| Paper Used | : | 18.6 kg TNPL Super Printing |
| Size of the Book | : | 1/8 Demy |
| Printing type Used | : | 10 point |
| No. of Pages | : | xvi + 127 |
| No. of Copies | : | 1200 |
| Price | : | Rs. 30/- |
| Subject | : | Play of Lavakusa |
| Wrapper Design | : | V. Karunanithy |
| Printed by | : | *The PARKAR*<br>293, Ahamed Complex, 2nd Floor,<br>Royapettah High Road,<br>Chennai - 600 014. Ph : 8215684 |

முனைவர் ச.சு. இராமர் இளங்கோ
இயக்குநர்
உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம்
சென்னை-600 113.

# அணிந்துரை

செம்மையுறாமல் இருந்த தமிழ் நாடகத்தைச் செம்மைப்படுத்திய சான்றோர் சங்கரதாசு சுவாமிகள் ஆவார்கள்.

நெல்லை மாவட்டத்தில் தூத்துக்குடிக்கு அருகாமையில் உள்ள காட்டுநாயக்கன்பட்டி எனும் ஊரில் 7-9-1867-இல் பிறந்தார். 13-11-1922 வரை வாழ்ந்தார். தாமோதரன், பேச்சியம்மாள் ஆகியோர் இவருடைய பெற்றோர்கள் ஆவார்கள்.

சங்கரதாசு சுவாமிகள் அவர்களின் இயற்பெயர் சங்கரன் என்பதாகும். இவருடைய தந்தையார் தாமோதரன் அவர்கள் இராமாயணத்தில் பெரும் புலமை பெற்றவர்.எனவே இராமாயணப் புலவர் எனச் சிறப்பாகப் போற்றப்பெற்றார்.

இளமையில் சங்கரன் தன்னுடைய தந்தையாரிடமும், பின்னர்ப் பழனி தண்டபாணி சுவாமிகளிடமும் கல்வி கற்றார்.

தூத்துக்குடியில் உப்புப் பண்டகசாலையில் சில காலம் பணிபுரிந்தார். இவருடைய 24-ஆவது வயதில் இவருக்கு நாடகத் துறையில் மிகுந்த ஈடுபாடு ஏற்பட்டது. இவருடைய நாடக ஈடுபாட்டுக்குக் காரணமாக அமைந்தவர்களுள் ஒருவர் புதுக்கோட்டை மகாவித்துவான் மான்பூண்டியாபிள்ளை என்பவராவார். தமிழ் நாடகக் கலை வளர்ச்சிக்காக இவர் திருமணமே செய்துகொள்ளாமல் வாழ்ந்ததால் இவர் சுவாமிகள் என்று அழைக்கப்பட்டார்.

சங்கரதாசு சுவாமிகள் அவர்கள் சிறந்த நாடக நடிகராகவும், நாடக ஆசிரியராகவும், நாடக இயக்குநராகவும் விளங்கினார். எமன், இரணியன், இராவணன், சனீசுவரன், எமதர்மன், கடோத்கசன் முதலிய அச்சம் தரும் வேடங்களைத் தாங்கி நடித்துள்ளார்.

மதுரையில் பாலமீன ரஞ்சனி சபையில் நடிகர்களுக்குப் பயிற்சி அளிக்கும் ஆசிரியராக இருந்தார். கி.பி. 1910-இல் **'சமரச சன்மார்க்க சபை'** என்ற நாடகக் குழுவும், 1918-இல் **'மதுரை தத்துவ மீனலோசனி வித்துவபால சபா'** என்ற நாடகக் குழுவும் தோன்றுவதற்குக் காரணமாக அமைந்தார் இவர்.

நாடக நடிகர்கள் ஒழுக்கமின்றி நடப்பதறிந்து சங்கரதாசு சுவாமிகள் சிறுவர்களுக்கு நாடகப் பயிற்சி அளித்தார். அச்சிறுவர்கள் பெரியவர்கள் நடித்த பாத்திரங்களை மேடையில் ஏற்றுச் சிறப்பாக நடித்தனர். இவ்வாறு உருவானதுதான் 'பாலர் நாடக சபை' (Boys Company).

நடிகர்கள் ஒழுங்காகவும் கட்டுப்பாடாகவும் இருக்க வேண்டும் என்று சுவாமிகள் வலியுறுத்தினார். அப்போதுதான் தமிழ் நாடக நடிகர்களுக்குச் சமுதாயத்தில் மரியாதை ஏற்படும் என்று குறிப்பிட்டார்.

எம்.ஜி. கிட்டப்பா, நவாப் இராசமாணிக்கம், எம்.ஆர். இராதா, பாலாம்பாள், பாலாமணி, டி.கே. சண்முகம் முதலிய நாடக நடிகர்களை உருவாக்கியவர் சுவாமிகள்.

சங்கரதாசு சுவாமிகள் அவர்கள் *50* நாடகங்களை எழுதியுள்ளார் என்று பேராசிரியர் செ. உலகநாதன் 'சங்கரதாசு சுவாமிகள் நாடகங்கள் ஓர் ஆய்வு' என்ற தன்னுடைய முனைவர் பட்ட ஆய்வில் குறிப்பிட்டுள்ளார்.

சங்கரதாசு சுவாமிகள் நாடகங்கள் பெரும்பாலும் அவர் காலத்திலும் அவர் காலத்துக்குப் பின்னரும் அச்சாக்கப் பெற்றன.

சங்கரதாசு சுவாமிகள் எழுதிய *50* நாடகங்கள்,

*(1)* சதி அனுசுயா, *(2)* சுலோசனா ஸதி, *(3)* சத்தியவான் சாவித்திரி, *(4)* இரணியன் நாடகம் அல்லது பிரஹலாதன், *(5)* அல்லி சரித்திரம், *(6)* பவளக்கொடி சரித்திரம், *(7)* அபிமன்யுசுந்தரி அல்லது வத்ஸலா கல்யாணம், *(8)* வள்ளித் திருமணம், *(9)* லவகுச, *(10)* 'அரிச்சந்திரா' மயான காண்டம், *(11)*கோவலன் சரித்திரம் *(12)* சீமந்தனி, *(13)* நல்லதங்காள், *(14)* லலிதாங்கி, *(15)* ஞானசௌந்தரி, *(16)* சித்திராங்கி விலாசம் என்னும் சாரங்கதரன், *(17)* கர்விபார்ஸ், *(18)* மார்க்கண்டேயர், *(19)* இராம ராவண யுத்தம், *(20)* நளதமயந்தி, *(21)* கந்தர்வதத்தை, *(22)* மணிமேகலை, *(23)* சிறுத்தொண்டர், *(24)* மயில்ராவணன் , *(25)* பாதுகாபட்டாபிஷேகம், *(26)* லங்கா தகனம், *(27)* மன்மத தகனம், *(28)* வாலிமோட்சம், *(29)* பிரபுலிங்க லீலை, *(30)* புரோஜ்ஷா-நூர்ஜஹான், *(31)* அலிபாதுஷா, *(32)* அலாவுதீன், *(33)* தேசிங்கு ராஜன், *(34)* மதுரை வீரன், *(35)* வீரபாண்டியக் கட்டபொம்மன், *(36)* பூதத்தம்பி, *(37)* மணிமாலிகை, *(38)* தாவ்பீச், *(39)* மாபாரா, *(40)* குலேபகாவலி, *(41)* சரசசல்லாப உல்லாஸ மனோரஞ்சனி, *(42)* சிங்காரலோசனா, *(43)* மிருச்சகடி, *(44)* லைலாமஜ்னு, *(45)* சிம்பலைன், *(46)* ரோமியோஜூலியத், *(47)* ஜூலியஸ் சீசர், *(48)* தந்திராலங்காரம், *(49)* கமரல்ஜமான், *(50)* தேவ மனோஹரி ஆகியவையாகும். இவற்றுள் *15* நாடகங்கள் மட்டும் அச்சேற்றப்பட்டுள்ளன. அவை வருமாறு:

1) அல்லி சரித்திரம்

2) சதிஅனுசுயா

3) கர்விபார்ஸ்

4) வள்ளித் திருமணம்

5) பவளக்கொடி சரித்திரம்

6) அபிமன்யுசுந்தரி அல்லது வத்ஸலா கல்யாணம்

7) சுலோசனா ஸதி

8) இரணியன் நாடகம் அல்லது பிரஹலாதன்

9) கோவலன் சரித்திரம்

10) சீமந்தனி

11) நல்லதங்காள்

12) ஞானசௌந்தரி

13) சத்தியவான் சாவித்திரி

14) சித்திராங்கி விலாசம் என்னும் சாரங்கதரன்

15) 'அரிச்சந்திரா' மயான காண்டம்

தமிழ் நாடகத் தலைமையாசிரியரான சங்கரதாசு சுவாமிகள், டி.கே. சண்முகம் நடிப்பதற்கேற்ற வகையில் அபிமன்யூ என்ற நாடகத்தை ஒரே இரவில் எழுதிச் சாதனை புரிந்தவர். சங்கரதாசு சுவாமிகள் அவர்களை நாடக உலகின் இமயமலை என்று கலைவாணர் என்.எஸ். கிருஷ்ணன் அவர்கள் குறிப்பிடுவார்.

சங்கரதாசு சுவாமிகள் எழுதிய 50 நாடகங்களில் 17 நாடகங்கள் தற்போது நூலாக வடிவம் பெற்றுள்ளன. 33 நாடகங்கள் இன்னும் வெளிவரவேண்டும். இவற்றை வெளிக்கொணர வேண்டிய பொறுப்பைப் பல்கலைக் கழகங்களும் ஆய்வு நிறுவனங்களும் ஏற்க வேண்டும். காலத்தால் செய்ய வேண்டிய மிக இன்றியமையாத பணி இதுவாகும். இப்பணி செயல்படவில்லையெனில் சங்கரதாசு சுவாமிகளின் நாடகங்கள் எதிர்காலத்தில் கிடைக்காமல் போய்விடும். எனவே சங்கரதாசு சுவாமிகள் நாடகங்கள் அனைத்தையும் தொகுக்கும் முயற்சியை ஆய்வாளர்கள் மேற்கொள்ள வேண்டும். அதற்குத் தமிழக அரசு பொருளுதவி புரியவேண்டும்.

சங்கரதாசு சுவாமிகள் நாடகங்கள் பெரும்பாலும் பொதுமக்கள் நன்கு அறிந்த புராண இதிகாசச் சார்புடையன. சங்கரதாசு சுவாமிகள் இயற்றிய நாடகங்களில் உரையாடல்கள், பாடல்கள் கலந்து இருக்கும். மக்களுக்கு நல்லறிவு

புகட்டுவனவாகவும், அறக்கருத்துக்களை எடுத்துக் கூறுவனவாகவும் சுவாமிகள் நாடகங்கள் அமைகின்றன.

சங்கரதாசு சுவாமிகள் ரோமியோ ஜூலியட், சிம்பலைன், ஜூலியஸ் சீசர் ஆகிய ஆங்கில நாடகங்களையும், மிருச்சகடிகம் என்ற வடமொழி நாடகத்தையும் சாரங்கதாரா என்ற தெலுங்கு நாடகத்தையும் தமிழில் தந்துள்ளார். பம்மல் சம்பந்த முதலியார் எழுதிய மனோகரா என்ற நாடகத்திற்குப் பாடல்களையும் எழுதியுள்ளார்.

பேராசிரியர் செ. உலகநாதன் தேனீ போல் அலைந்து திரிந்து சங்கரதாசு சுவாமிகள் நாடகங்களைத் திரட்டியுள்ளார். பேராசிரியர் செ. உலகநாதனுக்குச் சங்கரதாசு சுவாமிகள் எழுதி அச்சாகாமல் இருந்த இரு கையெழுத்துப் படிகள் கிடைத்தன. அவற்றுள் ஒன்று லலிதாங்கி, பிறிதொன்று லவகுசா. இவ்விரு நாடகங்களில் லலிதாங்கி என்ற நாடகத்தை ஏற்கெனவே பேராசிரியர் செ. உலகநாதன் அவர்கள் அச்சிட்டு வெளியிட்டுள்ளார்.

சங்கரதாசு சுவாமிகள் எழுதி இன்னும் வெளிவராத ‘லவகுசா’ என்ற நாடகத்தை முனைவர் செ. உலகநாதன் பதிப்பித்துள்ளார். அதனைத் தற்போது நிறுவனம் வெளியிடுகிறது.

தமிழ் நாடகத்திற்கு இந்நூல் ஒரு புதிய வரவாகும்.

சங்கரதாசு சுவாமிகள் எழுதிய லவகுச என்ற இந்நாடகம் வால்மீகி முனிவர் பாடிய இராமாயணத்தின் *7*-ஆம் காண்டமான உத்தரகாண்டத்தைத் தழுவி எழுதப்பட்டுள்ளது. கம்பன் பாடாத உத்தர காண்டத்தை ஒட்டக்கூத்தர் பாடியுள்ளார்.

கி.பி. *1786* முதல் *1846* வரை வாழ்ந்த அனந்த பாரதி அய்யங்கார் ‘உத்தர காண்டத்தை’ ‘உத்தர ராமாயண நாடகம்’ என்ற பெயரில் நூலாக்கியுள்ளார். அருணாச்சலக் கவிராயர் எழுதிய ‘இராம நாடகக் கீர்த்தனை’ போன்று இந்நூலும் கீர்த்தனைகள், விருத்தங்களால் இயற்றப்பட்டதாகும்.

இராமன் இலங்கையில் இருந்து மீண்டு அயோத்தி வந்து ஆட்சியுரிமை ஏற்கிறான். சலவைத் தொழிலாளி சீதையைப் பழித்துரைப்பதைக் கேட்ட இராமன் சீதை கர்ப்பமுற்றிருப்பதை அறிந்திருந்தும் இலட்சுமணனிடம் சொல்லிச் சீதையைக் காட்டுக்கு அனுப்புகிறான். சீதை காட்டில் தனித்துவிடப்படுகிறாள். வால்மீகி முனிவர் தனித்துவிடப்பட்ட சீதையை ஆசிரமத்திற்கு அழைத்துச் சென்று அடைக்கலம் தருகிறார். சீதைக்கு அங்கே லவன் பிறக்கிறான். குசன் வால்மீகி முனிவரால் படைக்கப்படுகிறான்.

இராமனால் அசுவமேதயாகத்திற்காக விடப்பட்ட குதிரையை லவன், குசன் ஆகிய இருவரும் கட்டிப்போடுகிறார்கள். இதனால் இராமனும் அவனுடன்

சத்துருக்கன், பரதன், இலட்சுமணன், அனுமான், ஜாம்பவன், ஆகியோர் லவன், குசன் ஆகியோரோடும் போர் செய்கிறார்கள்.

லவன், குசன் இருவரும் அவர்களைத் தோற்கடிக்கிறார்கள். இராமன் உட்பட எல்லோரும் போர்க்களத்தில் மடிகின்றார்கள். இச்செய்தியை அறிந்த வால்மீகி கமண்டலத்தில் இருந்த நீரை அவர்கள் மேல் தெளித்து உயிர்ப்பிக்கிறார். இறுதியில் லவன், குசன் இராமன் மக்கள் என அறிகிறார்கள். இராமன் வால்மீகியிடம் சீதையையும், லவன், குசன் ஆகியோரையும் அயோத்திக்கு அழைத்துவர வேண்டுகிறான். வால்மீகி சீதையையும், லவன், குசன் ஆகியோரையும் அழைத்து வருகிறார்.

அப்போது சீதை கற்பின் திறத்தால் பூமியைப் பிளந்து உள்ளே சென்று மறைந்துவிடுகிறாள். இதுதான் இந் நாடகக்கதை. இந்நாடகத்தில் சங்கரதாசு சுவாமிகள் வீரச்சுவை, அவலச்சுவை, நகைச்சுவை முதலியவை அமைத்து மிகச் சிறப்பாக நாடகத்தைக் கொண்டுசெல்கிறார்.

சிறப்பான முறையில் இந்நாடகத்தைப் பதிப்பித்த முனைவர் செ. உலகநாதன் அவர்கள் பாராட்டுக்குரியவர். இவருடைய கடினமான உழைப்பைப் போற்றுகிறேன்.

இந்நிறுவன வளர்ச்சியில் ஆக்கமும் ஊக்கமும் காட்டிவருகின்ற இந்நிறுவனத் தலைவர் மாண்புமிகு தமிழ் ஆட்சிமொழி மொழி பண்பாடு மற்றும் இந்து சமய அறநிலையத் துறை அமைச்சர் முனைவர் மு. தமிழ்க்குடிமகன் அவர்களுக்கும், தமிழ் வளர்ச்சி-பண்பாடு மற்றும் அறநிலையத் துறைச் செயலாளர் திருமிகு. சு. இராமகிருட்டிணன் இ.ஆ.ப. அவர்களுக்கும் எங்கள் நெஞ்சார்ந்த நன்றி.

இந்நூலினை வனப்புற அச்சிட்டுத் தந்த பார்க்கர் கம்ப்யூட்டர்ஸ்-க்கும் எங்கள் நன்றி.

*8-2-2000* இயக்குநர்

தவத்திரு தூ.தா. சங்கரதாஸ் சுவாமிகள்

இயற்றிய

# லவகுச நாடகம்

## பதிப்பாய்வுரை

உலகத் தமிழாராய்ச்சி நிறுவனத்தின் இயக்குநர் முனைவர் இராமர் இளங்கோ அவர்கள், தவத்திரு தூ.தா. சங்கரதாஸ் சுவாமிகள் இயற்றிய 'லவகுச' நாடகத்தை வெளியிட என்னைப் பதிப்பாசிரியராக நியமித்தார்; மேலும், ஆய்வுரையும் எழுதவேண்டும் என்று என்னைப் பணித்தார்.

சங்கரதாஸ் சுவாமிகள் பத்தொன்பதாம் நூற்றாண்டின் பிற்பகுதியில் தோன்றி இருபதாம் நூற்றாண்டின் முற்பகுதியில் மறைந்த, தமிழகம் ஈந்த மிகச் சிறந்த நாடகாசிரியர் ஆவார். சுமார் ஐம்பது நாடகங்கள் இயற்றிய பெருமைக்குரியவர். தம் இருபத்து நான்காம் வயது முதல் தம் ஐம்பத்தைந்தாம் வயது வரை வாழ்நாளின் இறுதிவரை தமிழ் நாடகக் கலைக்காகவே வாழ்ந்த துறவி அவர். மேலைநாட்டு சேக்சுபியர் போல் நாடகத்திற்காகவே வாழ்ந்தவர்.

சங்கரதாஸ் சுவாமிகள் நாடகங்களுள் 'சதி அனுசூயா', 'சுலோசனா சதி', 'பிரகலாதா', 'சீமந்தனி', 'சத்தியவான் சாவித்திரி', 'லவகுச' ஆகியவை மிகச்சிறந்த இசைநாடகங்கள்.

'லவகுச நாடகம்' இந்நாள்வரை அச்சியற்றப்பெறவில்லை. சங்கரதாஸ் சுவாமிகளின் ஆய்வை மேற்கொண்டபோது, மதுரையில் கலைமாமணி எம்.கே. துரைராஜ் அவர்களைச் சந்தித்தேன். அவர் தற்போது இவ்வுலகில் இல்லை சில ஆண்டுகட்கு முன்னர் இயற்கை எய்தினார். அவர் சுவாமிகளின் மாணவர்களுள் ஒருவராக விளங்கி மதுரையில் வாழ்ந்த 'இசக்கிமுத்து வாத்தியார்' என்பவரிடம் சுவாமிகளின் நாடகங்களைப் பயின்று சுவாமிகள் நாடகங்கள் பலவற்றில் நடித்து வந்த மிக உயரிய இசைநாடக நடிகர். அவரிடமிருந்து 'லவகுச' நாடகப் படியைப் பெற்று மூன்று நாட்கள் மதுரையிலேயே தங்கி இருந்து அந்நாடகத்தைப் பார்த்து ஒருபடி எழுதி வந்தேன். சென்னையில் இராயப்பேட்டையில் வாழ்ந்த அமரர் நகைச்சுவை நடிகர் திரு. T.N. சிவதாணுப்பிள்ளையவர்களும் இதன்படி ஒன்றனை வைத்திருந்தார். அந்நாடகப் படியையும் ஒப்பிட்டுப் பார்த்தேன்; இரண்டும் சரியாக இருந்தன. திரு. சிவதாணுப்பிள்ளையவர்கள் 'லவகுச' நாடகத்தை அச்சிட்டு வெளியிடுமாறு என்னிடம் கூறினார். கலைமாமணி திரு. S.V. மாமுண்டி (மதுரை) அவர்கள் பாதுகாத்து வைத்திருந்த சுவாமிகளின் 'லவிதாங்கி' நாடகத்தை அச்சிட்டு வெளியிட்ட நான்,

'லவகுச' நாடகத்தையும் அச்சிட எண்ணி இருந்தேன். இந்நிலையில் முனைவர் இராமர் இளங்கோ அவர்கள் தம் நிறுவனத்தின் வாயிலாக இந்நூலை வெளியிட முன்வந்தது எனக்கு மெத்த மகிழ்ச்சி அளிக்கிறது.

**'லவகுச நாடகம்' - ஆய்வுரை**

தவத்திரு தூ.தா. சங்கரதாஸ் சுவாமிகள் இயற்றிய 'லவகுச **நாடகம்**' **உத்தர இராமாயணத்தை** அடிப்படையாகக் கொண்டது. இந்நாடகம் சீதையின் துயரத்தையும் அவள் மைந்தர்களாகிய லவன், குசன், ஆகியோரின் பேராற்றலையும் வெளிப்படுத்தும் பான்மையில் இனிய பாடல்களுடனும் திறமான உரையாடல்களுடனும் புனையப் பெற்றுள்ளது.

சங்கரதாஸ் சுவாமிகள் பாமரமக்கள் இன்புறுதற்காக இனிய பாடல்களைத் தம் நாடகங்களில் புனைந்தார். சுவைமிக்க உரைநடை உரையாடல்களை (வசனங்களை)யும் தக்கவாறு இயற்றினார். தாம் கற்றறிந்த பரந்துபட்ட இலக்கிய அறிவைப் புலப்படுத்தினார்; திருக்குறள் முதலான அறநெறி சார்ந்த இலக்கியங்களை நாடக மாந்தர்கள் வாயிலாக வெளிப்படுத்திக் கல்லாதவர்களையும் செவிச்செல்வர்கள் ஆக்கினார்; உவமைகள், பழமொழிகள் ஆகிய கூறுகளையும் ஆங்காங்குச் சேர்த்தார். வடமொழி நூல்களையும் கற்றறிந்தவராகிய சுவாமிகள் மனுநீதிகளையும் நாடகத்தில் புகுத்தி விளக்கியுள்ளார்.

விற்கலை முதலிய கலைகளின் அறிவும் மிக்கவராகச் சுவாமிகள் விளங்கி அக்கலைகளையும் மக்கள் அறியும் வண்ணம் நாடகத்துள் விளக்கியுள்ளார்.

'லவகுச நாடகம்' எத்தகைய சிறப்புடையது என்பதனைக் கீழ்வரும் மேற்கோள்கள் சிலவற்றால் அறியலாம்:

**இறைவணக்கம்**

இறைவணக்கப் பாடலாக விநாயகர்-காப்புச் செய்யுள் அமைந்துள்ளது.

விநாயகர் காப்புச் செய்யுள்

"ஸ்ரீராமன் பிற்பகுதி செப்புதற்கு நற்றுணையாய்
நேராக வந்து நிலைநிற்கும் - யார்யாரும்
சிந்திக்க வேண்டும் திருவருளும் முன்னவனார்
தந்திக் கடவுளிரு தாள்".

இராமனுடைய பிற்பகுதி வாழ்க்கையை 'லவகுச நாடகம்' தெரிவிக்கிறது என்பதனை இச்செய்யுள் அறிவிக்கிறது.

சுவாமிகள் திருக்குறளைப் பெரிதும் போற்றித் தம் நாடகங்களில் இடம்பெறச்செய்து பாமரமக்களிடம் பரப்பியவர்.

'வவகுச' நாடகத்தில் பல இடங்களில் திருக்குறட்பாக்கள் மேற்கோள்களாக அமைந்துள்ளன.

முதல் காட்சியில்,

"தானம் தவமிரண்டும் தங்கா வியனுலகம்
வானம் வழங்கா தெனின்" (குறள்: 19)

என்னும் குறளும்,

"இயல்புளிக் கோலோச்சு மன்னவ நாட்டப்
பெயலும் விளையுளுந் தொக்கு" (குறள்: 545)

என்னும் குறளும் இடம்பெற்றுள்ளன.

இரண்டாம் காட்சியில் குறள்:

"காலை யரும்பிப் பகலெல்லாம் போதாகி
மாலை மலருமிந் நோய்" (குற: 1227)

ஒன்பதாம் காட்சியில் குறள்:

"ஊழிற் பெருவலி யாவுள மற்றொன்று
சூழினுந் தான் முந்துறும்" (குறள்: 380)

பதினான்காம் காட்சியில் குறள்:

"அறவினை யாதெனில் கொல்லாமை கோறல்
பிறவினை யெல்லாந் தரும்" (குறள்: 321)

இருபதாம் காட்சியில் குறள்:

"குழலினிது யாழினிது என்ப தம்மக்கள்
மழலைச்சொற் கேளா தவர்" (குறள்: 66)

பழமொழிகள்:

இந்நாடகத்துள் பயனுள்ள பழமொழிகள் அமைந்து இன்பம் தருகின்றன. அவற்றுள் சில வருமாறு:

"கொட்டினால் தேள்; கொட்டாவிட்டால் பிள்ளைப் பூச்சி"
(காட்சி: 4)

"கம்பங்கதிரைக் கண்டா கைசும்மாயிருக்காது;
மாமன் மகளைக்கண்டா வாய்சும்மாயிருக்காது"
(காட்சி: 5)

"பட்ட காலிலே படும் கெட்ட குடியே கெடும்"
(காட்சி: 8)

"உலைவாயை மூடினாலும் ஊர்வாயை மூடமுடியாது"
(காட்சி: 6)

"பெண்ணென்றால் பேயுமிரங்கும்" (காட்சி: 7)

"குட்டி கொழுத்தாலும் வழுக்கல் வழுக்கல்தானே" (காட்சி: 19)

**உவமைகள்:**

சுவாமிகள் மிகச்சிறந்த உவமைகளை இந்நாடகத்தில் இடம்பெறச் செய்துள்ளார்.

அவற்றுள் சில:

இராமர் கூற்று:

"அனல்மெழுகென என்மன முருகியது" (காட்சி: 6)

லக்ஷ்மணன் கூற்று:
"இருதலைக்கொள்ளி எறும்பு
போலாகித் தத்தளிக்கலானேன்" (காட்சி: 8)

"அருந்ததி கற்பன்னையை
வனந்தன்னில் விடலாமோ அண்ணா?" (காட்சி: 7)

லக்ஷ்மணன் கூற்று:
"அனல்மெழுகாக அன்னையுள முருக
ஆறுபோல் ஓடியே கண்ணீர்பெருக
நான்" (காட்சி: 10)

குசன் கூற்று:
"நாயடிக்கும் தோட்டிப் பயல்களைப்போல்
கையிலே தடிகொண்டு நிற்கும்
மடப்பயல்களே" (காட்சி: 16)

"சாந்தங்கொள்வீர் தண்ணீர் போலும்" (காட்சி: 23)

**மனுதர்மம்:**

மனுதர்மம் பற்றிய நூலைக் கற்றறிந்தவராகிய சுவாமிகள், மனுநீதிகளை விளக்கியும் உரையாடல்கள் எழுதியுள்ளார்.

(எ-டு) "....தர்மம் என்பதை ஒழுக்கம், வழக்கு, தண்டம் என்னும் மூன்று பகுதியாக மனு விஸ்தரித்திருக்கின்றார். ஒழுக்கமென்பது அவ்வவ் வருணத்தாருக்குரிய ஆச்சார அனுஷ்டான சுகர்மமாகும்; வழக்கென்பது ஒருபொருளை இருபகுதியாரும் அதற்கு மேற்பட்ட பல பகுதியாரும், தமக்குத் தமக்கென உரிமை பாராட்டி வாதம் தொடுப்பதாகும்; தண்டமென்பது மேற்கூறிய இருவகையிலும் வழுவினோர்களைச் சிட்சித்து நல்ல வழியில் அவர்களை நிறுத்தலாகும்". (காட்சி: 1)

**காதல் பற்றிய விளக்கம்:**

சுவாமிகள் துறவியாக வாழ்ந்தாலும் நாடகச் சூழலுக்கேற்ப உரையாடல்களைப் புனைந்தவர். காதல் பற்றியதொரு விளக்கம்,

"மலரினும் மெல்லிது காமம் சிலர்அதன்
செவ்வி தலைப்படு வார்" (குறள்: 1289)

என்னும் குறளை அடிப்படையாகக் கொண்டு அமைந்துள்ளமை சுவாமிகளின் விளக்கம் தரும் ஆற்றலை உணர்த்துகிறது.

விளக்கம்: "காதலென்பது கூட்டுறவாகிய நேசமன்றோ? அந்தக் கூட்டுவு நேராது போமாகில், அது காம வியாதி என்றல்லவோ பெயரடைகிறது? அவ்விதத்தால் உண்டாகும் காமவியாதியை அதன் மெல்லியதாகிய அற்பத்தை நோக்கி, சுருதி யுக்தி அனுபவமுடைய அறிவினையுடைய வித்வசிரேஷ்டர்கள் ஒரு புஷ்பமாகவன்றோ உவமித்து வர்ணித்திருக்கிறார்கள்!" (காட்சி: 2)

**கற்பனைத்திறன்:**

சங்கரதாஸ் சுவாமிகள் கற்பனைத்திறன் மிகுந்த பாடல்களைத் தம் நாடகங்களுள் அமைப்பவர் என்பதற்கு லவகுச

ஒருபாடல் எடுத்துக்காட்டாக விளங்குகிறது:

"வஜ்ஜிரத்தால் தூண்நிறுத்தி
மரகதத்தால் சட்டம் பூட்டி
உச்சிதமாம் முத்துவடம்
கட்டியதாம் ஊஞ்சலிது
ஆணிப்பொன்னால் பலகை
அருகிலெல்லாம் நீலமணி
மாணிக்கங்களைப் பதித்து
வனப்பியற்றும் ஊஞ்சலிது"

இப்பாடல் சீதையின் தோழியர்கள் பாடுவதாக இரண்டாம் காட்சியில் அமைந்துள்ளது.

"வைரத்தூண்களை நிறுத்தி மரகதச்சட்டங்கள் பூட்டி, முத்துவடம் கட்டப்பெற் ஊஞ்சல்; பலகை ஆணிப்பொன்னால் ஆனது; அருகில் நீலமணி, மாணிக்கம் ஆகிய மணிகளைப் பதித்து அழகாக அமைக்கப்பட்ட ஊஞ்சல்" - என்னும் பொருளில் அமைந்த இப்பாடல் சுவாமிகளின் உயரிய கற்பனையாற்றலை உலகறியச் செய்கிறது.

"ஜவ்வாது மேடையிட்டு
சர்க்கரையில் பந்தலிட்டு"

என்னும் கவியரசர் கண்ணதாசன் அவர்களின் பாடல் தோன்றச் சுவாமிகளின் பாடல் முன்னோடியாக உள்ளது.

**கலைநுட்பம்:**

லவகுச நாடகத்தில், துணியில் உள்ள கறையைப் போக்குதற்குச் சலவைத் தொழிலாளர் பின்பற்றும் கலைநுட்பத்தை விளக்கியுள்ளார் சுவாமிகள்.

**வண்ணாத்தி:** "கதம்பக் குங்குமக் கறையைப் போக்குதற்கு
இக்கால மிகவும்
கருதி யோசனை புரிவது மெதற்கு (க)
இங்குக் காணுந் தயிலாரியாலும்
கடலைமாவாலும் கறைபோகுமேனிந்த யோசனை"

இது மூன்றாம் காட்சியில் இடம்பெற்றுள்ளது.

**விற்கலை நுட்பம்:**

விற்கலையில் அமைந்துள்ள நான்கு நிலைகளைச் சுவாமிகள் பன்னிரண்டாம் காட்சியில் விளக்கியுள்ளமை வியக்கத்தக்கதாகும்.

வில்வித்தையில், மண்டலநிலை, ஆலிடநிலை, பிரதியாலிட நிலை, பைசாசநிலை என நான்கு நிலைகள் உள்ளமையை வால்மீகி முனிவர், லவன், குசன் ஆகியோர் வாயிலாகச் சுவாமிகள் விளக்கியுள்ளார்.

**சிறந்த குதிரை பற்றிய அறிவு:**

சிறந்த குதிரையின் தன்மைகளையும் லவகுச நாடகத்தில், வஸிஸ்டர் என்னும் நாடகப் பாத்திரத்தின் வாயிலாகச் சுவாமிகள் வெளிப்படுத்தியுள்ளார்:

**வஸிஸ்டர்:** "ரகுநந்தனா! சித்ரா பௌர்ணமியே பூப்பிரதக்ஷணத்திற்குப் பரிவிடும் சுபதினம். அதற்குப் பஞ்சவர்ணங்கள் பொருந்தியதாகவும் வட்டம், வையாளி, சிறுநடை, பெருநடை, செம்புட்கதி என்னும் ஐந்து கதிகளுடையதாகவும் இருக்கும் குதிரை வேண்டும்". (காட்சி: 13)

**படைக்கருவிகள் பற்றிய அறிவு:**

சங்கரதாஸ் சுவாமிகளின் முன்னோர்கள் இராமநாதபுரம் மன்னர்களிடம் படைத்தலைவர்களாக இருந்தவர்கள். எனவே, படைக்கருவிகளைப் பற்றிய அறிவு அவருக்கு மிகுதியாக இருந்துள்ளது. பரந்துபட்ட இந்த அறிவைப் பயன்படுத்தி லவகுச நாடகத்தில் தக்க இடங்களில் வெளிப்படுத்தியுள்ளார்.

படைக்கருவிகள் எய்படைகள், எறிபடைகள், குத்துப் படைகள், வெட்டுப்படைகள் என நான்கு வகையின.

***எய்படைகள்:*** அக்னியாஸ்திரம், வருணாஸ்திரம், நாகாஸ்திரம், கெருடாஸ்திரம்.

***எறிபடைகள்:*** சக்கரம், தோமரம், வளைதடி, குறுந்தடி, இருப்புக்குண்டு, கப்பணம்.

***குத்துப்படைகள்:*** ஈட்டி, வல்லயம், வேலாயுதம், சூலாயுதம், பிண்டி, பாலா.

***வெட்டுப்படைகள்:*** அரிவாள், வெட்டுவாள், கண்டகோடரி, சந்த்ராயுதம்.

இவ்வாறு பல நுட்பங்களையும் அரிய செய்திகளையும் இலக்கிய இன்பமும் கொண்டு நாடகம் சுவைமிக்கதாகச் சுவாமிகளால் இயற்றப்பெற்றுள்ளது. பல உலகியல் நெறிகளும் போர்க்கள நெறிகளும், மான் முதலிய துன்பம் செய்யாத விலங்குகளைக் கொல்லக்கூடாது என்னும் அருளறமும் தெரிவிக்கப் பெற்றுள்ளன.

தர்க்கப் பாடல்கள் நாடகத்துக்கு மெருகூட்டுகின்றன. ஐயப்பாட்டினால் நேரும் அவலத்தைச் செம்மையாக நாடகம் வெளிப்படுத்துகிறது.

"ஜானகி மீண்டும் ஒருமுறை இவ்விரு குழந்தைகளுடன் அக்கினிஸ்நானம் செய்தால் பிறகு நான் ஸ்வீகரித்துக் கொள்ளுகிறேன்" என இராமன் கூறவும், ஜானகி, "வத்ஸர்களே! வாருங்கள் உலகிலுள்ள யாவரும் பஞ்சபூதங்களில் ஒன்றாகிய அப்புவாகிய நீரிலேதான் ஸ்நானஞ் செய்கிறார்கள். நாமும் இப்பொழுது பஞ்சபூதத்தில் ஒன்றான தேயுவாகிய நெருப்பிலேதான் ஸ்நானஞ் செய்யப்போகிறோம். இதில் விரோதமொன்று மில்லை. இறங்குங்கள் விரைவில் இந்த அக்கினிக் குழியில்!" எனக் கூறும் உரையாடல் நாடகம் காண்போர் நெஞ்சங்களை அவலக்கடலில் ஆழ்த்தும் பான்மையில் உள்ளது. இராமர் மீது வெறுப்பையும் உருவாக்குகிறது.

ஐயப்பாட்டினால் உலகில் எத்துணை நற்பெண்டிர் இன்னலுற்று அழிந்திருப்பார்கள் என்பதற்கு இந்த நாடகம் சிறந்த எடுத்துக்காட்டாகும்.

இறுதியில் பரமதபக் காக்ஷியுடன் நாடகம் இனிதே நிறைவுறுகிறது.

சங்கரதாஸ் சுவாமிகளின் புலமை, நாடகத்திறன், கலையறிவு, உலகியல் அறிவு ஆகிய பல திறன்களை 'லவகுச நாடகம்' செம்மையாக வெளிப்படுத்துகிறது.

***செ. உலகநாதன்***

## தவத்திரு தூ.தா. சங்கரதாஸ் சுவாமிகள்

இயற்றிய

# லவகுச நாடகம்

## நாடக மாந்தர்கள்

| | |
|---|---|
| இராமர் | தசரதனுக்கு மூத்த மைந்தர் |
| லக்ஷ்மணன் | இராமருக்குத் தம்பி |
| சத்துருக்கனன் | இராமருக்குத் தம்பி |
| பரதன் | இராமருக்குத் தம்பி |
| ஸீதை | இராமருக்கு மனைவி, ஜானகி |
| கலாவதி | சீதையின் தோழி |
| தோழியர் | சீதையின் தோழியர் |
| வண்ணான் | இராமரைப் பழித்தவன், சுப்பன் |
| வண்ணாத்தி | சலவைத் தொழிலாளியின் மனைவி, மாடத்தி |
| அகடவிகட சாமர்த்திய அதிகாரன் | - நகைச்சுவைக்குரிய பாத்திரம் |
| கிழவி | சலவைத் தொழிலாளி சுப்பன் தாய் |
| கஞ்சுகி | சேவகன் |
| காவலன் | இராமன் காவலன் |
| வால்மீகி | முனிவர், இராமாயணம் இயற்றியவர் |
| லவன் | சீதைக்கு மைந்தன் |
| குசன் | வால்மீகியால் தோற்றுவிக்கப்பட்டவன், லவனுக்குத் தம்பி |
| வஸிஸ்டர் | முனிவர் |
| 1ஆவது காவலன் | இலங்கை அரக்கன் |
| 2ஆவது காவலன் | இலங்கை அரக்கன் |
| அனுமான் | இராமனுடைய தூதுவன் - பக்தன் |
| ஜாம்பவான் | சீதையால் சிரஞ்சீவிப் பட்டம் பெற்றவன் |
| கமண்டலன் | சீதைக்குக் குசன் கட்டுண்ட செய்தி சொல்பவன் |
| அக்கினி | தீக்கடவுள். |

ஓம்
சற்குருவே துணை

# லவகுச நாடகம்



## விநாயகர் காப்பு

ஸ்ரீராமன் பிற்பகுதி செப்புதற்கு நற்றுணையாய்
நேராக வந்து நிலைநிற்கும் - யார் யாரும்
சிந்திக்க வேண்டும் திருவருளும் முன்னவனார்
தந்திக்கடவுளிருதாள்.



## 1ஆவது காட்சி

அயோதி அரண்மனை தர்பார். தேச விசாரணை
லக்ஷ்மண பரதசத்ருக்னர், புடைசூழ
ராமர் வீற்றிருத்தல் - ( அனைவரும் துதித்தல் )

நாடக மாந்தர்கள்: பரதன், லக்ஷ்மணன், சத்துருக்கனன்,இராமர்.

<u>பாட்டு</u>

திரிலோக விஜய நாமா
ராமா ஸ்ரீராமா
சித்த ஸ்வரூபா சத்துருகோபா
திவ்ய தயாபரா - தேவதேவ
சுந்தர ரஞ்சித மங்களனே கெம்பீரா ( திரி )
அழகிய சீதா வனிதை சமேதா
அலர் நிகர் பாதா ஆனந்த நாதா - நிதம்
போற்றும் எங்கள் துயர்மாற்றிக் காப்பாற்றுவாய் ( திரி )
( தர்க்கப்பாட்டு - வேறு )
( பரதன் ஸ்ரீராமரை வணங்கல் )

பரதன் : தர்மோ பதேசா ஜானகி நேசா
சர்ஜனர் தாசா தசக்ரீவ நாசா

லக்ஷ்மணன் : தாரணியோர்கள் புகழும் விஸ்வாசா
சத்திய தத்துவனான சர்வேசா

சத்துருக்கனன் : தசரத நந்தன மகிபா விசேஷா
தானதவங் கோன்முறையன் பாலருள் சந்தோஷா

<u>இராமர் தேச விசாரணை</u>

இராமர் : அம்புவி யோரெல்லாம் ஆனந்தமென்று
அன்பாக நம்மை வாழ்த்துவதே நன்று
தம்பிபரதா நாளும் நிலை நின்று
தர்மம் செழிக்குதா சாற்று வாயின்று.

ராமர் வசனம் : தம்பி பரதா! அரசன் குடிகளின் வேலைக்காரனே-யல்லாமல், நாமே உன்னத அதிகார சிரேஷ்டனென்கிற மமதையால் இட்டதே சட்டமென்று நினைப்பானாகில்அடியோடு குலநாசமடைவானென்பதற்கு ஆக்ஷேபணையில்லை. “கொற்றவர் நரர்க்குழைத்துக் கூலியாமிறையைக் கொள்வர்” என்னும் நீதிமொழியை எப்பொழுதும் ஞாபகத்தில் வைத்து, நாம் பிரஜைகளுக்குச்

சௌகரியமான வழியை நாடி அதற்கனுசரணையாக நடந்து அவர்களால் கொடுக்கப்படும் வேலைக் கூலியாக, இறைப்பொருளாகிய வரிவசூலைப் பெற்று அக்குடிகளின் ஊழியக்காரனாக நடந்துவர வேண்டுமென்பது, மனுமுறையின் சித்தாந்தம். ஆதலால், நம் குடைநிழலில் வாழும் பிரஜைகளின் நலத்தை நாடுவதே முக்ய லக்ஷியம். இதற்கு மாறு முக்காலும் கூடாது. தன்னிமித்தம் நம் நாட்டில் வாழ்வோர்களின் சுகக்ஷேமங்களெப்படி? அதனைத் தெளிவாகத் தெரியப்படுத்துவாயாக!

(பாட்டு)

பரதன் : மாதமும்மாரி வருஷிப்பதாலே
மாநிலத் தானியங்கள் விருத்தியாலே
சாது சர்ஜனருக்கீவாரன்பாலே
தர்மம் செழிக்குதென்னாளும் மென்மேலே.

வ.ம். அண்ணா! உலகத்துக்காதாரமானது தண்ணீர். அந்தப் புனலோ, மேகங்களுள் ஒடுக்கம். மேகங்களோ இந்திரன் ஆணையின்படி நடப்பன. இந்திரனோ.. யாக அவிர்ப்பாக உணவை விரும்பியவன். விரும்பியது பெறுவர் மிக மனமகிழ்வர், என்பதால், யார் எப்பொருளை விரும்புகிறார்களோ அதனைப் பெற்றவுடன் சந்தோஷமடைந்து அப்பொருள் தமக்குக் கிடைப்பதற்குக் காரணமானவர்மீது பிரீதியுற்று, அவர் விருப்பத்தையும் பூர்த்தி செய்ய முயலுவது சகஜம். நாமோ நம் நாட்டு விப்பிரோத்தமர்களால், காலக்ரமம் தவறாமல் பற்பல யாகாதி கிருத்தியங்களை நடத்தி வருவதால் இந்திரன் தன் இனத்தாரோடு சேர்ந்து அவிர்ப்பாகங்களையுண்டு, சந்தோஷமடைந்து, காலமுறை வழுவாமல் மழை பொழிவிக்கின்றான். அதனால், ஆறு, ஏரி, குளம், தடாகம், வாய்க்கால்களில், புனல் நிரம்பி ஏராளமான தானியங்களை விளைவித்து வருகின்றனர். அச்செல்வ மிகுதி பெற்ற பிரஜைகள் யாவரும் தமக்கென வாழாப் பிறர்க்குரியாளராய், அருந்தவத்தோர்க்கும், தெய்வ பக்தியுள்ளோர்க்கும், அனாதையாண்டிப் பரதேசிகட்கும் வேண்டிய அளவு உணவு முதலிய நுகர்பொருள்களை உதவி மனைவி மக்கள் உற்றார் பெற்றார் இஷ்ட பந்து மித்திரரோடு சந்தோஷ சித்தராகவே வாழ்ந்து வருகிறார்கள் அண்ணா!

இராமர் : சந்தோஷம்.

(பாட்டு)

தரணியெங்கும் புகழ்வதால்
நம்முடைய ராஜ்யபாரமே
தம்பி லஷ்மணா எனக்குச்
சாற்று வாயிந்நேரமே.

வ-ம். தம்பி லக்ஷ்மணா! "தானம் தவமிரண்டும் தங்கா வியனுலகம், வானம் வழங்காதெனின்" என்றதால், மழைபொழியா விடில், தர்மமும் தவமும், தலையெடுக்கமாட்டா. இதனால் விளங்குவதென்னவென்றால், தர்மத்துக்குச் செங்கோலும், செங்கோலுக்குத் தர்மமும் ஒன்றுக்கொன்று சம்பந்தப்பட்டிருப்பதால் நம் நாட்டிலே செங்கோலதிகாரம் விளக்கம் கொண்டு, தர்மம், எந்நாளும் குறைவின்றிச் செழிப்பாக நடந்து வருகின்றதா?

(பாட்டு)

லஷ்மணன் : தருமநெறியிலொரு குறையில்லை
தமதரசினிலொரு தடையில்லை.

வ-ம். அண்ணா! நம் நாட்டில் மழை பொழியும் விபரமும், அதனால் விளைவு நிறையும் விபரமும் சின்னண்ணாவாகிய பரதர் முன்பாகவே, சவிஸ்தாரமாகச் சொல்லியிருக்கிறார். "இயல் புளிக் கோலோச்சு மன்னவ நாட்ட பெயலும் விளையுளுந்தொக்கு" என்னும் ஆன்றோர் வாக்யமும் அதனை வலியுறுத்தும். நிற்க, இனி தர்மமென்பதை, ஒழுக்கம், வழக்கு, தண்டம் என்னும் மூன்று பகுதியாக மனு விஸ்த்தரித்திருக்கின்றார். ஒழுக்கமென்பது அவ்வவ்வருணத்தாருக்குரிய ஆச்சார அனுஷ்டான சுகர்மமாகும். வழக்கென்பது, ஒரு பொருளை இரு பகுதியரும் அதற்கு மேற்பட்ட பல பகுதியரும், தமக்குத் தமக்கென உரிமை பாராட்டி வாதம் தொடுப்பதாகும். தண்டமென்பது மேற்கூறிய இருவகையிலும், வழுவினோர்களைச் சிட்சித்து நல்ல வழியில் அவர்களை நிறுத்தலாகும். ஆகவே, துஷ்ட நிக்ரஹ சிஷ்டபரிபாலனம் செய்யுமிதுவே தர்மமும் செங்கோன்முறைமையுமாகும். ஆதலால், சுருதி, ஸ்மிருதி, வேதாகம, உபநிடத தர்ம சாஸ்திர, சகலகலா விற்பன்னராகிய, தமது ஆளுகையில், வியாழச் சுக்ரமனு முதலியோர்

அனுஷ்டானபேதாபேத வகைகளும் ஒருங்கமையப் பட்டு நியாய விரோதமின்றி நடந்தேறி வருவதற்குத் தடையென்ன? தர்மம் நாளுக்கு நாள் செழித்தோங்கி, செங்கோன்முறை, மென்மேலும், விளக்கங்கொண்டு திகாம்பரங்களிலும் ஆக்ஞா சக்ராதிகாரம் நடைபெற்று வருகிறதண்ணா! இவ்விஷயத்தைப் பற்றிக் கொஞ்சமேனும் சந்தேகம் வேண்டாம்.

இராமர் : மிக்க மகிழ்ச்சி!

(பாட்டு)

நாட்டிலே சுகாதாரங்களெல்லாம் நன்மையா
நவில்வாய் தம்பி சத்ருக்கா இந்நாளில் செம்மையாய்!

வ-ம். தம்பி சத்ருக்கனா! "ஆபயன் குன்றும் அறுதொழிலோர் நூன் மறப்பர், காவலன் காவானெனின்" என்றதால் எந்த அரசன் மனுமுறையின் சட்டத்தின்படி ராஜ்யபரிபாலனம் செய்யவில்லையோ அவனது நாட்டில் பசுவின்பால் சுருங்கிவிடும். பிராம்மணர்கள், தங்களுக்குண்டான, சத்கர்மாக்களை மறந்து விடுவார். அதனால் நாடு க்ஷீணமடைந்து, குடிகள் பிணியுற்று நலிவார்கள். ஆகவே, நம்முடைய ராஜ்யத்தில் வாழும் பிரஜைகளுக்கு யாதொரு குறைவும் நேராவண்ணம் அவரவர்களுக்கு வேண்டிய சௌகர்யங்களை ஏற்படுத்தி, குடிஜனங்கள் சந்தோஷத்துடன் வாழ்ந்துவர, அடிக்கடி கவனித்து வரும்படியாக உனக்கு நான் கட்டளையிட்டிருக்கிறேனல்லவா, அந்தவகையில் நம் தேசத்தில் சுகாதார வகைகள் எந்த நிலைமையிலிருக்கின்றன? அதனை விவரமாக விளம்புவாயாக!

(பாட்டு)

சத்துருக்கனன் : ராஜ்ய பரிபாலனத்திலே நீதி நியாயம்
நான்கு தந்த்ர உபாயம்
மேலும் தண்ணீர் சகாயம்
இன்னும் சுத்த ஆகாயம்
இவை ஆதாயம் அதால்
நாட்டிலே சுகாதாரங்கள்
எல்லாம் நன்மைதான்.
எந்நாளிலும் குறைவில்லை.
நவின்றேனுண்மைதான் (நா)

வ-ம். : அண்ணா! "இயற்றலு மீட்டலுங் காத்தலுங் காத்த வகுத்தலும் வல்லதரசு" என்பதால் பொருள் வருவாய்க்குத்தக்க நல்ல தொழிலைத் தொடங்குவதும் அத்தொழிலின் வழி பொருளைச் சேகரிப்பதும், அப்படிச் சேகரித்த பொருளைக் கள்வர், பகைவர், உற்றார், மற்றார், பணியாளர், கவர்ந்து கொள்ளாமல் பத்திரப்படுத்துவதும், அப்படிப் பத்திரப்படுத்திய பொருளை, சத்திரம், சாவடி, மடம், பொது ஜன உபகார இடம், முதலானவைகள் கட்டுவிப்பதும், ஆறு, நதி, கால்வாய்களை வெட்டி ஜலவசதிகளைச் செய்விப்பதும், வீதிகளில் அசுத்தங்களில்லாமல் அப்போதைக்கப்போது சுத்தப் படுத்துவிப்பதும், தேசசஞ்சாரம் செய்வோருக்கும், பாதை வசதிகள் செய்விப்பதோடு, சூரிய வெப்ப தாபமில்லாதிருக்கும் பொருட்டுப் பாதையின் இரு பக்கங்களிலும், மரங்களை நாட்டி வளர்ப்பதுமாகிய, லோகோபகார சுகாதார அறப்பொருட்டும், அரண் காத்தல், நாடு காத்தல், பகைப் புலம் பெயர்தல் என்னும், பல சைன்ய வகை விருத்தி செய்விக்கும் பொருட்டும், மண்டபம், வாவி, இளமரக்கா, ஜலக்ரீடை,பொய்கை, சிங்காரக்ருஹம் நிர்த்தனசாலை முதலிய வகைகள் ஏற்படுத்துவிக்கும் இன்பப் பொருட்டும், செலவு செய்யும் பாகுபாட்டின் உண்மை தெரிவதே வலியராஜர் செய்கை. இவ்விதக் குறைவில்லா நிலையோடு தாங்கள் அடிக்கடி கவனித்து வருவதினாலே நம் நாட்டில் சுகாதார வகைகளுக்கு யாதொரு குறைவுமில்லையண்ணா!

ராமர் : மிகவும் சந்தோஷம். கனிஷ்டராகிய பரத லக்ஷ்மண சத்ருக்னர்களே! "தம்பியுடையவன் படைக்கஞ்சான்" என்னும் பழமொழிக்கு இலக்கியம் காண வேண்டுமென்றால், மாற்றார் நம்மையே கருத வேண்டிய நிலையில் நீங்கள் நடந்து கொண்டதைப் பற்றிச் சந்தோஷமடைகின்றேன். ராவண சம்மார காலத்தில் தம்பி லஷ்மணன் பதினான்கு வருடமும், என்னை இடைவிடாது, உடலை நிழல் தொடருவதைப் போல் என்பின் பற்றி வந்து என்னுடைய சுகதுக்கங்களைத் தனதாகப் பாவித்து ஆகார நித்திரையின்றி என்னைக் காப்பாற்றி வந்தான். தம்பி பரதனோ எனக்குப் பதிலாக ராஜ்ய விவகாரங்களைக் கவனிக்க வேண்டிய பொறுப்பேற்று, நான் வராமல் அயோத்திக்குத்

திரும்புவதில்லையென்று உறுதி கொண்டு நந்திக் கிராமத்திலிருந்தபடியே எனது பாதுகையை வைத்துப் பூஜித்துக் கொண்டு நானிருந்து பாதுகாப்பதுபோல ராஜ்ய காரியங்களைக் கவனித்து வந்தான். தம்பி சத்ருக்கனனோ, பரதனுக்குத் துணையாகயிருந்து, என்னிடம் லக்ஷ்மணன் நடந்து கொள்வதைப்போல், பரதனுக்கு அனுசரணையாக நடந்து ராஜ்ய விவகாரங்களைக் கவனித்து, பிரதி ராமலக்ஷ்மணாள் என்றுரைக்கும்படி, மிகத் தெளிவோடும் புத்திக் கூர்மையோடும் நடந்து கொண்டான். இவ்வளவு சிறப்பு வாய்ந்த உத்தம பாந்தவர்களான உங்களை அடைந்துள்ள எனக்கு என்ன குறை? உங்களுடைய சுயநலம் கருதாது, என் பொருட்டு எதையும் தியாகஞ் செய்யச் சித்தமாய் நிற்கும் உங்களுக்கு நான் என்ன கைமாறு செய்யப் போகிறேன். சர்வ சக்தியுள்ள தெய்வானுக்ரஹமும், என்னுடைய பூர்ண ஆசீர்வாதமும் எந்நாளும் உங்களுக்கு இருக்குமாக! மங்களமுண்டாகட்டும்!

*( 1ஆவது காட்சி முடிவு )*



## 2ஆவது காட்சி

அந்தப்புரம். ஸீதை தன் தோழியரோடு ஸ்ரீராமன் வரவை எதிர்பார்த்து நிற்கிறாள்.

நாடக மாந்தர்கள்: ஸீதை, கலாவதி, தோழி, ராமர், தோழியர்.

( பாட்டு ) தர்க்கம்

**பல்லவி**

ஸீதை : பாங்கி கலாவதி கேளடி - என்
பர்த்தாவைக் காணோமிந்நாளடி ( பா )

**அனுபல்லவி**

ஏங்கி ஏங்கி மனம் வாடுது
எங்கு சென்றாரென்று தேடுது
என் கண்ணவரையே நாடுது ( பா )

**சரணம்**

நித்தமிதற்கு முன்பாகயிங்கு வந்து
நேச சல்லாப மொழிந்து முத்தந் தந்து
சித்த மகிழ்ச்சி யுண்டாகும் தயாசிந்து
சேவை கிடைக்காமல் வாடினேன் நான்
நொந்து ( பா )

(தோழியர்) கலாவதி : வந்து சேருவாரிதோ அம்மா
வாடி மெலிவதேனோ சும்மா
சிந்தை வருந்துதல் பாவமே
செப்பினாலும் பரிதாபமே
சேயிழையுண்டோ ஓர் லாபமே (வந்து)

கலாவதி : சந்தத முன்னை மறந்து மிருப்பாரோ
தனித் திருந்தால் நேருந்துக்கம் பொறுப்பாரோ
மந்தமாருதம் புகுந்தால் சகிப்பாரோ
மாதே ஒருக் கணந்தான் நிர்வகிப்பாரோ (வந்து)

ஸீதை (வ-ம்) : சகீ, கலாவதி! நாயகர் ஒவ்வொரு நாளும் இதற்கு முன் இங்கு வந்து சேருவாரே. இன்று மாலை ஐந்து நாழிகையாகியும் ஏன் வரவில்லை? அவரைக் காணாது அரை க்ஷணமிருப்பேனாகில் பாவி கண்களும், மனமும் மிக வேதனையல்லவோ அனுபவிக்கின்றன. சதிபதிகள் மற்ற வேளை பிரிந்திருந்தாலும் மாலை வேளையில் எவ்விதம் பிரிந்து தனித்திருக்கக் கூடும்? காதலென்பது கூட்டுறவாகிய நேசமன்றோ? அந்தக் கூட்டுறவு நேராது போமாகில், அது காம வியாதி, என்றல்லவோ பெயரடைகிறது? அவ்விதத்தால் உண்டாகும் காம வியாதியை அதன் மெல்லியதாகிய அற்பத்தை நோக்கி, சுருதி யுக்தி அனுபவமுடைய அறிவினையறிந்த வித்வசிரேஷ்டர்கள், ஒரு புஷ்ப மாகவன்றோ உவமித்து வர்ணித்திருக்கிறார்கள். மற்றும் நோய்களுக்கும், இந்தக் காம நோய்க்குமுள்ள தாரதம்ய வித்யாசமென்னவென்றால், "காலையரும்பிப் பகலெல்லாம் போதாகி மாலை மலருமிந்நோய்". அதாவது, சூரியோதயத்தில் அரும்புவிட்டு, பகற்காலமெல்லாம், போதாகிய இதழ் பெருத்து மாலைக் காலத்தில் புஷ்பிக்கும் ஒரு மலருக்குச் சமம் இக்காம நோய் என்பதாம். ஆனதால், இம்மாலைக் காலத்தில் காம வியாதியை நான் எவ்விதம் சகிப்பேன்? அடி உயிர்ப்பாங்கி! நீயாவது போய் அவரைப் பார்த்து வரமாட்டாயா? அவர் என்னைத் தேடிப் புறப்பட்டு விட்டாரோ, வந்து கொண்டிருக்கிறாரோ.. வருகிறாரோ, சமாச்சாரம் தெரியவில்லையே. இதற்கென்னடி செய்வேன்? குயில் கூவுவதும், கடல் ஒலிப்பதும், காதுகளுக்கு வேதனையாக யிருக்கின்றன. சீதளச் சந்திரனும், அக்கினிபோல் கோபித்துத் தகிக்கிறான். மிருதுவாகிய தென்றற் காற்றும் புலி பாய்வதுபோல் மோதி வருத்துகிறது. இனி எப்படிச் சகிப்பேன்? பாங்கி இதற்கொரு ஆறுதலாகிய அமிர்தமில்லையா?

தோழி : அம்மா! கவலைப்படாதீர்கள்! தங்கள் நாயகர் வரும் நேரமாயிற்று. இதோ வந்துவிடுவார். தங்களைப் பிரிந்து இருக்க அவர் மனம் சம்மதிக்குமா? நான் வேண்டுமானால் இதோ சென்று பார்த்து வருகிறேன். தாங்கள் சற்றுப் பொறுமையா யிருங்கள்!

( ஸ்ரீராமர் வருகிறார். தோழி எதிரே போய் அழைத்து வருகிறாள் )

ஸீதை : ( ஏக்கமுடன் ) நாதா! நமஸ்கரிக்கிறேன்.

ராமர் : மங்களமுண்டாகட்டும்! ஜானகி! என்ன முகவாட்டம்?

ஸீதை : நாதா! ஒன்றுமில்லை. இத்தனை நாழிகை ஆகியும் தாங்கள் வராததால் என் மனம் மிகுந்த வருத்தமடைந்தது. இப்போது தான் சற்று தேறுதலடைந்தது. ஏன் இவ்வளவு தாமதம்?

ராமர் : ராஜ்ய விவகாரங்களைக் கவனித்துக் கொண்டிருந்ததில், சற்று தாமத மேற்பட்டது. வேறொன்று மில்லை. அதிருக்கட்டும், வைதேகி! என்ன ஒரு வாறாக இருக்கிறாய்? என்னிடம் சொல்லக்கூடாதா? உனக்கு என்ன வேண்டும் சொல் கேட்போம்? கற்பவதியாயிருக்கக் கூடியவர்கள், ஏதாவது ஒரு பொருளை ( இச்சித்தால் ) ஆஸரயித்தால் அது ஞாயமானவகையானால், தடையில்லாமல் அதைப் பூர்த்தி செய்ய வேண்டியது மற்றவர்கள் கடமை யன்றோ? அந்த முறையில் என்னிடம் சொன்னால் உடனே உன் இஷ்டத்தைப் பூர்த்தி செய்கிறேன். என்ன வேண்டும்? சொல்!

ஸீதை : நாதா! வேறொன்றுமில்லை. முன்னம் நாம் வன சஞ்சாரம் செய்திருந்த நாளில் கண்ணுற்ற காட்சிகளைப் பற்றி நினைத்துக் கொண்டிருந்தேன். அதாவது, ஆங்காங்குக் கண்ட சோலைகளின் வியப்பும், ஆரண்யப் பிரதேசங்களின் அழகும், மலைகளிலிருந்து விழும் அருவிகளின் வனப்பும், அங்கு ரிஷி ஆஸ்ரமங்களின் அமைப்பும், முனிவர்களின் யாகாதி நற்கருமங்களுக்கு வேண்டிய சாமக் கிரியைகளை மிருகங்கள் சேகரித்துக் கொடுக்கும் அற்புதமும் மீண்டும் ஒரு முறை சென்று காண வேண்டுமென்னும் ஆவலதிகரித்தது. ஆகையால், இக்கோரிக்கையை நிறைவேற்றித் தர வேண்டிக் கொள்கிறேன்.

ராமர் : அப்படியே ஆகட்டும்! கூடிய சீக்கிரம் சந்தர்ப்பம் ஏற்படும். அழைத்துக் கொண்டு போகிறேன். கவலைப்படாதே!

( பாட்டு தர்க்கம் )

ராமர் : சகியே ஜானகி சல்லாப நாயகி
சந்தோஷமாக மஞ்சமேலன்பாகவே சுகி ( சகி )

ஸீதை : தடையுமேது நாதகீதமோடு பாடுவோம்.
சாவகாசமாக ஊசலேறியாடுவோம்

ராமர் : முகிலார் கேசியே முத்தாடும் நேசியே
முப்பாரிலுள்ளவர் யாரும் புகழ்வதாகுஞ்சந்தோஷியே

ஸீதை : முதல்வரான நீவீர் ஓதலான யாவையுமே
முக்கால மேனுந் தப்பாமலே செய்தல்
பாவை தேவையுமே ( சகி )
( ஊஞ்சலாடுகிறார்கள் )

தோழியர் : ( ஆட்டுகிறார்கள் பாடியவாறு ).

( பாட்டு )

வஜ்ஜிரத்தால் தூண் நிறுத்தி
மரகதத்தால் சட்டம் பூட்டி
உச்சிதமாய் முத்து வடம்
கட்டியதாம் ஊஞ்சலிது.
ஆணிப் பொன்னால் பலகை
அருகிலெல்லாம் நீலமணி
மாணிக்கங்களைப் பதித்து
வனப் பியற்றும் ஊஞ்சலிது
பாயசத்தில் நாதன் வந்தான்
பாருயவே ஸீதை வந்தாள்
காயமிவர் யாக ஜென்மம்
களிப்படையும் ஊஞ்சலிது
தாசரதி நாயகனும்
ஜானகியாம் ஸீதை மாதும்
நேசமொடு ஆடுதற்கு
நிருமித்த ஊஞ்சலிது
ஞாய சத்யர் புத்ர ராமா
ஞானி புத்திரி ஸீதை மாதே
மாயனொடு லக்ஷிமி போல்
மகிழுடனே ஆடீரூஞ்சல்

( 2ஆவது காட்சி முடிகிறது )


3ஆவது காட்சி

ஆற்றங்கரை: ( வண்ணானும் வண்ணாத்தியும் ஆடை வெளுக்கிறார்கள் )

நாடகமாந்தர்கள்: வண்ணான், வண்ணாத்தி.

வண்ணான் : ஏண்டி சேலை வேட்டியெல்லாம் வெளுப்போமா? என்னோடெ பந்தயம் போடுறியா?

வண்ணாத்தி : பார்ப்போமா? ஒங்கை வரிசே நம்ம கிட்ட செண்ணுக்காது.

பாட்டு ( வ-ன், வ-தி, தர்க்கம் )

வண்ணான் : கும்பகோணம் பட்டுச் சேலை
கும்மும்போது சாயம்
கொஞ்சமும் போகாதபடி
கொள்ளுதலுபாயம்
ஆ.சோ - ஆ.சோ - ஆ.சோ

வண்ணாத்தி : தாம்பூலக் கறையைப் போக்க
தக்க கஞ்சி போட்டு
தட்டிக் கட்டி நீ வெளுத்துன்
கைவரிசை காட்டு.
ஆ.சோ - ஆ.சோ - ஆ.சோ.

வண்ணான் : முத்துக்கட்டி விழிமருட்டி
மோகனாங்கிச் சேலை
முற்றும் நான் வெளுத்தேன்
பாரடி என் கைவேலை.

வண்ணாத்தி : சித்ரப் புள்ளித் தாட்டுப் பத்ரி
சேலையெல்லாம் நானே
சீக்கிரம் வெளுத்தேன் பாரென்
கைத்திறமை தானே.

வண்ணான் : அற்புதப் பூங்கொடி போட்ட
அச்சடிக் கண்டாங்கி
அத்தனையும் வெள்ளாவியில்
வைப்பாய் நீகை வாங்கி

வண்ணாத்தி : பற்பல தேசங்கள் பர்மா
ரெங்கோன் சைனாப் பட்டு
பச்சைப்பயற்றால் அழுக்கெடுத்து
மூட்டை கட்டு.

வண்ணான் : கோட்டாற்றில் நெய் நேரியல்
கொல்ல மலக்குமுண்டு - அடி
கோதையே உவர் நனைக்க
வா எடுத்துக் கொண்டு.

வண்ணாத்தி : தேட்டமாம் திருவாங்கூரு
சித்ர ஜரிகை ஆடை
திவ்யமா மிதற்கு நிகராவ
தெவ்வூராடை

வேறு தர்க்கப் பாட்டு

வண்ணான் : இழைக் காயிரம் பொன்
கொடுக்கலாகும் விலை
இந்த ஜரிகை வஸ்த்திரம்
இதற்கு எவ்விதம்
அழுக்குப் போகும் நிலை
அடி - இந்திர வர்ணமிலங்கிய சுந்தரம்
இந்த அலங்கிருதமெங்கினு முண்டோடி

வண்ணாத்தி : கதம்பக் குங்குமக் கறையைப் போக்குதற்கு
இக்கால மிகவும்
கருதி யோசனை புரிவதுமெதற்கு ( க )
இங்கு - காணுந்தயிலாரியாலும்
கடலைமாவாலும் கறை போகுமேனிந்த
`யோசனை

வண்ணான் : வேர்வை பொழிந்தய்யோ களைக்குதடி
ஆடை வெளுத்து வெளுத்து
மேனிமெலிந்து பசிமிகுத்துதடி
அடி - மிஞ்சிய என்துயர்
நெஞ்சிலகன்றிட
வஞ்சியே நீ சென்று
கஞ்சி கொண்டுவாடி ( வேர் )

வண்ணாத்தி : நேரத்தோடுநாம் வீடு போவோமென்று
நீநேற்றுச் சொன்னதை
நினைத்துக் கஞ்சி கொண்டு வரவில்லை யின்று
இங்கு நின்றிடு கொஞ்ச
மிணங்கி விரைந்தங்கு
சென்று நான் கஞ்சியை
இங்கே கொண்டு வாரேன்.

வண்ணான் : ஐயோ! அப்பா! ஸ்.. என்னாலே பொறுக்க முடியலே.. இனிமே என்னாலே தொவைக்க

முடியாது. வயிறு பசிக்குது. ரொம்ப களைப்பாயிருக்குதே..

வண்ணாத்தி : நேத்திக்கு நீ என்னா சொன்னே? இண்ணைக்கி நேரத்தோடே வீட்டுக்குப் போயிடலாம்னு சொன்னியா இல்லியா? அதனாலேதான் கஞ்சி எடுத்துக்கிட்டு வரலே நான். நீ இங்கேயே கொஞ்சம் பொறுத்துக்கிட்டு இரு. இதோ நான் போயி கஞ்சி எடுத்துக்கிட்டு வாரேன். ( போகிறாள் )

( 3ஆவது காட்சி முடிகிறது )



4ஆவது காட்சி

<u>வீதி</u>

நாடக மாந்தர்கள்: அகடவிகட சாமர்த்திய அதிகாரன், வண்ணாத்தி.

( அகட விகட சாமர்த்திய அதிகாரன் பிரவேசம் )

( பாட்டு )

<u>பல்லவி</u>

அகட : சாமார்த்தியன் என்போல் யாருண்டு இவ்வுலகில் ( சா )

<u>அனுபல்லவி</u>

ஏமாற்றிப் பொருள்களை எடுத்தபகரிக்க
இடக்குமொழிகள் பல தொடுத்து விஸ்தரிக்
காமாட்டிப் பயல்களும் கதை கேட்டுச் சிரிக்கக்
கண்ட சந்து பொந்துகள் எங்கும் சஞ்சரிக்க ( சா )
அறுத்த முண்டைகள் கையில் அகப்பட்ட சொத்து
ஆனாரூனாக் கடையில் போட்டாலும் விபத்து
மறுத்திடாமல் நீர் என்னிடம் கொடுத்து
வைத்தால் நலமெனவும் வாங்குவேனுரைத்து ( சா )

வசனம் : நானோ அகட விகட சாமர்த்திய அதிகாரன். எண்ணிய எண்ணத்தை எளிதில் முடிக்கும் இயல்புள்ளவன். வன் நெஞ்சரையும், நம்பும்படி வசீகரமொழி பாஷிக்கும் வாக்சாலகன். தந்தைக்கு மகனாகாமலும், மகனுக்குத் தந்தையாகாமலும், புருஷனுக்குப் பெண்டாட்டியாகாமலும் பெண்டாட்டிக்குப் புருஷனாகாமலும், மாமிக்கு

மருமகளாகாமலும், மருமகளுக்கு மாமியாகாமலும், அண்ணனுக்குத் தம்பியாகாமலும், தம்பிக்கு அண்ணனாகாமலும், சண்டை மூட்டி வைத்து, நினைத்ததைச் செய்து முடிக்கும் ஆற்றல் உடையவன். அதனால் எல்லோரும் என்னைப் பூலோக நாரதனென்றே சொல்லுவார்கள். இப்படிப்பட்ட என்னை இந்த வண்ணாரச் சுப்பன் பயல், கொஞ்சமாவது மதிப்பதில்லை. என்னுடைய ஆடைகளையெல்லாம் வெளுத்து வாடகைக்குக் கொடுத்து விட்டானோ என்னவோ, நான் போய்க் கேட்கும் போதெல்லாம், நாளை வாருங்கள், காலை வாருங்கள், மாலை வாருங்கள், அப்புறம் வாருங்கள், இப்புறம் வாருங்கள், ஊரிலுள்ள குப்பைகளை வாருங்களென்று கிராமாதிகாரிகள் தோட்டிப் பயல்களுக்கு, உத்தரவிடுவதுபோல் எனக்குச் சாக்குப்போக்குகள் சொல்லி வருகிறான். “கொட்டினால் தேள் கொட்டாவிட்டால் பிள்ளைப் பூச்சி” என்பது சகஜந்தானே. இப்போதே என் சுயரூபத்தைக் காண்பிக்கிறேன். நல்லது, இவன் மனைவியாகிய மாடத்திக்கும் இவனுக்கும் ஒரு சண்டை மூட்டி வேடிக்கை பார்க்கலாம். ஆ! (தூர வண்ணாத்தி வருவதைப் பார்த்து) அதோ! கஞ்சி கொண்டு வருகிறாள். இதுதான் நல்ல சமயம். இப்போதே நமது வாக்குச் சாதுர்ய தந்த்ரோபாயத்தைப் பிரயோகிப்போம்.

பாட்டு

வண்ணாத்தி : கஞ்சி கொண்டு போறேன் - இவ்வேளை
கஞ்சி கொண்டு போறேன்
கொஞ்சிக் குலாவிடும் என் புருஷனுக்கு (க)
சம்பா நெல்லுக்குறி - அதிலே
தவிடு உமி நீக்கிக்
கும்பலாகக் கொழித்துக் கழுவி
கொதிக்க அடுப்பில் வைத்து
உப்பு மிளகாய் வைத்து, நல்லுறப்
பாய்த் துவையலரைத்துப்
பக்குவமாகச் செய்து - கொண்டெடுத்துப்
போறேன் வழி நடந்து (க)

அகட : ஏ. பிள்ளே! நீ எங்கே போறே?

வண்ணாத்தி : ஏன் ஐயா கேட்கறீங்க? எம் புருஷனுக்குக் கஞ்சி எடுத்துக்கிட்டுப் போறேன்.

அகட : ஒம் புருஷன் என்ன அவ்வளவு நல்லவனா? அவன் களைச்சுப் போயிட்டாண்ணு கஞ்சி எடுத்துக்கிட்டுப் போறே?

வண்ணாத்தி : அதென்னய்யா அப்படிச் சொல்றீங்க? எம் புருஷன் ரொம்ப நல்லவனாச்சே! மத்தவங்களெப் போலே ஒரு வம்புதும்புக்குப் போறவனா? குடிச்சிட்டு வந்து பொண்டாட்டியைப் போட்டு அடி அடிண்ணு அடிக்கிறானுங்களே, அந்த மாதிரி அவன் கள்ளு கிள்ளு குடிக்கிறவனா? என்னெ ஒருநாளும் அடிக்கவே மாட்டானே. அவனெப்போலே நல்லவனில்லேண்ணு எங்க வண்ணாரப் பேட்டையிலே நல்ல பேரெடுத்து வர்றானே. என் ராஜா! தங்கக் கட்டியாச்சே.

அகட : ஏ. பிள்ளே! போதும் போதும்! சரிதான் நீ இப்படியிருக்கிறதுனாலேதான்அவன் அப்படியிருக்கிறான். அடே சுப்பா! நீ நல்ல அதிர்ஷ்டசாலிதாண்டா. பேஷ்! நடத்துடா உன் காரியத்தை!

வண்ணாத்தி : என்ன சாமியிது? என்னமோ மொண மொணண்ணு, நீங்களே பேசிக்கிட்டு இருக்கிறிங்க? ஒகோ! உங்க துணியெக் கொடுக்கலேண்ணு கோவிச்சுக்கிறிங்களா? இல்லே சாமி. உங்க துணியெல்லாம் வெளுத்தாயிட்டது. அது அந்த மூப்பனார் வீட்டுத் துணியோடெ தட்டுக் கெட்டுப் பூட்டுது. அவங்க இப்போ ஊர்லே இல்லே. வந்தவுடனே உங்க துணியெ வாங்கிட்டு வந்து கொடுக்கறோம். வருத்தப் பட்டுக்கிறாதீங்க. உங்க துணி எங்கேயும் போயிடாது.

அகட : ச்சே! அதல்ல புள்ளே! ஓம் புருஷனுக்கு நீ மூத்த தாரமா ரெண்டாந்தாரமாண்ணு கேட்டேன்.

வண்ணாத்தி : என்னாய்யா இப்படிக் கேக்கறிங்க? மொதத் தாரமா.. ரெண்டாந்தாரமாண்ணா, அவனுக்கு ரெண்டு பொண்டாட்டிண்ணுல்ல அர்த்தமாவுது! அப்படி ஒன்னுமில்லையே. நீங்க ஆள் தெரியாமே சொல்றாப்போலேயிருக்குது. நான் ஒருத்தி தானே அவனுக்குப் பொண்டாட்டி?

அகட : அப்படியானா, அவ யாரு? அவள் பக்கத்திலே உக்காந்துக்கிட்டு வெத்திலை மடிச்சுக் கொடுத்துக் கிட்டிருந்தாளே?

வண்ணாத்தி : என்னா! - வெத்திலே - மடிச்சி - கொடுத்தாளா? யாரவ? சொல்லுங்கய்யா சீக்கிரம்! என் வயிறு எரியுது.

அகட : ஓகோ! உனக்குத் தெரியாதா? சரிதான் சரிதான். அதையேன் கேக்கிறே.. ஒருத்தர் மடிமேலே ஒருத்தர் சாஞ்சிக் கிட்டு முத்தங்கொடுத்துக்கிட்டு வெற்றிலை போட்டுக்கிட்டு எத்தனை ராஜா.. எத்தனை சாமி! எத்தனை கண்ணே! எத்தனை பொன்னே! அடாடாடா! சொல்ல முடியாது. என்னாத்துக்குக் கேக்கறே! அந்தத் துறையிலே அவங்க இஷ்டந்தான். ஒரு செவத்தக் குட்டி.. குள்ளமா.. நல்ல கட்டான உடம்பு பிள்ளே.. உனக்குத் தெரியாதா அவளே? அடேடே அவங்க சந்தோஷம் இன்னமும் தீர்ந்திருக்காது. நீ வேணுமானா.. போய்த்தான் பாரேன்.

வண்ணாத்தி : ஐயையோ! அப்படியா சமாச்சாரம்? இதோ போறேன். கட்டையிலே போறவனுக்குக் கஞ்சி வேறயா.. அவன் தலையிலே போட்டு ஒடைக்க இதோ போறேன்.

பாட்டு

விடுவேனோ எளிதிலே
விளக்கு மாற்றினால் இழுத்தடிக்குறேன் ( வி )
வீட்டில் ஒருத்தி நான் காத்துமிருக்கையில்
வேறே ஒருத்தி எதற்குத் தினத்தினில்
விட்டு விட்டால் மட்டிப்பயல்
மேலு மேலு மிப்படி
வீணப வாதங்கள் செய்தால்
நான் சுகிப்பதெப்படி
வேதையாகு - தாத - லாலே ( வி )
( விரைந்து கோபமாய்ப் போகிறாள் )

( 4ஆவது காட்சி முடிகிறது )



## 5ஆவது காட்சி

நாடக மாந்தர்கள்: அகடவிகட சாமர்த்தியன், வண்ணான், வண்ணாத்தி.

ஆற்றங்கரை - ( வண்ணான் களைத்து உட்கார்ந்திருக்கிறான். அகட விகடன் வருகிறான் ).

அகட : டே! சுப்பா! என்னடா செய்யறே?

வண்ணான் : வாங்க சாமி! கும்புடுறேனுங்க! சும்மாதான் இருக்கேன். வாங்க

அகட : வந்துமாச்சு. காரியங்கண்டுமாச்சு. என்னடா! நீ செய்றது ஒண்ணும் நல்லா இல்லே. எத்தனை நாளாகிறது? ஏண்டா துணிகளைத் தரமாட்டேங்கிறே?

வண்ணான் : சாமி ஆண்டவனே! கோவிச்சிக்காதிங்க! உங்க உருப்படி அடுத்த வீட்டு மூப்பனார் உருப்படியோடெ தட்டுக் கெட்டுப் போயிட்டது. அவங்க வீட்டெச் சாத்திக்கிட்டு ஊருக்குப் போயிருக்காங்க. அவங்க வீட்டுக்கு வந்துாடட்டும்; வாங்கிக் கொடுத்திடறேன். கோவிச்சுக்காதீங்க. ஆமாஞ்சாமி! வந்துமாச்சு.. காரியங்கண்டு மாச்சுண்ணு சொன்னிங்களே, அதென்னா சாமி?

அகட : அது கெடக்கட்டும். வீட்டுக்கு வீடு வாசற்படி உண்டென்பது சகஜந்தானே. நீ ஒரு வேளை வீட்டில் இருக்கிறாயாக்கும் என்கிறதாக அங்கே போனேன். அங்கே வேறொருத்தன் இருந்தான். அவன் யாரடா அவன்? ஒம் பொண்டாட்டியோடெ பேசிக்கிட்டிருந்தானே அந்தப் பயல்?

வண்ணான் : ( திடுக்கிட்டு ) யாரு சாமி அது எம் பொஞ்சாதியோடெ பேசிக்கிட்டிருந்தது?

அகட : அவன்தாண்டா, குதிரைக் குடுமி வைச்சுக்கிட்டிருக் கானே. அவன் முன்பல் ரெண்டு நீண்டிருக்குண்டா. அடே இடது காதிலே கோரை விழுந்திருக்குண்டா அந்தச் செவத்தப் பயல் உனக்கு என்ன வேணும்?

வண்ணான் : அடடே! அவனா? அவன் என் பொஞ்சாதிக்கி அத்தை மவன்.

அகட : அப்போ.... சரிதான், முறையும் ஒத்துத்தான் இருக்கு.

வண்ணான் : அவன் என்ன செய்தான்?

அகட : அதுதான். "கம்பங்கதிரைக்கண்டா கை சும்மாயிருக்காது மாமன் மகளைக் கண்டா வாய் சும்மாயிருக்காது" என்று சொல்கிறார்களே. அது சரியாய்ப் போச்சுது. சரி சரி; வேலையைப் பாரு!

வண்ணான் : என்ன சாமி சமாச்சாரத்தைச் சொல்ல மாட்டேங்கிறிங்களே. இந்த மாதிரி பேசினா நான் என்ன செய்யிறது சாமி? ஒண்ணுந் தெரியலியே, சமாச்சாரத்தை வௌங்கச் சொல்லுங்க. என் சம்சாரத்தை என்ன செய்தான்?

அகட : அந்த அநியாயத்தை ஏங்கேக்கறே? விடு கழுதையை!

வண்ணான் : ஏஞ்சாமி! விடு கழுதையை-யிண்ணா.. நான் வண்ணாரப் பயங்கிறதெக் குறிச்சுச் சொல்றாப் போலெயிருக்கே.. இப்படியெல்லாம் சொல்ல வாணாஞ்சாமி, தெரியுமா.. அப்புறம் எனக்குக் கோவம் வரும்.

அகட : அடடே! உனக்குக் கோபம் வேறையா வருது? பேஷ்! பேஷ்!. வீட்டிலே பெண்டாட்டியை அடக்க வகையில்லாதவன், வெளியிலே வீராப்புப் பேசுறதெ விடமாட்டாங்கிறாங்களே அது சரியாப்போச்சு.

வண்ணான் : யார் சாமி? நானா பொண்டாட்டியை அடக்க முடியாதவன்? இப்படிப் பாருங்க சாமி! அப்படியெல்லாம் என்னெ நினைக்காதீங்க.. சொல்லி வைக்கிறேன். என்ன செய்தா அவ? சொல்லுங்க!

அகட : அதையேன் கேக்கறே? அங்கே போனது எனக்கு ரொம்ப மானக் கேடா யிருக்கு. பட்டப்பகல்லே.. படெலச் சாத்திக்கிட்டு, ஒருவர் பக்கத்திலே ஒருவர் படுத்துக்கிட்டுருந்ததனாலே தான் என்ன கெட்டுப் போச்சு? ஒருத்தர் வாயிலே இன்னொருத்தர் வெத்திலை மடிச்சுக் கொடுத்ததினாலேதான் என்ன கெட்டுப் போச்சு? ஒருத்தருக்கொருத்தர் முத்தங் கொடுத்ததினாலே என்ன கெட்டுப் போச்சு? எத்தனை துரையே.. எத்தனை சாமி.. எத்தனை கண்ணே. எத்தனை கிளியே.. அடடா.. சகிக்க முடியலே. அப்படி எட்டிப் பார்த்தேன். பேசாமெ கண்ணை இறுக மூடிக்கிட்டு வந்துட்டேன். இப்படிப்பட்ட பெண்டாட்டி வச்சுக்கிட்டு உனக்கென்னடா வீராப்பு?

வண்ணான் : ஐயையோ! நிசமாவா சாமி? அடிசண்டாளி! இதுக்குத்தான் போயிட்டாளா சாமி? அவளைப் புடிச்சு செருப்பாலே அடிச்சி அவ உசிரெ வாங்காப் போனா, ஏம்பேரு சுப்பனில்லே சாமி, பாருங்க வேடிக்கையை!

பாட்டு

விடுவேனோ எளிதிலே
விரட்டியடித்து உதைத்து ஓட்டுறேன் (வி)
வீட்டில் ஒருத்தன் நான்
காத்து மிருக்கையில்
வேறே ஒருத்தன் எதற்குத் தினத்தினில்
விட்டுவிட்டாலச் சிறுக்கி
மேலுமேலுமிப்படி
வீணபவாதங்கள் செய்தால்
நான் சுகிப்பதெப்படி
வேதை - யாகு - தாத லாலே (வி)

(வண்ணாத்தி வருகிறாள்)

வண்ணான் : அடி சண்டாளி. வந்தையா.. வா.. வா..!! (தேவடிச் சிறுக்கி!) தட்டுவாணிச் சிறுக்கி! சரியா வந்து மாட்டிக்கிட்டே.

வண்ணாத்தி : வாடா முட்டுக்கட்டை... வெளுக்குமாத்தாலே அடிக்கிறேன். இண்ணைக்கு எங்கிட்டே சரியா வந்து சிக்கிக்கிட்டே.

(வேறு தர்க்கப் பாட்டு)

வண்ணான் : என்னை விட்டு இன்னொருத்தன்
இஷ்டமான தேனோ கூடி
இந்த விதமாகு மோடி
எளிதிலே விடுவேனோடி (எ)

வண்ணாத்தி : உன்னை விட்டு நானொருத்த
னோடு கூடவில்லை நீயே என்னை விட்டு
இன்னொருத்தி இச்சையானாய் எச்சி நாயே.

வண்ணான் : எச்சி நாய் நானல்ல நீயே

வண்ணாத்தி : இல்லை இல்லை நீதான் நாயே

வண்ணான் : ..ஈனமானாயே

வண்ணாத்தி : நீ மானம் போனாயே

வண்ணான் : எத்தனை சொன்னாலுமுன்னை உத்தமி என்றெண்ணுவேனோ (எ)

வண்ணாத்தி : குதிரை தூக்கிப் போட்டதன்றி
குழி பறித்த கதையைப் போல
பழி என்மீதிலே சுமத்தப் பார்க்கிறாய் சமர்த்தினாலே

வண்ணான் : பசப்புறாய் பத்தினி போலே

வண்ணாத்தி : அசைக்க முடியாதுன்னாலே

வண்ணான் : பாவமிதாலே

வண்ணாத்தி : வரும் கோவம் மென்மேலே

வண்ணான் : இங்கே பட்டபாடும் கெட்ட கேடும் பாரறியுமே முன்னாலே (என்)

வண்ணாத்தி : ஓகோ, கூத்தியார் மெச்சிக்கப் பேசறையா? தெரியும்டா எனக்கு இப்படி எம்மேலே பழி சுமத்தினா.. விட்டு விடுவேன்னு நெனச்சிக் கிட்டியா? வெளக்க மாத்தாலே சாத்துவேன்.

(வேறு தர்க்கப் பாட்டு)

வண்ணான் : எந்தப் பயலைக் கூடி
இதுவரையுஞ் சுகித்திருந்தாய்
அந்தப் பயலையும் உன்னையும்
அடித்துதைத்து விரட்டுறேண்டி
ஆரென்றெனை நினைத்தாய்
அறிவேண்டி நானுனைத்தான்

வண்ணாத்தி : அச்சமும் சற்றிலை, நிச்சயம் இத்தினம்
அக்ரமக் காரா சொல்லடா.

வண்ணான் : எதிர்த்தெதிர்த்துப் பேசுகிறாய்
ஏற்றபடி ஏசுகிறாய்
உதிர்த்திடுவேன் உந்தன் பல்லை
ஓடிப்போடி முன் நிற்காதே
உன்சேதி வெளிச்சமாச்சு
ஊரறிய மானம் போச்சு
உற்றவர், சுற்றவர், பெற்றவர், மற்றவர்,
ஒருவருமே மதிக்க மாட்டார். (எ)

வண்ணாத்தி : கொஞ்சிக் கொஞ்சி நீயவளைக்
கூடினதும் நானறிவேன்.
ரஞ்சிதத் தாம்பூல முண்டு
நடத்தினதெல்லாந் தெரிவேன்.
நாகரீகம் மிஞ்சலாச்சோ
நாயே உனக்கின்னும் பேச்சோ
நாட்டவர், கேட்டிட, காட்டுவேன், வாட்டுவேன்
நாளுமுன்னைப் பழிக்கச் செய்வேன்.

( இருவரும் சண்டை அடிதடி முடிந்து வண்ணாத்தி அழுது ஒப்பாரியுடன் தாய்வீடு போகிறாள் )

வண்ணான் : போடிபோ.. இனிமே இந்தப் பக்கம் எட்டிப் பாக்காதே!

( 5ஆவது காட்சி முடிகிறது )




ஸ்ரீராமர் நகர் சோதனை வருகிறார்.
இரவு நேரம்: வண்ணாரத் தெரு
நாடக மாந்தர்கள்: ராமர், கிழவி, வண்ணான்

( பாட்டு )

பல்லவி

ராமர் : நகர் சோதனைக்கு நானே வந்தேன் இங்கு
நாடி யாருமறியாமல் ராவில் மாறுவேடமுடன்
( ந )

அநுபல்லவி

இகபர சவுக்கியம் யாருமடைந்து
இருக்கின்றாரா மகிழ்வாய் என்பது தெரிந்து
பகரும் நன்மை தீமையின்
பண்பையுமுணர்ந்து
பார்த்துப் போக வெண்ணினேன்
தெருவெங்குந்திரிந்து ( நகர் )

வசனம் : காவலர்களை அனுப்பினால் குடிகளின் சௌக்யக் குறைவை நம்மிடம் தெளிவாகச் சொல்லத் தயங்குகிறார்களென்றே நான் இந்நேரத்தில் இவ் வித மாறுவேடத்துடன் நகர் சோதனைக்கு வந்தேன். என்னையாரும் தெரிந்து கொள்ள முடியாதபடி கிராமத் தோட்டியைப் போல் நகரைச் சுற்றி வரலானேன். ராஜ வீதியைக் கடந்து பட்டணமெங்கும் சுற்றிப்பார்த்தேன். யாதொரு குறைவுமில்லாது யாவரும் க்ஷேமமாகவே இருப்ப தாகத் தெரிகிறது. எங்கும் நிசப்தமாயிருக்கின்றது. இப்போது மிகவும் ஏழ்மையானவர்கள் வசிக்கும்படியான இக்குடிசைகளின் பக்கம் சென்று பார்ப்போம். அவர்களின் சுகத்தைத்தான் அரசன்

கவனிக்க வேண்டியது அவஸ்யம். ஆதலால், அவ்விடத்தில் சென்று பார்ப்போம். (ஒரு புறமாகப் போகிறார்) (டர்னிங் ஸீன்)

(வண்ணார சுப்பன் வீடு)

கிழவி : அடேயப்பா! என்னாடா இது? உம் பொண்டாட்டியெ அவ ஆத்தா வூட்டுக்கு வெறட்டீட்டெயே, நாளக்கி உனக்கு யார் கஞ்சி கொண்டாந்து... வெளுத்த துணியெல்லாம் கொண்டு போய்க் கொடுக்கிறது யாரு? அழுக்கு எடுத்து வாரது யாரு? ஏண்டா.. அவளெ அடிச்சி ஒதைச்சு அனுப்பீட்டே?

வண்ணான் : ஏம்மா! உனக்கு வேறே வேலையில்லியோ? பேசாமெக்கெட!

ராமர் : (ஒருபுறம் நின்று உற்றுக் கவனித்து) என்ன இந்நடுநிசி வேளையில் இக்குடிசையில் யாரோ இருவர் உத்தர பிரதி யுத்தர சம்பாஷணைகள் நடத்திக் கொண்டிருக்கிறார்கள். என்னவென்று உற்றுக் கேட்போம்.

கிழவி : அடே! ஏண்டா கெட்டுப் போறே? நான் சொல்றத்தே கேளு! அவளைப் போயி கூட்டிக்கிட்டு வாடா.. சடவா. வார பொண்ணுங்க தாய்வீடு போறதுதான்; புருசன்மாரு போய்க் கூட்டிக்கிட்டு வாரதுதான். இதென்னாடா உனக்குத் தெரியாதா? வெடிஞ்சதும் போயி - அவளெக் கூட்டிக்கிட்டு வா.. என்னா சொல்றே?

வண்ணான் : அடெச்சே! மூதேவி! உன்னெ யாரு கேட்டா.. கெழட்டுச் சவமே! பாதி ராத்திரி வேளையிலே பிசாசு மாதிரி எந்திரிச்சு வந்துக்கிட்டு லொட லொடண்ணு கத்திக்கிட்டிருக்கியா? பேசாமெப் போறியா.. என்னா சொல்றேயிப்போ? கொழுத்துப்போன சிறுக்கி அக்ரமஞ் செய்தூட்டு அவங்காத்தாவூட்டுக்குப் போனாண்ணா அவளெப் போயி, கூட்டிக்கிட்டு வாங்கிறயா? இந்தக் கழுதெ போனா.. ஆயிரங்கழுதெயெ நான் சந்தையிலே கல்யாணம் பண்ணிக்கிறேன். கூரெ மேலே நாலு சோத்தெ விட்டெறிஞ்சா ஆயிரம் காவம் வந்து திண்ணுட்டுப் போவுது. இதுக்காவ.. மானங்கெட்டுப் போயி, அவளெப் போயிக்

கூப்பிடவா? என்னெக்கூட நீ என்னாண்ணு நெனச்சுக்கிட்டே? இந்த ஊரு ராசாமவன் பொஞ்சாதியெ ராவணங்கிற ராட்சதன் கொண்டுகிட்டுப் போயி பத்து மாசம் செறையிலே வச்சிக்கிட்டுயிருந்தானாம். அப்பறம் இவங்கல்லாம் போயி சண்டைபோட்டு அவனைக் கொண்ணூட்டு, பொஞ்சாதியைக் கூட்டிக்கிட்டு வந்து பக்கத்திலே உக்காரவச்சிக்கிட்டானாமே.. அந்த மானங்கெட்ட ராமேண்ணு நெனைச்சிக்கிட்டயா என்னையும்? பேசாதே.. போயிப்படு! இல்லாட்டா உம் முதுகையும் நிமித்திடுவேன் நிமித்தி! ஆமாம்.

கிழவி : அடே! அப்படியெல்லாம் சொல்லாதேடா.. மவாராசாவே.. கடவுளெப் போலடா.. அவரு.. ரொம்ப நல்லவருடா அப்பா..

வண்ணான் : சேச்சே! மூலையிலே கெட! கடவுளாங்கடவுளு.. என்னா கடவுளு?

ராமர் : (மனம் நொந்து) அடடா! என்ன கஷ்ட காலமிது.. இன்று நான் புறப்பட்ட வேளை இப்படிப்பட்டதா? நமது நாட்டில் ஒரு குறைவுமில்லையென்று சந்தோஷப்பட்டதின் பயனாயிது? "உலை வாயை மூடினாலும், ஊர் வாயை மூட முடியாது" என்பது சற்றும் பிசகில்லை. ஆகா! என்ன மதியீனம்.. இதுவரை எனக்குத் தோன்றவில்லையே.. இவனுக்குள்ள அறிவும் நமக்கில்லையே..

(பாட்டு)

ஸ்ரீராமர் : 1. வண்ணானுக்குள்ள மதி எனக்கில்லை
வந்து நேரிற் கேட்டேனானிந்தைச்
சொல்லை (வ)

2. புண்ணாகியே நெஞ்சம் வாடுது எனக்கு
பூமியரசாளும் மேன்மையுமெதற்கு (வ)

3. பத்து மாதமும் அரக்கன் வைத்தானே
சிறையில்
பாவையைச் சேர்த்தல் நிந்தைதான்
லோக முறையில்

4. ஒகோ சிறையிருந்தாள் எனுஞ்
சொலுக்கிரண்டோ
ஊர்வாயை மூடவும் உலை
மூடியுண்டோ (வ)

5. ஐந்து பூதமறியும் அக்கினியறியும்
அவள் மகிமை மற்றாருக்கெவ்விதந்
தெரியும் (வ)

6. என் தேவிபத்தினி என்பதுந் தீர்க்கம்
என்றாலும் பழிச்சொல் நீங்குவதெந்த
மார்க்கம் (வ)

வ - ம் : இனி அரைக்ஷணமும் தாமதிக்கக் கூடாது. ஊரார் தூற்ற உடம்பெடுப்பதா? இப்போதே அரண்மனைக்குப் போய் இதற்குத் தக்க ஏற்பாடுகளைச் செய்ய வேண்டும்.

(போகிறார்)

(6ஆவது காட்சி முடிகிறது)




ஆலோசனை மண்டபம்.

நாடக மாந்தர்கள்: ராமர், கஞ்சுகி, பரதன், சத்ருக்கனன், காவலாளி, லக்ஷ்மணன்

தனிமை (பாட்டு)

பல்லவி

ஸ்ரீராமர் : சகிக்கலாமோ.. இந்தத் துன்பம் (ச)

அநுபல்லவி

சுகிக்கும் நாளிலே அன்பு
சுந்தரி ஸீதை தன்மேல்
சொல்லொண்ணாப் பழிவந்து
சூழ்ந்த விதத்தை என்னால் (சகி)
நல்ல சூரியகுல நன்மையாவுங் கெடுத்தேன்
நாட்டிலுள்ளோர்களெல்லாம் நகைக்க
உடலெடுத்தேன் (ச)
குற்றமில்லாத பேதை கொஞ்சுங்கிளியாள் ஸீதை
குணமணியாளை நீக்க மனதிலாகுதே வேதை (ச)

வ - ம் : இனிமேலும் ஜானகியை வீட்டில் வைத்திருக்கலாகாது. இப்போதே காட்டிற்கு அனுப்பி விடுகிறேன். ஐயோ, பேதைப் பெண். மகா உத்தமி. நற்குண சிகாமணி. ஒண்டியாகக் காட்டில் எப்படி

வசிப்பாள்? அதிலும் பூரண கற்பிணி. துஷ்ட மிருகங்கள் சஞ்சரிக்கும் வனப் பிரதேசத்தில் தனியே எப்படி ஜீவித்திருப்பாள்? ஐயோ! இப்படிப் பார்த்தால் உருக்கம். அப்படிப் பார்த்தால், நிந்தை. ஒன்றைவிட்டு ஒன்றைச் செய்ய முடியாத நிலையல்லவோ ஏற்படுகிறது. ஒரு நாள் விளக்கில் வீழ்ந்து மடிந்த விட்டில் பூச்சி ஒன்றைக் கண்டு, அழுது அழுது அதே கவலையாய் மூன்று நாள் அன்ன ஆகாரமில்லாமல் வருந்திக் கொண்டிருந்தாளே.. அப்படிப்பட்ட உத்தம குண சத்யஸ்வரூபியை எப்படிக் காட்டிற்கனுப்ப என் மனம் இசையும்? அந்தோ பரிதாபம்; கஷ்டம் - கஷ்டம்.. ஆஹா! என்ன மதியீனம்! என் தீர்மானங்களெல்லாம் எங்கோ மறைந்து சித்தஸ்வாதீன மற்றவன்போல் பிதற்றிக் கொண்டிருக்கிறேன். "மயிர் நீப்பின் வாழாக் கவரிமா வன்னார் உயிர்நீப்பர் மானம் வரின்" என்பதை உணர்ந்தும், அறியாதவன் போல் மயங்கினேன். ஒரு ரோமத்தின் பொருட்டல்லவா கவரிமானானது உயிரை இழக்கின்றது? அப்படியிருக்க உயர்ந்த மானிட ஜென்மத்தை யடைந்த நாம் மானமழிந்து யிரிருக்கலாமா? உத்தம க்ஷத்திரியர்களுக்கு மானமே உயிரினும் சிறந்த பொருளல்லவா? உயிரைக் கொடுத்தேனும் மானத்தைக் காப்பாற்ற வேண்டாமா? இனி வீண் ஆலோசனை செய்வதில் பிரயோஜனமில்லை. இரக்கச் சித்தங் கொண்டு மானங்கெட வாழ்வது ஞாயமில்லை. இப்போதே சீதையைக் காட்டில் விட்டுவர பாந்தவர்களை அனுப்புகிறேன்; அதுதான் சரி... யாரடா கஞ்சுகி! நீ சென்று தம்பி பரதனை நானழைப்பதாக அழைத்து வா!

கஞ்சுகி : ஆக்ஞை! அப்படியே அழைத்து வருகிறேன். (போகிறான்)

(பரதன் வருகிறான்)

ரா - பிலஹரி - பாட்டு - ரூபகம்.

பல்லவி

பரதன் : பாதம் போற்றினேன்
பகரவேணு மென்னையழைத்ததை (பா)

அனுபல்லவி

பாரிலுள்ளவர் யாரும் போற்றும்
ஸ்ரீராமா நாயகா (பா)

சரணம்

சித்தத்தில் என்ன நினைவுண்டானது
தேவரீர் சொல்ல வேணுமேயது
செப்பினாலதைத் தப்பில்லாமாலிப்போதே
செய்குறேன் (பா)

பரதன் வ - ம் : ரகுநந்தன சிரேஷ்டராகிய அண்ணா! தமது எழில் தங்கிய சீர் பாத கஞ்சங்களை வந்திக்கின்றேன். தங்கள் உத்தரவு கிடைத்ததும் தாமதிக்காமல் ஓடோடியும் வந்தேன். தங்கள் மனமானது ஏதோ சஞ்சலம் அடைந்திருப்பதாகத் தெரிகிறது. கனிஷ்டராகிய எங்களால் நேர்ந்த தவறுதலா? அல்லது அன்னியர்களால் உண்டான வருத்தமா? எவ்விதமாகயிருந்தாலும் தயை செய்து, எளியேனுக்குப் போதிக்க வேண்டுவதோடு, வியாகூல சந்தாபகாரத்தை நிச்சயமாய் நிவர்த்தி செய்கிறேனண்ணா!

(தர்க்கப் பாட்டு)

ராமர் : சற்குணமுள்ள தம்பி பரதா..
சாற்றும் பெரியோர் சொல்லைக் கேட்டிடும்
விரதா (சற்)
நற்குல அருமை இந்நாளொடு போக
நமக்கு வினை வந்ததே அநியாயமாக
பற்பல பேசி என்ன ஆகும் வாய் நோக
பதைத்துப் பதைத்துத் தீப்போல்
என் மனம் வேக (சற்)

தர்க்கத் தொடர் பாட்டு

பரதன் : விபரம் விளங்கவில்லை அண்ணா
வேதை கொண்டு புலம்பலேன் மணிவண்ணா (வி)
உபசாரம் நாங்கள் செய்து உமதடி துதித்து
உற்ற ஏவலைக் கேட்டு நடக்கின்றோ மதித்து
அபச்சாரம் உமக்குச் செய்வாருண்டோ எதிர்த்து
ஐயோ நோவதேனோ மெய்யாய் மனங்
கொதித்து (வி)

ராமர் : சொல்லுவோ மென்றாலே தோணுதே வெட்கம்
சொல்லாதிருந்திட்டாலும் தொடருமே துக்கம்
கல்லுங்கரையுமே கண்டாலெனதுருக்கம்
கருதிச் சேடனுஞ் சொல்லான் துயரமோ
பெருக்கம் (சற்)

பரதன் : தேவர் முனிவர் சித்தர் யாரிலும் வல்ல
தேவரீர் உரைத்திட வேணுமே மெல்ல
ஏவலூழியஞ் செய்யும் என்னிடஞ் சொல்ல
இவ்வித வருத்தம் கொள்வது நல்லதல்ல (வி)

பரதன் வ - ம் : அண்ணா! தாங்கள் சொல்லும் மொழிகளோ விபரமாக எனக்கு விளங்கவுமில்லை. தாங்கள் மிகுந்த சஞ்சலத்தை அடைந்திருப்பதால் என் மனம் அதிக தாபத்தை அடைந்திருக்கிறது. பாத ஊழிய சேவைக்காரனாகிய என்னிடம் சொல்வதற்குத் தடையென்ன? கொஞ்சமேனும் துக்க மின்றித் தெரிவியுங்கள் அண்ணா!

ராமர் : அருமை பரதா! அதைச் சொல்வதற்கு என் நாவெழவில்லையே! நானென்ன செய்வேன். சொல்லாமல் இருக்கவும் முடியவில்லை. சொன்னால் என்னைப் போல் நீயும் வருந்த வேண்டியதாக முடியும். ஐயோ! ஒன்றுமறியாத உன்மனம் வருத்தமடைய நானெப்படிச் சகிப்பேன்?

<u>விருத்தம்</u>

நேற்றிரா நகர் சோதனைக்கு நான் சென்றேன்
ஏகாலி குலத்தினனொருவன்
தன்துணை மனைவி மனவருத்தத்தால் தன்
தாய்வீடு போனதைக் குறித்து
நன்றழையென்னு மன்னையோடு
ராவணன் சிறை செய்ய அவனை
வென்று நாயகியை மீட்டவன் போல்
விரும்புதல் மடமை என்றனனே.

ரா - பிலஹரி - பாட்டு தர்க்கம். ரூபகம்

ராமர் : இந்த அவமானத்தை எந்தவிதம் பொறுப்பேன்
தம்பீ - நீ
ஏதும் சொல்லாமல் காட்டில் சீதையை விட்டு
வாராய் தம்பீ..

பரதன் : அந்தோ கொடிய பாவம்
ஆகாதது மொழிந்தீர் அண்ணா - என்
அன்னையைக் காட்டில் விட
என்ன விதந்துணிந்தீர் அண்ணா.

ராமர் : நாடு நகர் பழிக்க
நானுயிர் வாழலாமோ தம்பீ - என்
நாரி சீதையைக் காட்டில்
நீ போய் விட்டு வருவாய் தம்பீ..

பரதன் : ஆடைவெளுக்குமொரு
கீழ்மகன் சொன்னதெண்ணி அண்ணா
அருந்ததி கற்பன்னையை
வனந்தன்னில் விடலாமோ அண்ணா.

ராமர் : என்ன விதம் சொன்னாலும்
என் செவியிலேறாது - தம்பி - உனக்
கிஷ்ட மில்லாது போனால்
நிற்காத கன்று போவாய் தம்பீ.

பரதன் : மன்னர் முறைமை யீதோ
மாதா மேல் குற்றமுண்டோ அண்ணா
நான் - வார்த்தை மீறினேனென்று
வேர்த்துச் சினங் கொள்ளாதீர் அண்ணா

வ - ம் : அண்ணா! இதென்ன... கேவலம் ஒருவண்ணான்... அவன் எந்த நிலைமையிலிருந்து சொன்னானோ.. அம்மூலகாரணத்தை விசாரித்தறியாமல் கற்புக்கரசியாகிய எனதன்யைார் மீது பழியைச் சுமத்திக் காட்டில் விட்டுவந்து சேரும்படி கட்டளை இடுகிறீரே இது ஞாயமா? மனுதர்ம சட்டத்திற்காவது ஒப்புமா? மகா பதிவிரதைகளின் மீது பழி சொல்வார்களானால், சொல்லும் நாவையும் நினைக்கும் மனத்தையும் சுடும் கற்புத் தீ. “கற்புடைய தெய்வம் இத்தெய்வமல்லது பொற்புடைய தெய்வம் யாங் கண்டிலமால்” என ஒரு வித்வ சிரேஷ்டர் கூறியிருக்கிறார். கற்புடைய மாதரைக் கடவுளரும் தொழுவர். ஆக்கலும் அழித்தலும் பதிவிரதைகளாற் கூடும். அவர்கள் இல்லாத நாட்டில் மழையே பெய்யாதென்றால், இன்னும் அவர்களுடைய மகிமையை விஸ்தரித்துச் சொல்லவும் வேண்டுமோ? நான் தங்களுடைய கட்டளைக்கு உட்பட்ட ஏவலாளனாயிருந்த போதிலும் இக்கொடிய செய்கைக்கு ஒருக்காலும் உடன்பட மாட்டேன். தாங்கள் கோபம் மாறி

எண்ணிய எண்ணத்தை முற்றும் மறந்துவிடப் பிரார்த்திக்கிறேன் அண்ணா!

ராமர் : பரதா! என்ன சொன்னாய்? உன்னை குரு ஸ்வாமியான வஸிஸ்டர், சகல நற்குணங்களுக்கும் இருப்பிடமானவன் என்றும், தமையன் வார்த்தையைத் தட்டாமல் நடந்து கொள்ளும் தர்மவானென்றும் பிரமாதமாகப் புகழ்ந்தார். அதற்கு மாறாக என் வார்த்தையை வெறுத்து அலக்ஷியம் செய்தனை; க்ஷத்ரியமரபிலுதித்தும், மானங்கெட்டு வாழ நினைக்கின்றனை.

ரா - தாபி. வேறு பாட்டு. ஆதி.

ராமர் : நிற்காதே என் கண்முன்னே
அகன்று போவாய் (நிற்)
நீதி எனக்குப் போதித்தாய்
வாது தொடுத்துச் சாதித்தாய் (நிற்)
தற்கால அவமானஞ்சகித்திடுவேனோ
சாற்றும் நிந்தை கேட்டு நிர்வகித்திடுவேனோ
தாளேன் வேதனையாலே சோகமும்
ஆனேன் மாறு சொல்லாதே.
வாழேன் நானுயிர் வாழேன் நானுயிர்
போவாய் நேரில் நில்லாதே
மானம் போனபின் பிராணனோடு நான்
வாழுவேனோ (நிற்)

(பரதன் தலை குனிந்து கண்ணீர் வழியப் போகிறான்)

ராமர் : யாரடா காவலன்?

காவலாளி : ஸ்வாமி!

ராமன் : நீ சென்று தம்பி சத்ருக்கனனைக் கூட்டி வா!

காவலாளி : உத்தரவு... (போகிறான்) (சத்ருக்கனன் வருகிறான்)

பாட்டு

சத்ருக்கனன் : பத்ம பதத்துதி செய்தனன் நல்லருள்
பார்த்தருள்வாய் கருணைக் கண்ணால்
இத்தினம் அன்பொடு இங்குவரும்படி
என்னையழைத்ததுமேன் அண்ணா.

சத்ருக்கனன் வ-ம் : பிரதாப சௌர்ய வீரபராக்ரமரகுவீர கோதண்டபாணியாகிய அண்ணா! அதி துரிதமாக அழைத்ததாகச் சாரணர் சொன்னார். கட்டளை

கேட்டதும் நிற்காமல் ஓடோடியும் வந்தேன். வந்த நான் சரணாம்புஜம் பணிந்து திருமுக மண்டலத்தை நோக்க மனம் பதைக்கலானேன். அண்டகடாகம் வெடித்தாலும், நக்ஷத்திரங்க-ளெல்லாம் உதிர்ந்தாலும், மகாமேருகிரி தலைகீழாக விழுந்தாலும், கடல்நீர் முற்றும் சுவரிப் போனாலும், அஷ்ட குலபர்வதங்கள் பட்டுப் பட்டென்று விட்டுத் தெரித்துத் தூளியானாலும், பூகம்ப முண்டாகி உலகநாச-மேற்பட்டாலும், சற்றேனும் கலங்காத தமது திடச் சித்தமானது மாறுபட்டு வியாகூல-மடைவதற்குக் காரணமான ஒரு பெரிய மனோ வியாதி பீடித்திருப்பதாகத் தெரிகிறது. காரணம் இன்னதென்று தெரிவிக்கப் பிரார்த்திக்கிறேன் அண்ணா!

(பாட்டு) தர்க்கம். (சிந்து பைரவி)

ராமர் : அருமைத் தம்பியே
ஆகுமே மிகு சோகமானது
ஏதுநானினிவோதுவேன் (அ)
பெருமை கௌரவ நன்னிலம்
பிழைபடாதது நம் குலம்
பேதையாகும் என்னால் இன்னாளது
சீர்கேடாவது கேவலம் (அ)

சத்ருக்கனன் : விளங்கவில்லையே
வேதையாய் மனம் வாடுறீரது
யாது காரணம் ஓதுவீர் (வி)
களங்க மின்றியே குலத்துக்கு
காணும் பற்பல நலத்துக்கு
காலபேதமான கேடது
நேரலானது மேதுக்கு (வி)

ராமர் : இலங்கை யூரினிலே சிறை
இருந்த மாதைச் சேர்க்கமுறை
ஏது ஊர்வசை ஓதலானது
ஆதலால் மதிப்புக் குறை (அ)

சத்ருக்கனன் : பாவி ராவணன் தீமையால்
பட்டவன் குலம் சாகையால்
பாருள்ளோர் வசை கூறிடார் குல
மேன்மையே பெறுமாகையால்
சோகமேன் அண்ணா - சோகமேன்
சொல்லுவேன் மொழி நல்லதாமொரு
தொல்லை நேருவதில்லையே. (சோ)

வ - ம் : அண்ணா! நரமாம்ஸ பக்ஷிணிகளாகிய குரூர ராக்ஷஸக் கூட்டத்தலைவன் கொடிய சண்டாள ராவணன் எனதன்னை யாரைச் சிறையெடுத்துப் போன காரணத்தால் உலகம் நம் குலத்தை நிந்திக்காது. அத்துஷ்டன் பந்து மித்ரவர்க்கத்தோடு தமது கோபத்திற்குப் பாத்திரப்பட்டு நாசமாய் அழிந்து போனதால் உலகத்தில் அநேக சத்கருமங்கள் செழிக்கத் தலைப்பட்டு, புவன ரக்ஷகமாக முடிந்தது. ராக்ஷஸனால் தேவ கணங்களும் தவஸ்ரேஷ்டர்களும், அடைந்து வந்த இம்ஸை ஒழிந்தது. தர்மம் தலையெடுத்தது. தானம் ஓங்கியது. யாக எக்கியங்கள் முன்போல் விருத்தியடைந்தன. இவ்வகைகளைக் குறித்து உலகத்தார் என தன்னையார் பொருட்டே எல்லா நன்மையும் விளைந்ததென்று நம் குலத்தை வாழ்த்துவார்களேயன்றி ஒருக்காலும் வசை கூறார். ஏன் அண்ணா! வீண் விசனத்தை வரவழைத்துக் கொள்ளுகிறீர்கள்? வேண்டாம். சஞ்சலத்தையும் கோபத்தையும் நீக்கிச் சாந்தமடையுங்கள் அண்ணா!

ராமர் : அருமைத் தம்பி! நீ எவ்விதமான சமாதான வார்த்தைகள் சொன்னாலும் என் செவியில் புகவில்லை. சீதையினால் எனக்கு நேர்ந்த அவமானம் என்னால் சகிக்கக் கூடவில்லை. இனி அரைக்ஷணமும் சீதையினோடு இருக்க என் மனம் இசையவில்லை. ஐயோ! நான் என்னவென்று சொல்வேன். ஊர் வசைகேட்டும் உயிர் வாழ்வதா?

சத்ருக்கனன் : அண்ணா! வீணாகக் கவலை ஏதுக்கு? ஓர் குற்றமும் செய்தறியாத எனதன்னையார் மீது இந்தக் கோபம் தமக்குண்டானது நியாயமா? வேண்டாம். தங்களன்பைச் சற்றும் நீங்காத தேவியார்மீது இச்சினம் வந்த காரணம் யாது? அதனையாவது தெரிவியுங்களண்ணா!

## தர்க்கப்பாட்டு

ராமர் : தம்பியுன் ஞாயங்களெல்லாமிருக்கட்டும்
ஜானகியைக் கொண்டு நீவனத்தில்
சற்றுந் தயையின்றி விட்டுவந்து சேர
சாற்றினேன் சென்றுவா இத்தினத்தில்.

சத்ருக்கனன் : நம்பி நீரே கெதியென்றிருக்கும் தாயை
நட்டாற்றில் கைவிட எண்ணுகிறீர்

ஞாயமில்லாத பொல்லாத வழியிலே
நாடியாலோசனை பண்ணுகிறீர்.

ராமர் : சீதையிருக்கும் வரையிலுமென்துயர்
தீராது தீராது உண்மையிது
சீக்கிரம் கூட்டிப் போய்க் காட்டிலே நீ விட்டுச்
சேருவாயிங்கதுவே நல்லது.

சத்ருக்கனன் : பாதகமாமொழி ஓதுகிறீரிது
பாவம் பாவம் சொன்னேன் ஞாயமில்லை
பாரில் வசையும் அபகீர்த்தியும் வெம்
பழியுமுண்டாகும் கேளு மென் சொல்லை.

ராமர் : மூத்தோர் சொல் வார்த்தை
அமுதமென்று சொல்லும்
முன்னோர் மொழியைப் படித்தில்லையோ,
முன்னவ னானென்றும், பின்னவனீயென்றும்
இன்னாளுணரும் மதியில்லையோ?

சத்ருக்கனன் : சாஸ்திரம் பெண்ணென்றால் பேயுமிரங்கும்
தமக்குத் தெரியாதோ நான் சொல்லவோ
என் தாய் குற்றமேது செய்தாள் காட்டிலேவிட்டால்
தர்ம விரோதமிதுவல்லவோ.

சத்ருக்கனன் வ-ம் : அண்ணா! இது மகத்தான பாதகமல்லவோ? தமது தேவியாரை வனத்தில் கொண்டுபோய் விட்டுவரும்படி சொல்லுகிறீரே. அவ்வன்னையார் என்ன பிழை செய்தார்கள்? எதற்காக வனவாசியாக்க வேண்டும்? உலகிலுள்ளவர் களெல்லாம் நிந்திக்கமாட்டார்களா? எல்லாம் தெரிந்த தங்களுக்கு நான் என்ன சொல்வது? பெண்ணென்றால் பேயுமிறங்கு மென்பார்களே! அப்படியிருக்க இரக்கமே உருவெடுத்து வந்த தென்று யாவரும் புகழ்ந்து போற்றும் தாம் இவ்வளவு கடின சித்தத்தை யடைந்ததும் வியக்கத்தக்கதே.. நம்பிய பேரை நட்டாற்றில்விட எத்தனிப்பதைப் போல நீரே கெதியென்று ஆத்மார்த்தமாக எண்ணியிருக்கும் மகாபதி விரதா சிரோன்மணியான எனதன்னை மீது தாம் இவ்வளவு சினங்கொண்டு பராமுகமாகி நிராகரித்துப் பேசுவது தகாது. இக்காரியத்தை மனதினாலெண்ணுவதும் தீதே. பெரியோர்கள், "நினைத்தலும் செய்தலோடொக்கும்" என்பர். தாமதறிந்தது தானே. ஆகையால், இந்தக்

கோபத்தை நீக்கி அண்ணியாரின் மீது கருணை செய்யுங்களண்ணா!

ரா - சங்கராபரணம் - சாப்பு

பாட்டு

ராமர் : எதிர் நில்லாதே - இனிமேலே என் (எ)
ஏதேதோ நீபோதித்து வாதாடுறாய் சாதித்து (எ)
அண்ணன் மொழியென்று நீ அணுவளவு
முணரவில்லை
அலக்ஷியமாகயிங்கு அவமதித்தாயென் சொல்லை
எண்ணியறியுங்காலை இதுபோலுமேது தொல்லை
ஏகுவாயுனதிடம் எனக்கு நீ தம்பியில்லை (எ)

(சத்ருக்கனன் மனமுடைந்து ஆராத்துயரத்துடன் போகிறான்)

ராமர் : யாரடா அங்கே?

காவலாளி : சுவாமி! (வணங்கி நிற்கிறான்)

ராமர் : நீபோய் தம்பி லக்ஷ்மணனை இங்கனுப்பு!

காவலாளி : உத்தரவு.. (போகிறான்)

(லக்ஷ்மணன் வருகிறான்)

ரா - ஸ்ரீராகம் - தா - ரூபகம்

(பாட்டு)

பல்லவி

லக்ஷ்மணன் : அண்ணா திருமலரடியிணை போற்றி
அனுக்ரஹிக்க வேணும் (அ)

அநுபல்லவி

விண்ணோர் துயர் தீர ராவணனை
மேதினி மீதினிலே விழ
மோதிய வீர புயாச்சல (அ)

சரணம்

ஏதோ என்னை நீரிங்கழைத்திடு சேதி
அதை இன்னதெனவே
நாதா தெரியப்படுத்திடில் நன்று
நானேழையுன் கட்டளையில் நின்று

சீதாபதியே புரிவேன் இன்று
தேரீரின் ஏவலேயென்
வாழ்வுமாகு மாதலாலே ( எ )

**லக்ஷ்மணன்** வ-ம்: அண்ணா! அடிமீது முடி தாழ்த்தி வணங்கிக் கேட்டுக் கொள்கிறேன். என்றுமில்லாதவிதம் இன்று முகவாட்டத்தையடைந்ததாகத் தெரிகிறது. எனதன்னையான ஜனகபுத்திரியைத் துராத்மா-வாகிய தசக்ரீவன் பர்ணசாலையோடு தூக்கிக் கொண்டுபோய் மறைத்துவைத்த காலத்திலும் இவ்விதவாட்டம் தாங்க-ளடைந்திருந்ததாக நான் கருதவில்லை. அவ்வகையிலும் மேலான துன்பம் இப்பொழுதென்ன நேர்ந்தது? அவ்விபரத்தைப் பிரஸ்தாபித்து, அழைத்த காரணத்தையும், அடியேனுக்குக் கட்டளையிட்டால் தங்கள் அபிப்பிராயத்துக்கு விக்கினமில்லாமல் நிறைவேற்றி வைக்கிறேன் அண்ணா!

ரா - தோடி - தா - ரூபகம்

பாட்டு

**ராமர்** : தம்பி எனக்குற்ற வேதனையின்று
சகிக்க முடியவே இல்லை
சாற்றுவேனானால் உனக்குமப்படித்தான்
தந்திடுமே மிகு தொல்லை.

**லக்ஷ்மணன்** : அம்புவியில் சுகதுக்கங்கள் மானிடர்க்
காவதியல் பதனாலே - என்
அண்ணா வருந்துவதாலென்ன லாபம்
அதையுரையுமினிமேலே

**ராமர்** : ஜானகி லங்கையில் பத்துமாதம்சிறை
தானிருந்த அவமானம்
தாரணியோர்கள் பழிக்கும் வசைச் சொல்லால்
சஞ்சலம் நேர்ந்ததும் ஈனம்.

**லக்ஷ்மணன்** : மானம் மரியாதை கற்புக்குணத்தினில்
மங்கையற்குத் தெய்வமென்று
மானிலத்தோர் துதிக்கின்றார் என் அன்னையை
வந்திடுமோ வசையொன்று

**ரரமர்** : நேற்றிரவு நகர் சோதனைக்குச் சென்று
நின்றென் காதால் வசை கேட்டேன்
நீ எவ்விதச் சமாதானங்கள் சொன்னாலும்
நிச்சயம் நான் நம்பமாட்டேன்.

லக்ஷ்மணன் : கூற்றுக் கொடியவர், பாதகர் கோள், புறம்
கூறுவோர் சொல் நம்பலாமா?
கொஞ்சமும் அன்னையால் ஈனம் நேர்ந்த தென்று
கொள்ளலாமோ ரகுராமா?

ராமர் : என்னிடத்தைத் தேடி நேரினிலேவந்
தெவரேனும் கோள் சொல்லவில்லை.
இயல்பாய் நடந்தது நானங்கு சென்று
இசைந்து கேட்டேனந்தச் சொல்லை

லக்ஷ்மணன் : சொன்னவராரந்த ஈனமான மொழி
சூரிய குலத்திற் கின்று
சூழ்ந்த விவரங்கள் யாவையும் நான் கேட்கச்
சொல்லவேணும் இன்னதென்று

ராமர் : ஒரு வண்ணான் மனைவி மனவருத்தத்தால்
மறுவீடு சென்றுளதாலே - அவன்
மாதா அழைக்கச் சொல்ல அவன்நிந்தித்த
வார்த்தை கேட்டேன் என் காதாலே..

லக்ஷ்மணன் : அண்ணா அந்த வண்ணான் என்ன சொன்னான்
அதனாலே வருந்துவதேனோ
அந்த விவரமும் இந்த வேளை நீர் சொல்
லாதிருந்தால் நலந்தானோ..

வ - ம் : அண்ணா! தாங்கள் நகர் சோதனைக்குப் போயிருந்தபோது ஒரு வண்ணான் ஏதோ சொன்னான் என்றும் அவ்வார்த்தை மிகு துக்கத்தை விளைத்ததென்றும் அதனைச் சகிக்கக் கூடவில்லையென்றும் வருந்துகிறீர்கள். இன்னும் விபரம் எனக்கு விளங்கவில்லை. அந்த வண்ணான் சொன்ன அபக்ஞான மொழி யாது? அதனையும் அடியேனுக்குத் தெளிவாகச் சொல்லப் பிரார்த்திக்கின்றேன் அண்ணா!

ராமர் : தம்பி லக்ஷ்மணா! அந்த வண்ணான் சொன்ன வார்த்தையை நான் சொல்வதென்றால் என் மனம் துடிக்கின்றதே என்ன செய்வேன். அதைக் கேட்ட நீயும் சகிக்கக் கூடாத துன்பத்தை அனுபவிப்பாயே, ஐயோ! லக்ஷ்மணா! பத்து மாதம் அரக்கன் சிறை வைத்திருந்த ஒருத்தியைக் கொஞ்சமேனும் லஜ்ஜையில்லாமல் ராமன் கூடிக் குலாவுகிறான். அவனைப் போல் மானங் கெட்டவன் நானல்லயென்றான். ஐயோ! அந்த வண்ணானுக்குள்ள, மானமும் அரசனாக வாழும் எனக்கில்லை என்றல்லவோ ஊரார் நினைப்பார்கள்? ஆகையால்..

<u>பாட்டு - தர்க்கம்</u>

ராமர் : சீதையைக் காட்டிலே கொண்டு
சேர்த்துவிட்டு வாதம்பி
சிந்தையில் தயைகொண்டு
தியங்கியழாதே வெம்பி

லக்ஷ்மணன் : தேவரீர் சொல் ஞாயமானதுவோ
திருநிகரன்னை தனைவனம் விட
முறைமை ஏதுவோ (தே)

ராமர் : மானம் மரியாதை கெட்ட
மானில வாழ்வாகுமா
<u>மங்கையோடு</u> வாழ்ந்திருந்தால்
வந்த நிந்தை போகுமா.

லக்ஷ்மணன் : வானம் பூமியுள்ள நாள் வரையும்
வசைவரும் அன்னைதனைவனம் விடில்
நிஜமா மென்னுரையும் (வா)

ராமர் : என்னவசை வந்தாலும்
எல்லா மெனக்குச் சம்மதம்
என்மொழி கேட்க இஷ்டமா
இல்லையா சொல்லவ்விதம்

லக்ஷ்மணன் : இட்ட வேலைக்கேவலன் நானே..
எனினும் இதனில்
அவதி விளையும் அதைமொழிவேனே (இட்ட)

வ - ம் : கருணையே வடிவமாகிய அண்ணா! அணுவளவும் பிழை செய்தறியாத எனதன்னையாம் அன்பான உத்தமியைக் கொடிய துஷ்ட மிருகங்கள் சஞ்சரிக்கும் இருண்ட ஆரண்யத்தில் ஒண்டியாக விட்டு வரும்படி கட்டளையிடுகிறீர்களே இது ஞாயமா? இந்தக் கர்ண கடூரமான வார்த்தையைக் கேட்டு மகாபாவியாகிய நான் இன்னும் உயிரை விடாமல் ஜீவனோடு நிற்கிறேனே. ஐயோ! என் மனம் பதறுகிறது. அண்ணா! அண்ணா! தயவு செய்ய வேண்டும். தயவு செய்ய வேண்டும்..

ராமர் : லக்ஷ்மணா! என்ன சொன்னாய்? நீயும் என் வார்த்தையை மறுத்துப் பேசுகின்றாயா? ஆகா! என்ன கஷ்டகாலமிது. ஒரு நாளும் என் வார்த்தையைத் தட்டி நடக்காத லக்ஷ்மணன் இன்று மீறிப் பேசுகின்றான். இனியிந்த ஜென்மம் இருந்து பிரயோஜனமென்ன. தம்பி பரதன் என்னை அவமதித்தான்; சத்ருக்கனனும் என்னை அலக்ஷியப்படுத்தினான். உயிருக்குயிரான இவனும்

என் வார்த்தையை நிராகரித்தானென்றால் இனி என்ன இருக்கிறது. இப்படிப்பட்ட ஜென்மம் இருப்பதைவிட இறப்பதே உத்தமம். லஷ்மணா! நீ ஜானகியை வனத்தில் விட்டுவராவிட்டால் நான் பிராணத்தியாகம் செய்து கொள்வது நிச்சயம். நீங்கள் யாவரும் சந்தோஷமாக வாழ்ந்திருங்கள்.

(வேறு பாட்டு தர்க்கம்)

லக்ஷ்மணன் : அண்ணா உமக்காகாது
இந்தக் கோபம் - என (தண்)

ராமர் : ஆகுமே கேவலம்.

லஷ்மணன் : ஐயையோ வியாகூலம்.

ராமர் : கொடும் ஆரண்ய மத்தியில்
சீதையை விட்டுவா

லக்ஷ்மணன் : (அண்ணா)

ராமர் : தாரணியோர் பழி கூறுவதாலினி
நீதடையோ துவதாமா

லக்ஷ்மணன் : என் தாய் பிழை ஏது செய்தாள்
வனமேவிடில் நேரிடும் ஓர்பழி போமா

ராமர் : சஞ்சலம் மிஞ்சினேன்

லக்ஷ்மணன் : நெஞ்சம் நானஞ்சினேன்.

ராமர் : இங்கு சாற்றிடு மென்மொழி
கேட்டு நடந்திடு

லக்ஷ்மணன் : அண்ணா!

ராமர் : மூத்தவர் சொல்லிய வார்த்தை தடுப்பார்
மூர்க்க ரென்பார் மொழியாதே

லக்ஷ்மணன் : மூவுலகோர் துதிபேசிடு தாயை
இந்நாள் வனமே விடில் தீதே

ராமர் : முற்றுதென் கோபமே

லக்ஷ்மணன் : பற்றும் பெண் பாவமே.

ராமர் : முகமே விழியாத கல் வாயிதுவேளையில்

லக்ஷ்மணன் வ-ம் : அண்ணா! கேவலம் ஒரு வண்ணான் அவன் குலாச்சார நிலையில் அபசாரப் பட்டானோ என்னவோ.. அந்நிலைமை எங்கு முண்டன்றோ. மனப் பிராந்தி பிடித்தோ.. சின முற்றியதால் வாய் தவறியோ கூறிய வெற்றுரையை ஒரு பொருளாக மதித்து மூவுலகமும் புகழும் மகா உத்தம குண சத்வஸ்வரூபி என் மாதாவைக் கொடிய காட்டில் ஒண்டியாய் விட்டுவர ஆக்ஞை செய்கின்றீர்களே. இது தர்மமாகுமா? தாங்கள் அக்கினி சாக்ஷியாகக் கைக் கொண்ட தேவியல்லவா? மிருதுவாகிய சரீரம் எவ்விதம் கல்லும் முள்ளும் நிறைந்த வனப் பிரதேசத்தில் ஜீவிக்கும்? மேலும் கற்ப வேதனையோடுங் கூடிய வேளை தீர்க்காலோசனை செய்யாமல் பெண்பாவத்தை ஏற்றுக் கொள்ள முயலுகிறீரே அண்ணா! இது ஞாயமில்லாத காரியம். அற்பருடைய மனவைிமார்களெல்லாம் எவ்வளவோ சுக சௌக்யமாக வாழ்ந்து வருகிறார்கள். மகாவீரப் பிரதாபரும் சக்ரவர்த்தித் திருமகனாகிய ராஜ்யாதிகார உரிமை பெற்றவருமாகிய உம்மை மணம் செய்து கொண்டது முதல் எனதன்னையாகிய ஜானகி மாதோஸ்திரீக்கு நல்ல சுக சௌக்ய சந்தோஷ பலனே உண்டானதாகத் தெரியவில்லை. உள்ள நாளெல்லாம் வனசஞ்சாரியாக உம்மோடு திரியும்படியாக நேர்ந்த தால், துஷ்டபாபாத்மா-வாகிய தசகண்டன், தீண்டினால் தோஷமென்று தெரிந்தும் முட்டாள் புத்தியால் பூமியோடு பெயர்த்தும் தீண்டாதெடுத்துப் போய்ச் சிறையிட்டான். அந்த இலங்கையில் அன்னையார் அழுத கண்ணீர் ஆறு குளங்களெல்லாம் நிரம்பி சாகரத்திலும் ஓடி விழுந்திருக்கும். இவ்வளவு துன்பங்களும் அனுபவித்து மீண்டும் சொற்பகால-மாகவில்லை. அதற்குள்ளாக ஆரண்யப் பிரதேசத்தில் விட்டுவரக் கட்டளையிடுகிறீர். உள்ள நாள் உள்ள வரை கஷ்டமனுபவிக்கவோ எனதன்னையார் உம்மை நாயகனாக ஏற்றுக் கொண்டது? இன்னுமொருமுறை இவ்வார்த்தை என் காதில் கேட்க ஓதாதிருக்கும்படி தமது பாதம் பற்றி வேண்டிக் கொள்கிறேன் அண்ணா!

ரா - பியாக்கடை, பாட்டு, தா - சா

ராமர் : ஜானகிதனை வனந்தனில் விடமனம்
தளரும் நிலையேனோ..
அனல்மெழுகென என்மனமுருகியது
அவதி தருமொழி எதிர் புகலுவது ( ஜா )
உயிர் நிகர் பிரியமுடைய துணையென
உனையெண்ணிய பிழையாகுமா
உலகில் வசையது பெருகு நிலையினில்
உடையவர்கள் துயர் போகுமா..
அயர்ச்சியடைந்தனன் நிர்வகிக்காது
அதனையகற்றிட நினைத்திப்போது
முயற்சியெடுக்காமல் தொடுத்தாய் வாது
முகத்தினிலே நீயும் விழித்திடலாகாது.

( ஜானகி )

வ - ம் : சென்றுவிடு..

( லக்ஷ்மணன் ஆற்றொணாத்துயரால் அழுதவாறு செல்கிறான் )

( 7ஆவது காட்சி முடிவு )



8ஆவது காட்சி

அந்தப்புரம். ( ஸீதை தோழியருடனிருத்தல் )

நாடக மாந்தர்கள்: லக்ஷ்மணன், ஸீதை

லக்ஷ்மணன் : வருகிறேன்.

( பாட்டு ) தர்க்கம்

பாதமலரினைப் பணிந்தேனான் அண்ணி
பணிந்தேனானண்ணி ( பா )
ஆதரவாகிய அருள்மொழி பேசி
அனுக்ரஹம் செய்ய வேண்டும்
அடியேனுக்காசி ( பா )

ஸீதை : மங்களமுண்டாகும் மனமகிழ்வாய் நீ - ( ம )
எங்கும் தமையனின்றி ஏகாய் நீ ஏது
இங்குத் தனித்து வந்தாய் எனக்கதை ஓது ( ம )

லக்ஷ்மணன் : அண்ணாவின் உத்தரவு ஆனதினாலே
அடியேனானிங்கு வந்தேன் அறிவீர் முன்னாலே
( ம )

**சீதை** : எதற்காக அனுப்பினார் இவ்விதமென்று
எனக்கு விபரமாக இயம்புவாய் இன்று ( ம )

**லக்ஷ்மணன்** : ஆரண்யம் பார்க்க ஆசையானீராமன்று
அழைத்துப் போய்க் காட்டி வர அனுப்பினாரின்று
( பாத )

**சீதை** : ஆனால் அவர் வராத காரணமேது
அதனையும் நானறிய விரைவினிலோது ( மங் )

**லக்ஷ்மணன்** : அரசு காரியமான அவசியமுண்டு
அதனாலெனையனுப்பினாரருள் கொண்டு ( பாத )

**சீதை** : அப்படியா விசேடம் ஆரண்யம் சென்று
அங்கு வினோதங்கண்டு வருவோம் வா இன்று
( மங் )

( 8ஆவது காட்சி முடிவு )

9ஆவது காட்சி - காடு

நாடக மாந்தர்கள்: லக்ஷ்மணன், சீதை, வால்மீகி

( **சீதையும் லக்ஷ்மணனும் வருகிறார்கள்** )

**லக்ஷ்மணன்** : ஐயோ! மகா உத்தம குணம் பொருந்திய அன்னையார் சூதுவாது அறியாமல் கொடிய வஞ்சகனாகிய என் சொல்லை மெய்யென்று நம்பி, வனவேடிக்கை பார்ப்பதற்கென்றே வந்திருக்கின்-றார்களே. பால்போன்ற மனத்திற்குப் பழுது செய்யும் பாதகன் என்னையன்றி வேறுண்டோ? எவ்விதம் இந்த அன்னையாரை ஒண்டியாக விட்டுப் போவேன் தெய்வமே! ரகுவீரருக்கு மூன்று தம்பியர் உதித்தோம். அவர்களில் நானன்றோ பெரும்பாதகனாகி விட்டேன். மற்ற இருவரும் எப்படியோ இப்பாதகத்துக்குப் பாத்யப்படாமல் தப்பித்துக் கொண்டார்கள். நான் அறிவில்லா மூடனானதால், பெரிய வில்லங்கத்தில் மாட்டிக் கொண்டேன். அன்னையாரை இங்குவிட்டுப் போகாமல் ராஜ்ஜியத்துக்குக் கூட்டிப் போவேனாகில் ராஜ ஆக்ஞை மீறிய குற்றமும், அண்ணன் சொல்லை மறுத்த பாபமும் ஆகும். அண்ணன் சொல்லை நிறைவேற்றினாலோ ஏமாற்று மொழி சொல்லி வனத்தில் விட்டுப்போன இனத்துரோகியும், அசத்தியப் பாபியுமாவேன். அந்தோ! எந்த விதத்திலும் உய்வில்லை என் கரும வினையோயிது? தெய்வமே! தெய்வமே!

(வேறு பாட்டு தர்க்கம்)

சீதை : வரவர மிக வருத்தங்கொண்டு நீ வாடுவதேனோ..
வந்த துன்பம் யாது சொல்வாய் மனம் சகிப்பேனோ
(வர)

லக்ஷ்மணன் : 'ரமனருளின்படியே யல்லாமல் பாவம் போகுமா
பாதகச் செயல் நாவினாலென்னால் ஓதலாகுமா
(பர)

சீதை : விபரஞ் சொல்லாமல் அழுது புலம்பும் வேதைதான்
யாதோ
மேலும் மேலும் நீ சோகிக்க இது யார் செய்த சூதோ

லக்ஷ்மணன் : உபகாரமின்றி அபகாரமாக உற்றேறே நானிங்கு
ஓகோயிந்த பாவத்தை நான் போக்குவதெங்கு
(உப)

சீதை : நீ சொல்வதொன்றும் விளங்கவில்லையே
நெஞ்சம் வாடுதே
நிச்சயமந்த விபரமறிய சித்தம் நாடுதே (நீ)

லக்ஷ்மணன் : பேச வென்றாலும் நா வெழவில்லை பெரிய
தொல்லையே
பீதியடைவீர் சகிக்க மாட்டீர் கேட்டாலச்
சொல்லையே.

சீதை வ-ம் : லஷ்மணா! நீ சொல்கிறதொன்றும் விளங்கவில்லை. என்னுயிர் பதைக்கிறது. தலை கிறுகிறுவென்று சுழல்கிறது. நீ இவ்வளவு துக்கமடைந்ததை நான் என்றுங் கண்டதில்லை. நாம் அரண்மனை யினின்றும் புறப்பட்டது முதல் கொஞ்சம் கொஞ்சமாக வரவர துக்கமதிகரிப்பதை உன்னிடம் கவனித்தேன். இங்கு வந்ததும் திடீரென்று திக்பிரமையுண்டாகியது. அங்குமிங்கும் மிரள மிரள விழிக்கிறாய். என்னைப் பார்த்துப் பரிதவிக்கிறாய். தலையிலடித்துக் கொள்ளுகிறாய். கண்களில் நீர் பெருக எனக்குத் துக்கங்-காட்டலாகாதென்று மறைக்க முயலுகிறாய். ஐயோ! விபரம் இன்னதென்று சொல்லக் கூடாதா? எப்பொழுதும், உனதண்ணாவைப் பிரியாமல் உடலை நிழற்றொடர்ந்தது போலிருப்பாயே. அந் நிலையைக் குறித்து வருந்துகிறாயா? எனக்கும் அவரைப் பிரிந்து வந்தது துக்கமாகத்தான் இருக்கிறது. ஆதலால் ஆரண்ய வேடிக்கை

இன்னொருமுறை அவரோடு வந்து பார்த்துக் கொள்ளலாம். வா! சீக்கிரமாக அயோத்யா புரிக்குப் போய் அவர் முகத்தைப் பார்த்து நம் வருத்தத்தைப் போக்கிக் கொள்வோம். சீக்கிரம் புறப்படு! புறப்படு!

லக்ஷ்மணன் : தாயே! நாவு கூசாமல் எப்படிக் கூறுவேன். கொடிய வஞ்சகனாகிய நான் ஒருவேளை சொல்ல நேர்ந்தாலும் அக்கொடூர மொழியைக் கேட்டு நீங்களெப்படி நிர்வகிப்பீர்களம்மா? நானே பாதகன். மூவுலகங்களில் தேடினாலும் என்போலும் வன்நெஞ்சப்பாவி ஒருவன் அகப்படான் அம்மா! அம்மா!

( வருந்தி அழுகிறான் )

( தர்க்கம் - பாட்டு )

சீதை : பாதகமென்ன நேர்ந்தது சும்மா
பகருவாய் துக்கமேனது
வேதைகொண்ட பூதாவதாலொரு
லாபமில்லை வீணானது

லக்ஷ்மணன் : காட்டில் நானும்மை விட்டுப் போகவும்
காலம் நேர்ந்தது அன்னையே
மீட்டும் நானென்ன சொல்லுவேன்
ஐயோ வாட்டுதே துயரென்னையே

சீதை : காட்டில் என்னை நீ விட்டுப் போகவோ
வந்தனை உத்தமா
வீட்டை விட்டென்னை ஓட்டவே கொண்ட
நாட்டம் நாயகர் சித்தமா?

லக்ஷ்மணன் : ராமண்ணா ஒரு கட்டளையிடில்
நான் தடுத்திடலாகுமா..
பூமி நாசமதான காலமோ
தீமையோ தெரியேனம்மா.

சீதை : குற்றம் நானென்ன செய்தேன் நாயகர்
பற்றிலாதெனை நீக்கவே?
சற்றுமோர் பிழை செய்திலேன் அவர்க்
குற்ற கோப முண்டாக்கவே.

லக்ஷ்மணன் : தாயுன் மகிமை எல்லோரும் அறிகுவர்
தலைவிதி விடுமோ அம்மா
மாயமாகிய காலவினை அநியாயமாமிது தானம்மா.

சீதை வ - ம் : லக்ஷ்மணா! நானவருக்கு ஒரு பிழையும் செய்யவில்லையே! அப்படியிருக்க என் பிராண நாயகர், கெற்ப வேதனையடையும் நிலையி-லிருக்கும் என்னைச் சற்றேனும் ஈவிரக்கம், பச்சாதாபம் இல்லாதவர்போல, கோர மிருகங்கள் சஞ்சரிக்கும் காட்டில் ஒண்டியாக விட்டு வரும்படி உனக்குக் கட்டளையிட நேர்ந்த காரணமென்ன? அவ்விபரத்தைச் சொல்லமாட்டாயா? பாவி நான் உலகத்தில் பிறந்து என்ன பலனைக் கண்டேன்? உள்ள நாள் பரியந்தம் துக்கம் அனுபவிப்பதற் கென்றே நான் ஜென்மம் எடுத்திருக்கின்றேனா? ஐயோ! ராவண அதமன் சிறையிலகப்பட்டு வருந்திய துன்பம் இன்னும் அறவே ஒழிய-வில்லையே. அதற்குள் "பட்ட காலிலே படும் கெட்ட குடியே கெடும்" என்பதற்கிணங்க, மீண்டும் ஆரண்யவாசம் எனக்கு நேரிட வேண்டுமா? முன்பு ஏற்பட்ட வனவாசத்தில் நாயகர் சமீபத்தில் இருக்கும் பாக்யமும் அவர் கனிஷ்டனாகிய நீ புறங்காக்கும் துணையும் பெற்றிருந்தேனே! இப்பொழுது சூல் வருத்தத்தோடு ஒண்டியாக எப்படி உயிர் வாழ்வேன். ஓ விதியே! விதியே..!

லக்ஷ்மணன் : அம்மா! தங்கள் மகிமையை உலகமெல்லாம் அறியும். ஆயினும், தலைவிதி விடுமோ? நான் எவ்விதம் விபரத்தைக் கூறுவேன்? எவ்வளவு திடப்படுத்தினாலும், என் மனம் இடங்கொடுக்க வில்லையே. ராமண்ணா ஒரு கட்டளையிட்டால் நானெவ்விதம் நிராகரிப்பது? வனத்தில் விட்டுவா என்பதுதான் அவர் கட்டளை என்று மாத்திரம் நாவெழுகிறதல்லாமல் மற்றும் விபரத்தைச் சொல்ல, கூச்சமும் அச்சமும் அடைகின்றதே-யம்மணி! அம்மணி! இதற்கென்ன செய்வேன்?

சீதை : லக்ஷ்மணா! நானென்ன குற்றம் செய்தேனென்று காட்டில் விட்டு வரச் சொன்னார்? அதனையாவது சொல்லு!

லக்ஷ்மணன் : அம்மணி! அவர் நகர் சோதனைக்குப் போயிருந்தாராம். அப்போது ஒரு வண்ணான் மனைவி தன் தாய்வீடு போயிருந்தாளாம். அவளை அழைத்துவர அவன் அன்னை சொன்னாளாம். அது குறித்து அவன் சொல்லிய நிந்தைமொழி தங்களையும் அண்ணாவையும் சார்ந்ததாக யிருந்ததாம். அதைக் கேட்டதும்,

வியாகூலமடைந்து எவ்வளவு தேறுதல் களையும், நீதி நியாயங்களையும், நான் சொன்னாலும், அவைகளை மறுத்து, ஒரே பிடிவாதமாக இக்கட்டளையை மறுத்தால் நான் பிராணனை மறுப்பேனென்றார். ஆகையால் அவரது பிராணாபத்தைக் குறித்துப் பாவியாகிய நான் இணங்கியிங்குக் கூட்டி வரலானேன். அம்மணி! இவ்விஷயமன்றி வேறொன்றுமில்லை. அண்ணா சொல்லை மீறுவதும் தோஷம். ஒன்றைவிட்டு ஒன்றைச் செய்யும் நிலையில்லாததால் இருதலைக் கொள்ளி எறும்பு போலாகித் தத்தளிக்கலானேன். இன்னது செய்வதென்று தோன்றவில்லை. அம்மணி! அம்மணி! ( கண்ணீர் விட்டுக் கதறுகிறான் ).

சீதை : லக்ஷ்மணா! ஏன் வருந்துகிறாய்? நீ என் செய்வாய். என் தலை விதி. பர்த்தாவே காட்டில் விட்டுவா என்று கட்டளையிட்டல், நீ அவரின் உத்திரவின் படி செய்யவேண்டியவன்தானே. பெண்களுக்கு, நாயகன் அன்பொன்றே பிரதானமானது. அதற் கெப்பொழுது பாத்தியமில்லாதவளானேனோ, அப்பொழுதே பிராணனை இழந்தவள் தானே. கொஞ்சமும் என்னைப் பற்றி நீ சஞ்சலமடைய வேண்டாம். நீ சுகமாய் அயோத்தியாபுரிக்குச் சென்று, உமதண்ணாவிடம் என் நமஸ்காரத் தையும் சொல். கணவன் அன்பிழந்த காதகியாகிய நான் இறந்தேனென்றே நிச்சியித்துக் கொள்ளவும் சொல். இப்பிறப்பில் என்னைக் கைவிடே னென்றவர் அவ்வாக்குக்கு விரோதமாக ஒண்டியாகக் காட்டில் விட்டதால், ஏக பத்னி விரதரென்ற சொல்லுக்கு மாறாக நடந்த போதிலும் தோஷமில்லையென்று நான் ஞாபகப் படுத்திச் சொல்லச் சொன்னதாகவும் மூன்று முறை கூறு. இனி அவ்வளவுதான். எனக்கு ஒன்றுந் தோன்றவில்லை. மயக்கமாகயிருக்கிறது

( சீதை மூர்ச்சையாகிறாள் )

லக்ஷ்மணன் : அந்தோ! பரிதாபம்! பரிதாபம்! அன்னையாரோ மூர்ச்சித்து விட்டார்கள். எழுந்தால் மிகு வருத்தமெனக்குண்டாகும். என்ன செய்யலாம். காலவிதி. யாவற்றிற்கும் கடவுளிருக்கிறார். இவ்வேளையில் நான் பிரிவதுதான் நல்லது. ஒ

வனதேவதைகளே! ஆகாயவாசியராகிய சந்திர சூரிய இந்திராதியரே! ஆகாயவாணியே! பூமாதேவியே! நீங்கள் தான் அனாதையாகிய அன்னையாருக்குத் துணை. வேறொருவருமில்லை. துஷ்டமிருகங்களாலும், மற்ற விஷ ஜெந்துக் களாலும், யாதொரு இடையூறும் நேராவண்ணம் காப்பாற்றி ரக்ஷிப்பீர்களென்று முற்றும் நம்பி இக்கர்ம சண்டாளனாகிய நான் இந்த மாதோ ஸ்திரீயை ஒண்டியாக விட்டுப் போகிறேன். துணையாயிருங்கள்! (என்று பிரிய மனமின்றி அழுதவாறு லக்ஷ்மணன், தள்ளாடிப் போகிறான்)

சீதை : (மூர்ச்சை தெளிந்து சுற்று முற்றும் பார்த்து, யாருமில்லாததால் தவிக்கிறாள்)

(பாட்டு)

பல்லவி

விதியாலே நான் பாவி தனிமையாக
மிகமனம் வாடி வேதையானேனே
ஐயையோ வேதையானேனே (வி)

அனுபல்லவி

நாதர் கோபமானபோது
நாரியர்க்கு வாழ்வேது
ஆதலால் இவ்வேளை தானென்னாவி
சோரலானது (வி)
தாரணியிலுள்ளோர் நிந்தை
சாற்ற நாதர் கேட்டிட்டார்.
கோரமான ஆரண்யத்தில்
கொண்டு வந்து விட்டிட்டார் (வி)
வீட்டிலே காணேனே கற்ப
வேதை மிஞ்சுதே துக்கம்
காட்டு மிருகங்கள் கூச்சல்
கேட்ட துக்கம் ஓர்பக்கம் (வி)

சீதை வ-ம் : ஐயோ! என்னைப் போல் ஒரு பாவி இவ்வுலகிலுண்டோ? தாய், தந்தை, அண்ணன், தம்பி, உற்றார், சுற்றார், மாடு, மனை வாழ்வு அணிபணியாவும், நாயகரேயல்லாமல் பெண்-களுக்குப் பாக்கியம் வேறேது? நாயகன் அன்பிற்குப் பாத்யமில்லாத நான் உயிரோடு

இருந்தென்ன இறந்தென்ன? ஒரு பலனுமில்லை. அக்கினி சாக்ஷியாக மணம் செய்து கொண்ட மனையாளுக்கு, நம்மையன்றி வேறொரு ஆதரவுமில்லையென்று கொஞ்சமேனும் கருணை செய்யாமல், காட்டில் ஒண்டியாக விட்டுவாவென்று கட்டளையிட்ட நாயகரும் வன்நெஞ்சரல்லர். அவர் கட்டளையைக் கொடிய செய்கை யென்றெண்ணாமல் கற்பிணியாகிய என்னை இங்குத் தனியாக விட்டுச் சென்ற இளைய லக்ஷ்மணனும் வன் நெஞ்சனல்லன். நாயகனால் நிராகரித்து நீக்கி வனத்தில் விட்டவுடனே பிராணனை விடாமல் இன்னும் உயிரோடு இருக்கும் நானல்லவோ வன் நெஞ்சுடையவள்? ஆ! விதியே! நீ இன்னும் என்ன கொடுமைகளைச் செய்யக் காத்திருக்கிறாயோ? நானறியேன். ஐயோ! எங்குப் பார்த்தாலும் மிருகங்களின் கர்ஜ்ஜனை களல்லவோ கேட்கின்றன! எனக்குப் பயங்கரமாகத் தோன்றுகிறதே! இனி என்ன செய்வேன்? எங்குப் போவேன்? யாரைக் காண்பேன்? புருஷனால் நீக்கப்பட்ட ஒருத்தியைப் பிறந்த வீட்டாரும் பெருமைப்படுத்த மாட்டாரே. ஏனிங்குத் தனியாக வந்தாயென்று யாராவது கேட்டால் என்ன செய்வேன்? கணவனால் நீக்கப்பட்டு வந்தேனென்றால் கேட்டார் நகையார்களா? ஐயோ! என் பொறி கலங்குதே. புத்தி மயங்குதே. காதடைக்குதே. நாவும் வரளுதே. ஏதேது சகிக்க முடியாது. ( மயங்கி வீழ்கிறாள் )

( வால்மீகி தோற்றம் ) ( ஒரு புறம் வால்மீகி மஹரிஷி வருகிறார் )

வால்மீகி : அஹம் பிரஹ்மாஸ்மி! காணப்படுவதெல்லாம் அழியும். உலகம் நிலையற்றது. மாலைக் காலத்திலே கயிறு அரவாகத் தோன்றுவது போல அக்ஞான திருஷ்டியால், பிரஹ்மமே, உலகமாகக் காணப்படுகிறது. கயிறென்று தெளிவாகக் கண்ட பின், அரவு தோற்ற முண்டாகாதவாறு போல ஞான திருஷ்டியில் உலகமெனத் தோன்றாது. பிரம்ம மயமேயாம். இவ்வற்புதமான ஞானம் எளிதில் கிட்டாது. பற்பல பிறப்புக்களில் ஈட்டிய சாதன சதுஷ்டியம் ஒன்று கூடினால் சற்று ஞான முதிக்கும். ஞானத்தையடைய யோகம் வேண்டும். யோகத்தையடைய கிரியை வேண்டும். கிரியையை யடைய சரியை வேண்டும். அதனாலேதான்

"விரும்பும் சரியை முதல் மெய்ஞானமுள்ள வெல்லாம் அரும்பு, மலர், காய், கனிகளன்றோ பராபரமே!" என்று முற்றத்துறந்த முனிவர் கூறினார். அரும்பே மலராகி, மலரே காயாகி, காயே கனியாவது போலச் சரியையே முடிவில் ஞான நிலைக்கு வந்து சேருவதாகும். ஞானமென்றாலும் அறிவென்- றாலும் பொரு- ளொன்றே. அறிவையறிவது பொருளென வருளிய பெருமாளே, என்னும் திவ்ய போதத்தைக் கவனித்தால் உண்மை விளங்கும். "அந்த காரத்தையோர் அகமாக்கி மின்போல் என் அறிவைச் சுருக்கினவனார்" என்றதால், பெரிய இருட் கூட்டத்தில் சிறிய மின்னல் போல், அஞ்ஞானம் நிறைந்த அகத்தில், அறிவு சற்று தோன்றுகின்றதாம். அப்படித் தோன்றிய அறிவை உடனே போக்கிவிடாமல், அதிக கவனத்தைச் செலுத்தினால், அறிவு மயமாக நிற்கலாம். இதற்குத்தான் "நிலைத்த புத்தியைப் பிரியாதே" என்றார் திருப்புகழிலும். ஆகையால் நிலைத்த புத்தியாகிய சமாதியோடு கூடி ஆத்மானந்த- மடைந்து நித்திய சுகம் பெறுவோமாக!

சீதை : ( வீட்டிலே காணேனே ) ( பாட்டு கேட்கிறது )

: ( வால்மீகி உற்றுக் கவனிக்கிறார் )

வால்மீகி : அந்தோ! ஈதென்ன தீனஸ்வரம்? ஸ்திரீ குரல் போலல்லவோ கேட்கிறது! யாரது? என்ன துக்கம் சம்பவித்தது? இந்நிர்மானுஷ்யமான ஆரண்யத்தில் ஒண்டியாக வந்து ஏன் புலம்புகின்றாள்? நல்லது நம் ஞானதிருஷ்டியால் அறிவோம். ( மூக்கில் விரலை வைத்து ) ஓகோ அறிந்தேன். அறிந்தேன்! இது தேவரகஸ்ய விருத்தாந்தம். பூர்வம் நான் அநாகரீக வனச்சர கிராதன ஜீவஹிம்சை செய்து திரியும்போது வாக்குப் பயிற்சியில்லாததால் தாரகமந்திரமாகிய ராம நாமோச் சாடனம் செய்ய முடியாத நிலைகண்டு, மராமரத்தைச் சுட்டிக்காட்டி, அதன் பெயரையே இடைவிடாமல் மீண்டும் மீண்டும் சொல்லி வரும்படி செய்து, அம்மராமரச் சொல், முன் பின்னாக, ராம ராமாவென்னும் உச்சாடன. மந்திர மொழியாக என்னைப் புனிதப்படுத்திய நாரத மஹா முனிவரது உபதேச மொழியால்.

திரிகால உணர்ச்சி பெற்று, வன்மீகமென்னும் கரையான்புற்று மூடும்படியாகத் தேக உணர்ச்சியற்று சதா நிஷ்டாபரனாகி இருபக்ஷி மூலமாக என் வாக்கில் உற்பத்தியாகிய ஸ்லோகார்த்தங்காண அது பிற்கால நடையாய் வரும் ஸ்ரீமத் ராமாயண காவியமான, தேவப் பிரசாத ஞான சாஸ்திர இதிகாசமாக முடிந்தது. அதன் சம்பந்தமான, சகலலோக நடையும் சீர்திருத்தமாவதற்கு வீண் ஆரோபமான அபவாதத்தை முன்னிட்டு, தான் அறிந்தும் அறியாததுபோல மானுஷ்ய ஜெனன மோஹாந்த காரத்துக்குட்பட்டு நடிப்பவனாக ஸ்ரீராம பிரான் ஜனகபுத்திரியை லக்ஷ்மணனால் இக்காட்டில் கொண்டு வந்து விட்டிருக்கிறான். இச்செய்கையும் நான் பாக்கியசாலியாவதற்கு ஒரு ஹேதுவன்றோ? தன்யனாகினேன்! தன்யனாகினேன்! வேறு வனத்தில் விட்டிருந்தால் நான் முறைக்குரல் கேட்கவும் அழைத்துப்போய் ஆதரிக்கவும் முடியாதல்லவா? நல்லது! இப்போதே தக்க தேறுதல் சொல்வி என் ஆஸ்ரமத்திற்கு அழைத்துப் போய் பிரஸவ சிகிச்சை வகைகளுக்கு அன்னிய பர்ணக சாலை முனிபுங்கவரின் மனைவிமார் களைச் சகாயம் செய்யவும் ஏற்படுத்துகிறேன். ( அருகில் சென்று ) அம்மா! ஜானகி! வருந்தாதே!

பாட்டு

சீதை : பார்த்து ரக்ஷிக்க வேணும் தேவரீரே கண் ( பார்த்து )
பாரிலவதிப்படும் ஏழை என்னைக் கண்
பார்த்துக் கண்ணீர் விட்டு வந்து துன்பப்பட்டு
வாடிமெலிந்து வருந்துமென் இக்கட்டு ( பா )
பெண்ணாகயிங்குப் பிறந்தாரிலென்போலே
பேதை யொருத்தியில்லையே ஆதலாலே ( பா )

வ - ம் : அம்மா ஜானகி! உன் விருத்தாந்தத்தை எல்லாம் ஞானதிருஷ்டியால் அறிந்தேன். கவலைப்படாதே! என்ன செய்யலாம்! மும்மூர்த்திகளையும் விதி விடாது. அதனாலன்றோ "உள்ளிய தெள்ளிய-ராயினும் ஊழ்வினை மெள்ள நுழைந்துவிடும்" என்று பெரியோர்கள் கூறுகின்றனர். சுகம் வந்த போது மகிழ்தலும், துக்கம் வந்தபோது விசனித்தலும், அறிவுடையோர்க்காகாது. ஆகையால் நான் சொல்வதைக் கேள். காலானுகூலப் பிரகாரம் நீ இந்த வனத்தில்

கொஞ்ச காலம் வசிக்க வேண்டிய நிலைமையடைந் திருக்கிறாய். கூடிய சீக்கிரம் நற்கால முனக்குக் கிட்டும். அப்போது உன் பிராண நாயகர் உன்னை அழைத்துக் கொள்வார். தற்கால நிலையைக் குறித்து வருந்தாதே!

"ஊழிற் பெரு வலியாவுள மற்றொன்று
சூழினுந் தான் முந்துறும்"

என்பதற்கிணங்க, பூர்வ ஜென்ம வினையைப் பிரம்மேந்திர தேவராதியரும் அனுபவித்தே தீர வேண்டும்.

கவி

"சந்திரனுக்குடலூனம்
தனதனுக்கோர் கண்ணூனம்
தருவீ நீழல்

இந்திரற்கோ பகற்குறியாம்
இயமனுக்கோ புழுக்காலாம்,
இரவியீன்ற
மைந்தனுக்கோ கால் முடமாம்
வனசனுக்கோர் தலைகுறையாய்
வாழ்வானாகில்
பந்தமுள்ள மானிடரை விதிவிடுமோ
ஆலவாய்ப் பதியுள்ளானே"

வ-ம் : என்பதால், அவரவர் செய்த வினையை அனுபவித்தே தீர வேண்டும். இடையில் நீக்க எவராலுமாகாது. ஆகையால் என் சொற்படி கேட்டு என்பின்னே ஆஸ்ரமத்திற்கு வந்து சேர்! உனக்கு வேண்டிய பல சௌகரியங்களையும் செய்விக்கிறேன். வா! வா!! போகலாம்.

சீதை : அப்படியே ஸ்வாமி! ( போகிறார்கள் )

( 9ஆவது காட்சி முடிவு )



## 10-ஆவது காட்சி

ஆலோசனை மண்டபம் ( தனியே ராமர் அமர்ந்திருக்கிறார் )

நாடக மாந்தர்கள்: லக்ஷ்மணன், ராமர்.

பாட்டு

லக்ஷ்மணன் : ( வருகிறான் )

: ஒண்டியாகக் காட்டில் விட்டு
வந்தேனண்ணா.. நான் ( ஒ )
உள்ளம் நொந்து வாடுகின்ற
தையோ புண்ணாய் ( ஒ )
கண்டிதமான கட்டளையாலே
கற்புள்ள என்தாயைத் தம் சொல்லைப்போலே
அனல் மெழுகாக அன்னையுள்ளமுருக
ஆறுபோல் ஓடியே கண்ணீர் பெருக நான் ( ஒ )

ராமர் : லஷ்மணா! என்ன சமாச்சாரம்? அழாதே! சொல் சீக்கிரம்!

வ - ம்

லக்ஷ்மணன் : அண்ணா! திருவை நிகர்த்த தங்கள் தேவியாரைப் பஞ்சமாபாதகரிலும், மிஞ்சிய பாதகனாகிய நான் தங்கள் கட்டளையை மறுப்பதற்கஞ்சி ஒண்டியாக வனத்தில் விட்டு வந்தேன். எப்பொழுது ஜானகி மாதோஸ்திரி இந்த அயோத்யா பட்டணத்தை விட்டு நீங்கினார்களோ அப்பொழுதே இங்குள்ள சகல செல்வங்களும் அடியோடே நீங்கிவிட்டன வென்று நினையுங்கள். இனி என்ன அரசு? இனி யென்ன வாழ்வு? எல்லாம் கனவாகவே முடிந்தன. அன்னையார் தங்களுக்கு ஒன்று ஞாபகப்படுத்தச் சொன்னார்கள். அதாவது இப்பிறப்பி லென்னைக் கைவிடேனென்று என்னைப் பாணிக்ரஹணம் செய்தவர் வாக்குத் தந்த பிரமாணத்தை நீங்கி என்னை ஒண்டியாக வனத்தில் விட்டதினால் ஏகபத்னி விரதமென்னும் நிலையைத் தவறினாலும் தோஷம் சம்பவிக்காது என்று முக்காலும் சொல்லும்படி என்னிடம் கட்டளை யிட்டார்கள் அண்ணா!

( பாட்டு )

ராமர் : காண்பேனோ நானினி
சீதா தேவியைக் ( காண் )
சேண்பதியோர்கள் வாழ்த்தும்
திவ்ய கற்புள்ள மாது
பூண்பழிக்கஞ்சி வனம்
போக்கி விட்டேன் எண்ணாது ( காண் )
குற்றங்கபடொன்றில்லாக்
குணத்தில் சிறந்தவளைச்
சற்றும் இரக்கமின்றித்
தனியாக்கினேன் அவளைக் ( காண் )

வ - ம் : ஆ. ஜானகி! இனி என்ன செய்வேன்!

( மயங்கிச் சாய்கிறார் )

( 10ஆவது காட்சி முடிவு )



11ஆவது காட்சி

நாடக மாந்தர்கள்: சீதை, வால்மீகி

ஆஸ்ரமம். ( சீதை குழந்தையை முனிவர் பக்கம் வைத்துப்போகிறாள். வால்மீகி நிஷ்டையிலிருக்கிறார் )

( சீதா திரும்பிக் குடத்துடன் வந்து )

சீதை : நான் ஜலந்திரட்டப் போனபோது ஒரு அற்பக் குரங்கினமானது, தன் குட்டியை மடியில் கட்டிக் கொண்டே ஒரு மரத்தினின்றும் மற்றொன்றுக்குத் தாவியது. அந்த ஜெந்துவுக்குத் தன் குழந்தை யிடமிருக்கும் பிரியத்தைக் காட்டிலும் என் குழந்தையிடம் வைத்த பிரியம் குறைந்து விட்டதா? அதனிடம் உள்ள அன்பு நம்மிடமில்லையா? இதோ போய் நானும் என் குழந்தையைத் தூக்கிக்கொண்டு போகிறேன்.

( முனிவர் பக்கமுள்ள குழந்தையைச் சீதா தூக்கிக்கொண்டு போகிறாள் )

வால்மீகி : ( நிஷ்டை கலைந்து பார்த்துத் திடுக்கிடுகிறார் ) ஆஹா! இங்கிருந்த குழந்தையை எங்கே காணோமே! நம்மை நம்பியல்லவோ குழந்தையை ஜானகி வைத்துவிட்டு ஜலம் திரட்டப் போயினள். ஐயோ! துஷ்ட மிருகங்கள் வந்து கௌவிக் கொண்டு போயினவோ.. ( சிந்தித்து ) எது எப்படியான போதிலும், இனி நாம் ஆலோசிக்க நேரமில்லை. ஜானகி வரும் வேளையாயிற்று. வந்த மாத்திரத்தில் குழந்தையைக் காணோ மென்ற ஏக்கத்தால் உடனே பிராணனை இழந்தாலும் இழப்பாள். ஆகையால், அவள் வருவதற்குள் தர்ப்பைப் புல்லாகிய, குசையை எடுத்து நமது மந்திர பலத்தால் அக்குழந்தையைப் போல் சிருஷ்டித்து விடுவோம். அதுதான் சரி. ( ஒரு குழந்தை சிருஷ்டிக்கிறார் ).

சீதை : ( நீரெடுத்து வருகிறாள். மற்றொரு குழந்தை இருப்பதைக் கண்டு அதிசயிக்கிறாள் )

பாட்டு

: ஆச்சரியந்தானிது, ஆகா குழந்தை ஏதிது
அச்சு அடையாளங்களென்
வத்ஸன் போல் தோணுது (ஆ)
நீலமேகஸ்யாமளமும்
நீண்டதாம் கரங்களும்
நிச்சயமாய்ச் செந்தாமரைப்
புஷ்பம் போலக் கண்களும் (ஆ)
மந்தஹாஸமாம் வதனம்
வாயழகு மோஹனம்
வாழும் என் நாதன் ரூபம் போல்
காணுதே இந்தத்தினம் (ஆ)
இக்குழந்தை போலதான்
இருக்கு வேற்றுமையில்லை
இங்கு பார்க்க வித்தியாசம்
ஏதுந்தோணவேயில்லை. (ஆ)

சீதை வ - ம் : ஸ்வாமி! இதேது! இந்தக் குழந்தை? எல்லாம் என் குழந்தையின் அம்ஸமாகவேயிருக்கிறதே! இது யாருடையது?

வால்மீகி : ஜானகி! இதுவும் உன் குழந்தை தானம்மா. நீ ஜலம் திரட்டப் போனபோது இக்குழந்தையை இங்கு வைத்து விட்டுப் போகப் பார்த்தேன். பின்பு நான் நிஷ்டை கூடி விட்டதால் நீ மறுபடியும் வந்து குழந்தையை எடுத்துப் போனதை நான் என் ஊனக் கண்ணால் பார்க்கவில்லை. சிசுவுக்கு அபாயம் வந்ததாகவே நினைத்து உனக்குப் பிராணாபாயம் வருமெனப் பயந்து தர்ப்பைப் புல்லை எடுத்து உன் குழந்தையைப் போல் சிருஷ்டி செய்து வைத்துவிட்டேன். இதுவும் உன் குழந்தைதான். தடையில்லை. உன் பிள்ளையின் பெயர் லவனானதாலும், அப்பிள்ளைக்குப் பதிலாகக் குசையினால் உண்டாக்கப்பட்டதால் இவனுக்குக் குசனென்று காரணப் பெயராயிற்று. எடுத்துக் கொண்டு போய்ப் பாலூட்டி, சீராட்டி, தாலாட்டி வளர்த்துக் கொள்ளம்மா!

சீதை : (வணங்கி - இரு குழந்தையையும் கொண்டு போகிறாள்)

(11ஆவது காட்சி முடிவு)




வால்மீகி ஆஸ்ரமம் - (வில்வித்தை பயிற்சி பெறுகிறார்கள்)

நாடக மாந்தர்கள்: லவன், குசன், வால்மீகி

<u>பாட்டு</u>

லவன், குசன் : போற்றி நின்றோம் பொற்பாதம்
பூரண மெய் ஞான முறு
போதமோதலானவரே (போ)
சாற்றுஞ் செந்தமிழ்ப் பாட்டு
சங்கீதத் துதி கேட்டு
ஏற்று வழு தள்ளிப் போட்டு
எங்களுக்காசீர் வாதம்
இயம்புவீர் கடைக்கண் பார்த்து (போ)

வ - ம் : குருமகராஜ்! நமஸ்கரிக்கின்றோம்.

வால்மீகி : மங்களமுண்டாகட்டும்! குழந்தைகளே! இவ்வாஸ்ரமத்தில் உள்ள சிஷ்யர்களைப்போல ஆசார அனுஷ்டான வகைகளை எங்கள்உயிரைப் போல் காப்பாற்றி வருவதோடு விசேஷமாக நீங்கள் கருத வேண்டியது தனுர் வித்யாப் யாசமே, அதுவே உங்கள் சுதர்மம். அவ்வகையில் இங்குள்ளவர் பின்னடைவர்; அவர்களுக்குத் தன் பிராண ரக்ஷைக்கு மட்டும் வேண்டிய அளவு பயிற்சியுண்டு. அன்னிய பிராணிகளின் ஜீவ ரக்ஷைக்கும் நீங்கள் பாடுபடவேண்டிய தவஸ்யம். அனாவஸ்யமான ஜீவஹிம்ஸை எப்பொழுதும் கூடாதென்று உங்களுக்கு நான் கலா சாஸ்திர மூலமாக உபதேசித்திருந்தாலும் தேகப் பயிற்சிக்கும் அன்னிய ஜீவரக்ஷைக்கும் நீங்கள் உரியவரானதால் அடிக்கடி வேட்டையாடி துஷ்டஜெந்துக்களை வதைத்து நல்ல ஜீவன்களைக் காப்பாற்ற வேண்டும். துஷ்டமிருகங்களை நீங்கள் வதை செய்வதினால் அக்கொலைப் பாதகம் உங்களைச் சாராது. எப்பொழுதும் வீரத்துக்குப் பங்கம் வராமல் நடந்து கொள்வதே உங்கள் முக்ய லக்ஷியமாக இருக்க வேண்டும். மானமும் பிராணனும் ஒன்றைவிட்டு ஒன்று நில்லாமல் கெடுங்காலம் நேரிட்டால், மானத்தைப் பெரிதாக எண்ணிப் பிராணனை இழப்பதற்குச் சித்தமாக நிற்கவேண்டும். தெரியுமா? இனி தனுர் வித்தையைக் கற்பிக்கின்றேன். வாருங்கள்!

லவன் : குருமகராஜ்! தங்களனுக்ரஹம் போல் சகல கலைகளையும் இடைவிடாது அப்பியசிக்கின்றோம். உபதேசியுங்கள்!

வால்மீகி : சிறுவர்களே! இடது கையில் வில்லைப் பற்றிக் கொண்டு பூமியில் ஊன்றி, இடது காலால் மிதித்து வளைக்க வேண்டும். பின் வலது கரத்தால், நாணினை எடுத்து, வில்லின் மேற் குதையில் மாட்டி இறுக்க வேண்டும். அப்பால் தொய்வில்லாமல் வலுவாக யிருக்கிறதா என்று தெரிந்து கொள்ள இவ்விதம் குணத்தொனி காட்டி, பரீக்ஷித்தறிய வேண்டும். வளைந்த வில்லைக் குறி தவறாமல் லக்ஷியத்தில் பாணத்தைச் சேர்க்கு மாகையால், குணத்வனி காட்டுவதாகிய நாண் தெறித்துப் பார்ப்பது தனுர் வித்தைக்கு அத்யாவஸ்யமாகும். பின்னால் நான்கு நிலைகளில் ஒரு நிலையில் நின்று, குறித்த இலக்கை நோக்கி அஸ்திரத்தைப் பிரயோகிக்க வேண்டும். முதலாவது அந்த நான்கு நிலைகளையும் உங்களுக்குக் காட்டிக் கொடுக்கிறேன். கவனமாய்ப் பார்த்துக் கொள்ளுங்கள்!

( செய்கையின் மூலம் காட்டுகிறார் )

இது மண்டல நிலை
மு ஆலிட நிலை
இது பிரதியாலிட நிலை
இது பைசாச நிலை

தெரிந்து கொண்டீர்களா?

இருவரும் : தெரிந்து கொண்டோம்.

வால்மீகி : பரீக்ஷிக்கலாமா?

இருவரும் : தடையின்றிப் பரீக்ஷிக்கலாம்.

வால்மீகி : லவனே! நீ மண்டல நிலையைப் பற்றிச்சொல்லு!

லவன் : குருமகராஜ்! இரு கால்களையும் மண்டலித்துஇரு குதிக் கால்களிலும் பிரஷ்டபாகம்பட இருந்து அம்பு தொடுப்பது மண்டல நிலையாகும்.

வால்மீகி : ஏதோ. செய்கையால் காட்டு!

லவன் : இதோ! ( செய்து காட்டல் )

வால்மீகி : குசனே! நீ பிரதி யாலிட நிலையைப் பற்றிச் சொல்லு!

குசன் : குரு மகராஜ்! வலது காலை முன்னூன்றி இடது காலை மண்டலித்து, பிரஷ்டபாகம் படயிருந்து அம்பு தொடுப்பதே, பிரதியாலிட நிலையாகும்.

வால்மீகி : ஏதோ செய்கையால் காட்டு!

குசன் : இதோ! ( செய்து காட்டுகிறான் )

வால்மீகி : மிகுந்த சந்தோஷம்! வாருங்கள் போகலாம்.

( 12ஆவது காட்சி முடிகிறது )



## 13ஆவது காட்சி

சபா மண்டபம். ( ராமர், லக்ஷ்மணர், பரதர், சத்ருக்னர், வஸிஸ்டர், சுமந்திரர் முதலியோர் )

நாடகமாந்தர்கள்: பரதன், லக்ஷ்மணன், சத்ருக்கனன், ராமர், வஸிஸ்டர்

பரதன் : அண்ணா! நம் நாட்டில் மழை பெய்யாததால், விளைவெல்லாம் பஞ்சமுண்டாகி, குடிகள் எல்லாம் ஆடு மாடுகளை விற்று வயிற்றிற்கில்லாமல் வலசை வாங்கி ஓடுகிறார்கள். வீடுகள் தோறும் அழுகுரல் கேட்கிறது. நாட்டில் கொள்ளை நோய்கள் அதிகரித்துவிட்டன. என்று ஜானகி மாதோஸ்திரீ இந்த நகரை விட்டுப் போனார்களோ அன்றே ராஜ்யலக்ஷ்மியும் அவள் பின் சென்றுவிட்டது. இதற்கென்ன செய்வது?

லக்ஷ்மணர் : என்ன செய்வதாவது? எவர்களாலே ராஜ்யலக்ஷ்மி நீங்கிற்றோ அந்தமூல காரணத்தையனுசரித்துக் காட்டில் விட்ட அன்னையாரைத் தேடிக் கண்டு பிடித்துக் கூட்டி வருவதுதான் தக்கது.

ராமர் : லக்ஷ்மணா! உன்னைக் கேட்கவில்லை. பேசாமலிரு! குருஸ்வாமி! இதற்கேதேனும் யாக கர்மாக்க-ளில்லையா?

சத்ருக்கனன் : யாக கர்மாக்களாவது! சின்னண்ணா சொல்லியபடி அன்னையாரைத் தேடி அழைத்து வருவதுதான் சத்கருமம்.

ராமர் : சத்ருக்கனா! உன்னை யார் கேட்டது? வாயை மூடு! சுவாமி! இதற்கேதேனும் பரிகார முண்டானால் சொல்லுங்கள்!

( தனியாக முன்வந்து )

வஸிஸ்டர் : ரகு நந்தனனோ, ஜானகியைப் பற்றிப் பேசும்போதெல்லாம், இளையவர்களைக் கடு கடுத்துப் பேசுகிறான். ஜனக புத்ரி இந்நாட்டிற்கு வந்தாலொழிய இப்பஞ்சப்பிணி நீங்குவதில்லை. இதற்கென்ன செய்யலாம்? ( யோசித்து ) நல்லது! பார்ப்போம். ( ராமனிடம் வந்து ) இராமச்சந்திரா! இப்பஞ்சம் நிவர்த்தியாக வேண்டுமானால் ஏதேனும் ஓர் தெய்வ காரியப் பிரயத்-தனம்தான் செய்ய வேண்டும். அஸ்வமேத யாகந்தான் அதற்குரியது.

ராமர் : நல்லது! அந்த யாகம் எப்பொழுது செய்ய வேண்டும்? எப்படிச் செய்வது? அதற்கு வேண்டிய வகைகள் என்ன என்பதைத் தெரிவிக்க வேண்டும்.

வஸிஸ்டர் : ரகு நந்தனா! சித்ராபௌர்ணமியே பூப்பிரதக்ஷணத்திற்குப் பரிவிடும் சுபதினம். அதற்குப் பஞ்சவர்ணங்கள் பொருந்திய தாகவும், வட்டம், வையாளி, சிறுநடை, பெருநடை, செம்புட்கதி முதலிய ஐந்து கதிகளுடையதாகவும் இருக்கும் குதிரை வேண்டும்.

ராமர் : நல்லது! அப்படிப்பட்ட புரவி எங்கே கிடைக்கும்?

வஸிஸ்டர் : விபீஷணன் மூலமாக வரவழைக்கலாம். தவிரவும், ராமையா! இல்லறத்தால் பத்தினியின்றிச் செய்யும் எந்தக் காரியமும் சரிவர ஈடேறாது என்றும், அதனால் பிரயோஜனமில்லையென்றும், பெரியோர்கள் கூறுவார்கள். ஆகையால் நீயாக தீக்ஷை வகிக்கும்போது பக்கத்தில் சீதையிருக்க வேண்டிய ஸ்தானத்தில் அவளைப்போல் சொர்ணப் பதுமை ஒன்று செய்து வைக்க வேண்டும். தெரியுமா? வா! அதற்குவேண்டிய ஏற்பாடுகளைச் செய்வோம்.

( அனைவரும் போதல் )

( 13ஆவது காட்சி முடிகிறது )



## 14ஆவது காட்சி

ஆஸ்ரமம். சீதையும், லவகுசாளும்.

நாடக மாந்தர்கள்: லவன், குசன், சீதை

<u>பாட்டு</u>

**லவன், குசன்** : பாதம் போற்றினோம்
பாலர்கள் அன்பாலேயின்று
பக்ஷமுடன் வந்து பக்கத்திலே நின்று (பா)
சீதளாதி குணநிறமோடு
சேருயர் தாமரை மாமலரைப்போல்
சிற்ப மிகுந்த அழகினைப் பெற்ற
அற்புதமிக்க அருமைமேன்மையுற்ற (பா)
(இருவரும்)

**வ - ம்** : அம்மா! நமஸ்கரிக்கின்றோம்.

**சீதை** : மங்கள முண்டாகட்டும்.

(வேறுபாட்டு - தர்க்கம்)

**குசன்** : வேட்டையாடி வருகிறோம் விரைவினில்
விடைதந்தனுப்பச் சஞ்சலம்
வேண்டாமுன் மனதினில் (வே)

**சீதை** : வேண்டாம் வேண்டாம் மிருக வேட்டைக்குச்
செல்ல (வே)
மிக்கவு பயங்கரமுண்டா மங்கு நல்லதல்ல (வே)

**லவன்** : அம்மா அம்மா அச்சமெங்களுக்காகுமா
ஆகா எங்கள் தைர்யம் (அ)
பராக்ரமம் வீண்போகுமா (அ)

**சீதை** : சொன்னேன் சொன்னேன்
துஷ்ட விலங்கோடி வரும் (சொ)
துறத்தினாலும் போகாமல்
எதிர்த்து வேதையைத் தரும் (சொ)

**குசன்** : நாங்கள் கையில்
பிடித்த வில்லும் சொத்தையோ
இந்நாள் விலங்குக் கஞ்சினால்
கற்றதும் தனுர் வித்தையோ

**சீதை** : பாணம் எய்யப்
படித்தாலும் நீர் வேட்டையில்

பழக்கமில்லையாகும் பயம்
மிருகங்குரல் காட்டையில் (பா)

லவன் : சற்றும் அச்சம்
கொண்டிடோமே நாங்களம்மா
தயவுடன் விடை தரவே
வேணுங்கவலை ஏன் சும்மா (அ)

சீதை : ஆச்சாரியரில்லாத இந்த வேளையில்
ஆரணியத்திற்குப் போக
லாகுமோ இந்நாளையில் (ஆ)

சீதை வ - ம் : குழந்தைகளே! "அறவினையாதெனில் கொல்லாமை கோறல் பிறவினை யெல்லாந் தரும்" என்று நீங்கள் படித்தறியவில்லையா? பாவம்! வனத்தில் சஞ்சரிக்கும் விலங்கினங்கள் உங்களுக்கு என்ன துன்பத்தைச் செய்தன? நீங்கள் அனாவஸியமாக ஏன் மிருகங்களை வதைத்துப் பாவங்களைச் சேகரித்துக் கொள்ள வேண்டும்? வேண்டாம்; என் வார்த்தையைக் கேளுங்கள்!

லவன் : அம்மா! எங்கள் வித்தையைப் பரீக்ஷிக்கும் பொருட்டு இப்படி வினவுகிறீர்களா? "புயகமதைத் தேள் புலியைப் பொல்லாத விலங்கையெல்லாம், அயர்வாக அடித்தோட்டல் அவைகள் குணத்தாலன்றோ" என்பதால், பாம்பு, தேள் முதலிய விஷ ஜெந்துக்களையும் புலி, கரடி, சிங்கம் என்னும் துஷ்ட மிருகங்களையும் சிக்ஷிப்பது அவைகளுடைய துர்க் குணங்களால் உலக ஜீவப் பிராணிகளுக்குக் கேடுண்டாகாவண்ண மல்லவா? "ஒருவனால் ஒரு குடும்பம் கெடுவதாயிருந்தால், அவனைக் கொன்று அக்குடும்பத்தை ரக்ஷிக்கலாம். ஒரு குடும்பத்தால், ஒரு கிராமத்தாருக்குக் கேடுண்டாவதாயிருந்தால் அக்குடும்பத்தை நிர்மூலமாக்கி, அக்கிராமத்தாரை ரக்ஷிக்கலாம். ஒரு கிராமத்தாராலே ஒரு தேசத்தாருக்குக் கேடுண்டாவதாகயிருந்தால், அக்கிராமத்தாரை நெருப்பிட்டேனும் அழித்து அத்தேசத்தாரை ரக்ஷிக்கலாம். ஒரு தேசத்தாராலே ஒரு சாம்ராஜ்யத்திற்கே கேடுண்டாவதாக யிருந்தால் அத்தேசத்தாரை வம்ச வேரறுத்து அச்சாம்ராஜ்யத்தை ரக்ஷிக்கலாம்". என்று மனுஸ்மிருதியில் மிகு தெளிவாகக் கூறப்பட்டிருக்கிறதே.

துஷ்டமிருகங்களோ வனசஞ்சாரிகளுக்கும், பாட்டை வழி நடப்போருக்கும் மிகு பயங்கரத்தையும், மனப்பதைப்பையும், ஆறாக்காயத்தையும், சில வேளை மரணாவஸ்த்தையும், உண்டாக்குவதால், அவைகளைக் கொல்வது பாவமாகாது. உலக ரக்ஷையாகிய புண்ணியமே தருவதாகுமம்மா. எங்களுக்கு விடை கொடுங்கள்; வேட்டையாடி வருகிறோம்.

பாட்டு தர்க்கம்

குசன் : குருகற்பித்ததாம் பெரும் வில்வித்தையில்
குறிபயிலுற்றதைத் தெரிவதுமெப்படி
கோர மிருகங்கள் பலகூடும் வனம் சென்று
கூறுபடவாளியெய்து யாவையுமே கொன்று
குறுகி வருவோம், உன
திடம் விடை, யீவாயின்று (குரு)

லவன் : தாமதம் செய்யோம் வனத்தைச்
சார்ந்து வேட்டையாடி
ஜல்தியில் நாங்கள் வருவோம்
தாயுன்னிடம் ஓடி
தடைமொழிவது சரியல்ல விடை
தந்திடம்மா. (குரு)

குசன் : அம்மா! குரு மகராஜ் எங்களுக்குப் போதித்த நீதியில் வேட்டையைத் தவிர்க்கச் சொல்லவில்லை. அது அஸ்திரப் பயிற்சிக்கு முக்யமாக விருப்பதால் அவஸ்யம் நீங்கள் அப்யசிக்க வேண்டுமென்றே வற்புறுத்திக் கூறியிருக்கிறார். அண்ணா! சற்றுமுன் தங்களிடம் கூறிய யாவும் ஆசிரியருடைய போதமேயன்றி தான் கற்பித்துச் சொல்லியதல்ல. இந்த வனவாழ்க்கையுடைய ரிஷி புத்ர வர்க்கங்களுக்கும் எங்களுக்கும் பேதாபேதமிருந்திருப்பதாகவும், அதனால் ஆஸ்ரமவாசிகளுக்கு, எவ்விதம் உயிரைப்போல ஆசார அனுஷ்டான வகைகள் கருதப்படுகின்றனவோ, அவ்விதம் நாங்கள் கருத வேண்டியது, துஷ்ட நிக்ரஹ சிஷ்ட பரிபாலனத்துக்குரிய தைரிய வீரபராக்ரம புஜபலமேன்மைக்குரிய தனுர்வேத அப்யாசமே என்றும் உபதேசித்திருக்கிறார். ஆகையால், கொஞ்சமேனும் தாங்கள் மனசஞ்சலமடையாமல் எங்களுக்கு வேட்டையாடி

வாருங்களென்று விடைகொடுத்தனுப்பப் பிரார்த்திக்கின்றேன் அம்மணி!

சீதை : குழந்தைகளே! குருவானவர் உங்களது சுகர்மம் தனுர்வேதமென்று சொல்லியிருந்தாலும், நீங்கள் அதன் நிலைகளை அக்ஷ்ராப்யாசத்தால் பிரசங்கிக்கக் கற்றிருந்தாலும், அனுபவத்தில் பழக்கமில்லாதவர், அதிலும் வயதில் சிறியவர். கொடிய வனத்திலோ துஷ்ட மிருகங்களின் உபத்திரவ மாத்திரமன்று, கொடிய சண்டாள ராகிய அசுர ராக்கத பைசாச பூதவேதாள வர்க்கத்தினரும் சஞ்சரிப்பார்கள். அவர்கள் நர மாம்ஸப் பக்ஷணப் பிரியர்களானதால் உங்களைக் கண்டதும், சந்தோஷித்துப் பிடித்து விழுங்கி னாலும் விழுங்குவார்கள். அவர்களைப் போரில் வெல்ல இந்திராதி தேவர்களாலுமாகாது. மஹா மாயாவிகள். ஆதலால், என் வார்த்தையைக் கேட்டு வேட்டைக்குப் போகும் பிரயத்தனத்தை விட்டு விடுங்கள். உங்களுக்கு அவஸ்யம் வேட்டையில் இச்சையிருந்தால் யாக கர்மத்தின் பொருட்டு வெளியே போயிருக்கும் முனி புங்கவர் வந்தவுடனே அவரிடம் நானே சொல்லி உங்களோடு துணைக்கு வரும்படி வேண்டி வேட்டைக்கு அனுப்புகிறேன். அதுவரை பொறுமையாயிருங்களப்பா!

லவன் : அம்மணீ! என்ன வார்த்தை சொன்னீர்கள்? நாங்களோ அற்ப ராக்ஷஸப் பயல்களுக்குப் பயப்படுவது? தண்டமேந்திய பிரம்மா, சக்கர மேந்திய விஷ்ணு, சூலமேந்திய சிவன், இவர்கள் மூவரும் ஏக காலத்தில் ஒன்று கூடி எங்களை எதிர்க்கினும், சற்றேனும் அச்சங் கொள்ளாமல் ஆசிரியர் எங்களுக்குக் கற்றுக்கொடுத்திருக்கும் அக்னி யாஸ்திரம், வருணாஸ்திரம், நாகாஸ்திரம், கெருடாஸ்திரம் முதலான எய்படைகளாலும் சக்கரம், தோமரம், வளைதடி, குறுந்தடி, இரும்புக் குண்டு, கப்பணம் முதலான எறிபடைகளாலும், ஈட்டி, வல்லயம், வேலாயுதம், சூலாயுதம், பிண்டி, பாலா முதலான குத்துப் படைகளாலும், அரிவாள், வெட்டுவாள், கண்டகோடரி, சந்த்ராயுதம் முதலான வெட்டுப்படைகளாலும், போராடி அம்மும்மூர்த்திகளையும், புறமுது கிட்டோட அடித்துக் கீர்த்தியை நிலைநாட்டி

வெற்றி மாலை சூட்டி வருவோம். அவ்விதமில்லாது போனால், அம்மணி! தங்களுக்குப் புத்திரராக நாங்கள் ஜென்மித்ததால் பிரயோஜன மென்ன? சற்றேனும் விசனிக்காமல் விடை கொடுங்களம்மா!

சீதை : என் கண்மணிகாள்! "தாய் சொற்றுறந்தால் வாசகமில்லை" என்பதை நீங்கள் தெரியீர்களா? நானெவ்வளவோ புத்திமதிகள் எடுத்துப் போதித்தாலும், இருவரும் ஒரே பிடிவாதமாக வேட்டைக்குப் போக வேண்டுமென்று விடை கேட்கின்றீர்களே. இது தகுமா? ஆசிரியரோ தற்காலம் ஆஸ்ரமத்திலில்லை. அவரில்லாதபோது நீங்கள் வெளியேறினால், அவர் வந்தவுடன் உங்களை எங்கேயென்று என்னிடமல்லவோ கேட்பார்? அப்பொழுது அவருக்கென்ன பதில் மொழிவது? வேட்டைக்குப் போயிருக்கிறார்க-ளென்பேனாகில், பெரியவர் மிகுந்த மனஸ்த்தாப மடைந்து வருந்துவாரே. அவர் கண்ணும் கருத்தும் உயிரும் உங்கள் மேலல்லவோ செலுத்தி யிருக்கிறார். இங்கு வந்தவுடனே உங்களைக் காணாமல் எவ்வளவு விசனிப்பார் என்று ஆலோசித்துப் பாருங்கள்! பெரியோருக்கு வருத்தமுண்டாக்குவது சிறியோர்க்குத் தகுமா? அன்னியர்க்கு, அதிலும் பிரீதியுற்றவருக்கு, நேரிடும் சிரம துக்கதாபங்களை நிவர்த்தி செய்வதன்றோ, நற்குணச் சிறுவர் கடமை. இவைகளைத் தீர்க்காலோசனை செய்யாமல் ஏன் முறண்டு செய்கிறீர்கள்? அவர் வந்து சேரும்வரை பொறுமை யாயிருங்கள்! அப்பால் பார்த்துக் கொள்ளலாம்.

குசன் : அம்மா! ஈதென்ன பேதமை! குருவே எங்களை எப்பொழுதும், திட தைர்ய வீர பராக்ரமி களாவதற்குரிய பயிற்சியைச் செய்யும்படி கட்டளையிட்டிருக்கிறார் என்று முன்னமே தெரிவித்திருக்கிறோமே. அவர் வந்தால் எங்களைக் குறித்து இவ்விஷயத்திற்கு விசனிக்க மாட்டார். நாமில்லாத காலத்திலும், நமது கட்டளையைத் தவறாமல் நிறைவேற்றி வருகிறார்களே என்று மிகு சந்தோஷமடைவார். நீங்கள் புத்ர வாத்ஸல்யத் தினாலே, இப்படி மொழிகிறீர்களே யன்றி வேறில்லை. தங்களுடைய மகிமையை எல்லாம் குரு எங்களுக்கு விஸ்தரித்துக் கூறியிருக்கிறார்.

தங்களுடைய மேலான உன்னத நிலையைத் தாங்கள் அறிந்திருப்பதைப் பார்க்கினும் நாங்கள் விசேஷமாகக் கேட்டறிந்திருக்கிறோம். ஆகையால், மன மங்களமாக எங்களை ஆசீர்வதித்து விடைகொடுத்தனுப்புங்கள் அம்மணி! சூரிய அஸ்தமனத்துக்கு நான்கு நாழிகைக்கு முன்னமே பாத சேவைக்கு வந்து சேருகிறோம் அம்மணி!

(பாட்டு)

லவன் : விடை தந்தனுப்புவாயம்மா - விரைவினிலே
(விடை)
தடை செய்வது மேதுக்கு
தனயர் வில் பயிற்சிக்கு (விடை)

குசன் : தர்க்க மொழி சொல்லாது
தனயரைத் தடுக்காது
இக்கணம் சோகங் கொள்ளாமல்
இசைவு கொண்டு (விடை)

லவன் : அம்மா! இனித் தாமதிக்கலாகாது. சூர்யோதயமாகி எட்டு நாழிகையாகிறது. இன்னும் கொஞ்சம் நேரமானபின் தாங்கள் விடை கொடுப்பீர்களாயின் பிரயோஜனமில்லை. எந்தக் காரியமாயிருந்தாலும், அதற்குரிய காலத்தில் செய்வதுதான் சந்தோஷத்தையும், பிரயோஜனத்தையும் தரத்தக்கது. ஆதலால், தடை சொல்லாமல் விடைகொடுத்து அனுப்புங்கள், அம்மணி!

குசன் : "புருஷராய் ஜெனனமதெடுத்தபேர்
மெய்ஞான போதத்தை யறிவதொன்று
பூமியொடு மிக்க தனவானாதல் ஒன்றலது
பூவலஞ் செய்தலொன்று
தருமவான் ஒன்றலது கீர்த்திமானொன்று, நற்
சற்குண விவேகி யொன்று
சகலரும் புகழ்கின்ற வித்துவானொன்றலது
சங்க்ராம வீரனொன்று
கருதரிய இந்தவகையில்லாத மூடரைக்
காசினியிலேன் படைத்தாய்
கருதுதாய் உதரமும் பார்க்கின்ற பேர்களிரு
கண்களும் செய்தவினையோ"

என்று ஒரு பெரியவர் கூறியுள்ளார். மானுஷ்ய ஜெனனத்தையடைந்த ஒருவன் ஆத்ம ஞானியா யிருக்க வேண்டும். அல்லது திரவ்ய வந்தனாயிருக்க

வேண்டும். இல்லையேல் பூப்பிரதக்ஷணம் செய்தவனாயிருக்க வேண்டும். அன்றிக் கொடைவள்ளலென்று பெயர் பெற்றவனாயிருக்க வேண்டும். மற்ற எவ்வகையிலாவது ஓர் வகையில் கீர்த்தி பெற்றவனாயிருக்க வேண்டும். இல்லாது போனால், நற்குணம் பொருந்திய புத்திசாலியாயிருக்க வேண்டும். அல்லாமல் எவர்களாலும், புகழ்ந்து பேசுவதற்குரிய வித்வானாயிருக்க வேண்டும். இன்றேல் ரணரங்க சூரயுத்த வீரனாயிருக்க வேண்டும். அவ்வெட்டு வகையில் ஒரு வகையுமில்லாதவன் மனிதனாக மதிக்கப்படான். அவனைப் பத்து மாதம் சுமந்து பெற்ற தாயினது வயிறும், அவனைப் பார்ப்பவர்கள் இரு கண்களும் பாபம் செய்ததென்றே கருத வேண்டியிருப்பதால், யுத்த வீரராவதற்குக் காரணமான வேட்டைப் பயிற்சிக்கு மங்களகரமாக விடை கொடுத்தனுப்பக் கேட்டுக் கொள்கிறோம் அம்மா!

சீதை : பாலர்களே! மனமங்களமாக ஆசீர்வாதத்தோடு விடை தந்தேன். ஆனால், நான் சொல்வதைக் கவனமாய்க் கேளுங்கள். அற்பப் பிராணிகளாகிய முயல், மான் முதலிய ஜீவ ஜந்துக்களை வதைக்காதீர்கள். உலகத்துக்குக் கெடுதலையுண்டாக்கும், கொடிய மிருகங்களையே உங்கள் பாணத்திற்கு இலக்காக்குங்கள். மனிதர் அடிச்சுவடு பட்டிராத இருண்ட இடங்களில் பிரவேசியாதீர்கள். செங்குத்தான பர்வதங்களில் ஏறாதீர்கள். உங்கள் தோழராகிய தண்டு, கமண்டு இவர்களிருவரையும், உங்களுக்குப் பாதை காட்டும்படி உடனழைத்துச் செல்லுங்கள். தெரிய வருமா?

லவன், குசன் : அப்படியே அம்மா! சென்று வருகிறோம்.

( இருவரும் போகிறார்கள் )

( 14ஆவது காட்சி முடிகிறது )



## 15ஆவது காட்சி

காடு - லவகுசர் வேட்டை யாடல்

நாடக மாந்தர்கள்: லவன், குசன்

(பாட்டு)

லவன் : புள்ளி மானொன்றதோ
துள்ளியே வோடுது
கொல்ல வேண்டாம் அழகான ஜந்து
புண்ணிய வதி நம் அன்னை சொற்குமாறு
செய்யலாகாதிவ் வனத்தில் வந்து

குசன் : அற்பப் பிராணிகளைக் கொலை செய்வதில்
ஆகுமோ வீர பராக்கிரமம்
அட்டகாசஞ்செய்யுந் துஷ்டமிருகத்தின்
வர்க்கங் கொல்லுவதே கிரமம்.

லவன் : பாய்ந்து கொல்லும் வேங்கை
கொம்பால் குத்தும் பன்றி
பற்றிப் பிடிக்கும் கரடியினம்
பார்த்த குறி தவறாமலே சீக்கிரம்
பாணம் எய்து கொல்லு நீயித்தினம்.

குசன் : வாலை முறுக்கித் தரையிலடித்ததோ
வந்து பாயப் பதுங்குதோர் சிங்கம்
வாளி தொடுத்திதோ காலும் வாலும் போக
வாட்டியதனைச் செய்கின்றேன் பங்கம்

வேறு பாட்டு

லவன் : பாணத்தை எய்து கொல்வோம்
பாய்ந்து கொல்லும் புலி வேங்கை கரடியை (பா)
ஊனுக்கு மற்றோர் உயிர்வதை செய் பொல்லா
ஊக்கமானவையெல்லாந் தாக்கியே நம்
வில்லால் (பா)

குசன் : கொம்பாலே தன் நிழல் குத்தும் மதகரி
கூட்டமெல்லாமின்று கொல்லுவதே சரி
வம்புசெய்யும் மிருக ராஜனும் கேசரி
வர்க்க முற்றிலும் நஷ்ட முற்றிட
இக்கணத்திலுற்றழித்திட (பா)

லவன் : துஷ்டமதங் கொண்டு தோன்றும் விலங்கினம்
துண்டு துண்டாகத் துணித்திட யித்தினம்
இஷ்டமாகவே இசைந்தது என் மனம்
இனியரை நொடியினிலவைகளை
வதை புரியவுமொரு தடையிலை (பா)

குசன் : அற்பப் பிராணிகள் யாவுங் கொன்று தின்னும்
அக்ரம மாக்கள்

அழியச் செய்தோம் முன்னம்
பற்பல வந்து சிதைந்ததங்கம் பின்னும்
பார்ப்போம் வேட்டையாடித்
தீர்ப்போம் உண்டோ இன்னும் ( பா )

லவன் : பாந்தவா! இந்தக் காட்டிலுள்ள துஷ்ட விலங்கினங்களையெல்லாம் கொன்று குவித்தோம். ஆயினும் இத்தோடு வேட்டையை நிறுத்த மனம் இல்லை. நேரமோ அதிகமாயிற்று. அம்மையர் நம்மைக் காணாது வருந்துவார்கள். தாய்மனம் வருந்தச் செய்வோர் புத்திரர்களாக மாட்டார். ஆகையால் நீ முன்னதாகவே கமண்டலனோடு ஆஸ்ரமத்துக்குச் சென்று நமதன்னையாரிடம் நான் பின்வருவதாகச் சொல்லு. நானும் அடுத்த வனத்தில் சற்று வேட்டையாடி விரைவில் வந்து சேருகிறேன். கமண்டலா! தம்பியை ஆஸ்ரமத்-திற்கு அழைத்துக் கொண்டு போ!

( குசனும் கமண்டலனும் போகிறார்கள் )

( 15ஆவது காட்சி முடிகிறது )




காடு - அஸ்வமேதப் புரவி வருகிறது.

நாடக மாந்தர்கள்: குசன், 1ஆவது காவலன், 2ஆவது காவலன், சத்ருக்கனன், கமண்டலன்.

குசன் : ( பார்க்கிறான் ) ( பாட்டு )
இந்தப் பரி மிகு சுந்தரமாகத் தோணு
திதனைப் போல் நான் கண்டதில்லை
ஆ - ஹா - ஹா ( இ )

அந்தச் சூரியன் பரியோ நிறம் பச்சை
அமரேசன் பரிவெள்ளையது கண்டாலச்சை
அடையா தகலா தெனிலோ நிகரே
ஆச்சரியம் ஆச்சரியம் நேர்த்தியது
நேர்த்தியது ( இந் )

பாகவனப்பரிக்கு விருதுகள் பூட்டி
பலகிண்கிணி மணிகள் கழுத்திலே மாட்டி
பகரப்படு சொற்களை நெற்றியிலே
பட்டயமெழுதிக் கட்டி
விட்டனர் புகழைச்சுட்டி ( இ )

குசன் : ஆஹா! இப்பரியின் பட்டயத்தை வாசித்துப் பார்ப்போம்.

( புரவி நெற்றியில் பட்டயத்தை வாசிக்கிறான் )

யாகப் பரி பட்டயம்: அயோத்தி.

"ராஜாதி ராஜ, ராஜகோலாகல, உத்தண்ட தூர்த்தண்ட, விஜயப் பிரதாப, பரராஜ பயங்கர, ரணரங்கசூர, தீரவீர பராக்ரம, அயோத்தியாபுரி ராஜ்யாபிஷேக, சூர்ய வம்ஸ, ரகு குலோற்பவ, தசரத நந்தன, கௌசல்யாபுத்ர, ராவணசம்ஹார, ராக்ஷஷ குலகால, ஹனுமத் சுக்ரீவ வானர வீர ராதி சேவித, துஷ்ட நிக்ரஹ, சிஷ்ட பரிபாலன, கோதண்ட தீக்ஷா குரு, ஸ்ரீராம பிரா னால் பூப் பிரத க்ஷணத்திற்கென்று விடப்பட்ட அஸ்வமேதப் புரவியிது. இதனைக் கண்டோர், வணங்கிக் காணிக்கைக் கப்பங்களைச் செலுத்திப் பேட்டி கண்டு செல்லவும். சுத்த வீரராகிய பலாட்டியர், இக்குதிரையைப் பிடித்துக் கட்டித் தம் சுவாதீனத்தில் வைத்துக் கொண்டு, அஸ்வர-க்ஷகத்துக்காகப் பின் வந்திருக்கும் ஸ்ரீராம பிரானின் கனிஷ்ட பாந்தவனாகிய, பரராஜ-கோளரி சத்ருக்கன மகாராஜனோடு யுத்தம் செய்து, தம்புஜபல பராக் ரமத்தை நிலை நிறுத்திக் காட்டுவாராக! வலி குன்றியோர், முன் நிபந்தனைப்படி காணிக்கை செலுத்திச் சமாதானம் செய்து கொண்டு சௌக்ய-மடைவாராக".

இங்ஙனம், வீரராகவன்.
அயோத்யாதிபதி சாம்ராட்.

குசன் : அவனாரடா ஸ்ரீராமன்? ராவண சம்ஹாரனாம்; தீரவீர பராக்ரம முடையவனாம்; ராக்ஷஸ குலகாலனாம்; ரணரங்கசூரனாம்; குதிரையில் பின் வருபவன் சத்ருக்கன மகாராஜனாம்; பரராஜகோளரியாம்; இதென்ன பைத்தியம். தற்புகழ்ச்சி செய்து பட்டயம் எழுதிக் குதிரை நெற்றியில் கட்டி விட்டிருக்கிறார்கள். இவர்களுடைய புகழை அன்னியர் புகழ்ந்து பேசுவதா? அல்லது தங்களுடைய பெருமையைத் தாங்களே புகழ்ந்து திரிவதா? யாரடா மான்யம் விட்டதென்றால், நானே விட்டுக் கொண்டே-

னென்றானாம். நல்லது; குதிரையின்பின் ரக்ஷணார்த்தமாக வருகிற வில்லாளி, சத்ருக்கனனுடைய சௌரியத்தையும் என் சௌரியத்தையும், அரை க்ஷணத்தில் பகிரங்கப்படுத்துகிறேன். இக்குதிரையைப் பந்தித்தா லொழிய யுத்தம் நேராது. ஆதலால்;

( பாட்டு )

காட்டு வாழை மரத்திலே
கட்டுவேனிந்தப் பரியை
கண்டு சண்டை போடுவோர்க்குக்
காட்டுகிறேன் வலியை - ( கா )
மீட்டியே போகும் வீரரு முண்டோ
விட்டனர் தமக்குற்ற மமதையைக் கொண்டோ
வாட்டுகிறேனவரை
என் சொல்லுக்கிரண்டோ
மண்டை துண்டு துண்டு பட
அண்டையில் நெருங்க அஞ்சிக்
கண்ட கண்டயிடம் ஓடக்
காண்பேன் விடுவேனோ ( காட்டு )

( குதிரையைப் பிடித்துக் காட்டு வாழை மரத்தில் கட்டிவிடுகிறான் )

குசன் : குதிரையைக் கட்டிவிட்டோம். நல்லது; சைனியங்கள் வரட்டும். அதுவரை சற்று இளைப்பாறுதலாகச் சயனித்திருப்போம்.

1வது காவலன் : ( இராக்கதக் கூட்டங்களும் காவலர்களும் வருகிறார்கள் ) அடே சிறுபயலே! எங்களை யாரென்று நினைத்தாய்? நாங்கள் இலங்கையில் பிறந்த ராக்ஷஸர்கள். மானிடரைக் கண்டால் உடனே பக்ஷித்து விடுவோம். நீ எங்கள் கடைவாய்க்கும் பற்றாது போவாய். உன்னை விழுங்குவதில் பயனில்லை என்று சும்மா நிற்கிறோம். ஸ்ரீராம பிரானின் அஸ்வமேதப் புரவி ரக்ஷகனாகிய சத்ருக்கன மகாராஜாவுக்குப் படைத்துணையாக எங்களை விபீஷண மகாராஜா அனுப்பியிருக்கிறார். நீ புத்தியில்லாத குழந்தைப் பருவத்தையுடையவனாதலால் முன்பின் ஆலோசிக்காமல் விளையாட்டுத் தனமாக எங்கள் குதிரையைப் பந்தித்ததுமல்லாமல், நாங்கள் வந்தது கண்டும் அலக்ஷியமாகயிருக்கிறாய். குதிரையை அவிழ்த்துவிட்டு விட்டு ஓடுகிறாயா? அல்லது உன்னை விழுங்கட்டுமா?

2ஆவது காவலன் : அடே பொடிப்பயலே! அவமதித்து நிற்பது சரியா? நீ ஒரு சுண்டு வில்லைக் கையில் பிடித்ததினாலே பெரிய அதிரதவீரனாகி விட்டாயோ? வீராதி வீரரும், அஞ்சுதற்குரிய தகாத காரியத்தில் ஏன் தலையிட்டுக் கொண்டாய்? ஸ்ரீராம பிரானது விஜய பராக்ரமத்தைக் கேட்டால் மூன்று லோகங்களும் நடு நடுங்குமே. அவராலே விடப்பட்ட புரவியைப் பிடித்துக் கட்டுவதற்கு நீ எம் மாத்திரம்? சே ச்சே! மதியில்லாதவனே! குதிரையை விட்டு ஓடிப்பிழை! இல்லாது போனால் உன்னைக் கொன்று, குதிரையைக் கொண்டு போவோம். என்ன சொல்லுகிறாய்?

(பாட்டு)

குசன் : கட்டினார் வேறொருவரில்லை
காண்பீர் நானடா - என்
கையிலிருந்தும் விடுவிக்க
உம்மாலாகாது தானடா..
கணை பலபல உமதுடலது துளைபட
விரைவினில் விடுவேனடா
கனத்த பெருமுலையைச் சிதைப்பது சிறுவுளி
கருதுவீருரைத்தேனடா
கண்ட விடங்களிலெங்கினும்
உங்கள் நிணங்கள் குவிந்திடச் செய்வேனடா.
கற்ற வித்தைகளை முற்றும் காட்டியுத்த
களம் நிற்கத் தடையென்னடா - யுத்த
களம் நிற்கத் தடையென்னடா - (கட்)

வ - ம் : அடே! நாயடிக்கும் தோட்டிப் பயல்களைப்போல் கையிலே தடிகொண்டு நிற்கும் மடப்பயல்களே! இக்குதிரையைப் பந்தித்தவர் என்னையன்றி வேறுயாருமிலர். என்னை நீங்கள் அறியீர்கள். என் கையிலகப்பட்ட குதிரையை விடுவிக்க அரிஹரப் பிரம்மாதி தேவர்களாலுமாகாது. இப்பொழுதே என் கையிலுள்ள வில்லை வளைத்து நாணிபூட்டி, டங்காரம் செய்து தீக்ஷண்யமான பலபாணங் களைத் தொடுத்து, உங்கள் உடலைச் சல்லடைக் கண்களாகத் துளைத்து, யுத்தகளம் முழுவதும் ரத்தவெள்ளம் பெருகி வழிந்தோடச் செய்வதோடு, உங்கள் உடலின் தசையை வெட்டிப் பார்வதம் போல் குவித்து, மிருகப் பக்ஷிகளுக்கு, இரையாக்கச்

சித்தமானேன். என்றாலும், நீங்கள் குதிரையைத் தேடும் ஊழியக்காரர்கள் என்பதாக நினைத்துப் பச்சாதாப முண்டாகியது. அதனால் உங்களைக் கொல்லாமல் உயிர்ப் பிச்சை தந்திருக்கிறேன். வலுவிருந்தால் சண்டை செய்து மடியுங்கள். உங்கள் பெண்டாட்டி பிள்ளைகள் முகத்தில் விழிக்க வேண்டுமென்று ஆசையிருந்தால் விரைவாகச் சென்று இக்குதிரை ரக்ஷகனான உங்கள் தலைவன் பரராஜ கோளரி என்று தன்னைப் புகழ்ந்து எழுதிய சத்ருக்கனனை என்னிடம் அழைத்துக் கொண்டு வந்துவிட்டு நீங்கள் ஓடிப் பிழையுங்கள். அவனுடைய வீரப் பிரதாப சௌகரியங்களெல்லாம் வெட்ட வெளிச்சம் பட்டப்பகலாக விளங்கச் செய்கிறேன். ஜல்தி! ஜல்தி!! ஓடிப் போயழைத்து வாருங்கள்!

( வீரர்கள் போதல் )

( சத்ருக்கனன் வருதல் )

சத்ருக்கனன் : ( குசனைப் பார்த்து நின்று ) இச்சிறுவனைப் பாரத்தால் நமது அண்ணா ஸ்ரீராமரின் உருவம்போல் காணப்படுகிறான். அன்னை ஜானகியாரைக் கெற்பமோடுங் காட்டில் விட்டாரன்றோ! அவர் ஈன்ற குழந்தையாகவே இருக்கலாமென்று நினைக்கிறேன். நல்லது! விசாரித்தறிவோம்.

( தர்க்கப் பாட்டு )

சத்ருக்கனன் : அப்பா சிறு குழந்தாய்
யார்நீ உன் பெயர் யாது
இப்பாரில் அன்னை தந்தை
யாரோ யாவையும் ஓது. ( அ )

( பாட்டு:முடுகு )

குசன் : நீ அடமிகுத்ததோர் அணிவகுத்திடு
சைனியத்ததிகாரியா
படையெடுத்தொரு பகைதொடுத்தபின்
படுகளத்திலொப்பாரியா.

சத்ருக்கனன் : சின்னஞ்சிறு குழந்தாய் உன்மீது கோபமில்லை
முன்னம் உன் வரலாறு மொழிவாய்
கேட்பேனச் சொல்லை ( சி )

குசன் : நீ எழுதி விட்டிடு பரிபிடித்தனன்
எனை எதிர்க்க நீ வில்லெடு
பொழுதிருக்கையில் அமர் முடித்திட
நினைவு முற்றதுஞ் சொல்லிவிடு (நீ)

சத்ருக்கனன் : மழலைச் சொல்லுகளின்னும்
மாறவில்லையுனக்கு
இழிவுன்னோட மராட எண்ணமில்லையெனக்கு
(ம)

குசன் : சிறியனுக்குள்ள தைரியத்தினை
அரைநொடியில் காட்டுறேன்
அறிய யித்ததி தனுவளைத்திடு
கணைதொடுத்துன்னை வாட்டுறேன் (சி)

சத்ருக்கனன் : குழந்தாய்! ஏன் சினங் கொள்கிறாய்? உன் அபிப்பிராயப்படி நான் யுத்தம் செய்கிறேன். நீ யார் என்ற விவரத்தை முன்னமே கேட்டுக் கொள்ளப் பிரியப்படுகிறேன். சும்மா சொல்லு!

குசன் : என் பேர் குஜன். என் தாய் பேர் சீதாதேவி. எங்களய்யன் பேர் வால்மீகி. எடு வில்லை! யுத்தம் செய்வோம்.

சத்ருக்கனன் : உன் தந்தையின் பெயரென்ன?

குசன் : இன்னுமென்ன தாமதப்படுத்துகிறாய்? குற்றம் செய்தவனை நியாயாதிபதி விசாரிப்பதைப்போல் நீ விசாரிப்பதற்கெல்லாம், நான் பதில் சொல்லிக் கொண்டுவர வேண்டுமோ? நீ அரசனானால், எனக்கென்ன? உன் ராஜ்யத்திலுள்ள குடிகளிடம் தான் உன் அதிகாரம் செல்லும். சே! நில் யுத்தத்திற்கு!

சத்ருக்கனன் : அப்பா சிறு குழந்தாய்! நீ என்ன விதமாக இழிவாகப் பேசினாலும், என்மனம் உன்மீது பச்சாதபமடைகிறது. பல் விழுந்து முளையாத பருவமுடையவனாக யிருக்கிறாய். பால் மணம் மாறாத பாலகனாகக் காணப்படுகிறாய்; உன் மிருதுவாகிய சரீரத்தில் குரூர தீக்ஷண்யம் பொருந்திய அஸ்திரங்களைப் பிரயோகித்துச் சிசுகாதகனாவேனோ? உன் தந்தை பெயரையும் தெரிவித்தால் நான் மிகுந்த சந்தோஷமடைவேன்., உனக்கிஷ்டமில்லையானால், அதுவும் சொல்ல வேண்டாம். நீ சுகமாக உன் தாய் கண்டு மகிழ

உன் இருப்பிடம் போய்ச் சேர். எங்கள் அஸ்வமேதப் பரியை நீ பிடித்து இந்தக் காட்டு வாழை மரத்தில் கட்டியதைப் பற்றி வருத்தமில்லை. நாங்கள் அவிழ்த்துக்கொண்டு போகிறோம்.

குசன் : ஆஹா! என்ன சொல்லினை? இக்குதிரையை அவிழ்த்துக் கொண்டா போகப் போகிறாய்? பேஷ்! பேஷ்! இந்தக் குசன் கையில் தனுவோடு நிற்கும்போது குதிரையை அவிழ்த்துக் கொண்டு போக உன்னாலாகுமோ? நீங்கள் மாத்திரமல்ல, உங்களுக்குச் சகாயமாகச் சுவர்க்க மத்திய பாதாள லோகங்களிலும் உள்ள வீராதி இந்திராதி தேவரும் ஒருங்கு கூடி வந்தாலும் பஹதூர் சிங்கக் குட்டி பார்க்கிறேன் ஒரு கை. சே! நில் யுத்தத்துக்கு!

( பாட்டு )

வில்லை வளைத்து நாணி பூட்டினேன்
என் வீர முனக்கு
விளங்கவே டங்காரம் காட்டினேன் ( வி )
வெல்லுவதற்கு வல்லவனுக்குச்
சொல்லுமெதற்கு நில்லுசமர்க்கு
மிகுத்த பலத்தையடக்கி யொடுக்கி
வெருட்டியடித்து முடுக்க மிணக்கி
வீரனாமெனைப் போரிலே வெல்ல
யாருமே இல்லை பாரு நேரினில்
வேள் விப்பரி நான் விட்டிட
நேருற்றிலன் யூகத்தறி
நீ பற்றிடலேயித்தினம்
வீணிச் செயல் ஓடிப்பிழை - ( வில்லை )

குசன்: : இதோ. எனது வில்லின் சிறு நாண் ஒலியைக் கேட்டாயா?

வ - ம் : இப்பொழுதாவது தெரிந்துகொள் சிறுவனுடைய புஜபல பராக்ரமத்தை ஐயோ! பாவம்! ராம-னென்பவன் மதிகெட்டு, நாமே சாம்ராஜ்யாதிபதி; நமக்கு நிகரான சுத்த வீரர் ஒருவருமிலரென்று, மமதை கொண்டு பட்டய மெழுதிக் குதிரை நெற்றியில் கட்டிப் பூப்பிரதெக்ஷணம் செய்விக்க விட்டு, உன்னை ரக்ஷகனாக அனுப்பினானோ? அவனொரு ஈவெட்டி வீரன். நீ ஒரு. கொசுக் கொல்லும் வீரன். அஸ்வமேதயாகம் நன்றாய்

நிறைவேறும்! என்ன மதியீனம்! நான் விட்டாலன்றோ குதிரைய நீ கொண்டு போவாய்? குதிரை வேள்விச் சாலை சேர்ந்தாலன்றோ யாகம் நிறைவேறும்? யாகம் நிறைவேறினாலன்றோ உங்கள் இஷ்ட காமியார்த்தமாகிய பலன் உண்டாகும்? அது ஏது? இந்த ஜென்மத்திலில்லை. இன்னும் ஏழு ஜென்மம் முயன்றாலும், முடியாத காரியம். அஸ்வயாகப் பலனெல்லாம் உங்களுக்கு மரணயோகப் பலனாக முடிந்தது. உங்களெல்லோரையும், காலாக்கினிருத்ரனைப் போல, பஸ்மீகரமாக்காமல், நானிந்தவிடத்தை விட்டுப் பெயரவும் மாட்டேன். ஏன் யோசிக்கிறாய்? எடு வில்லை! உன் சமர்த்தைப் பார்ப்போம்.

சத்ருக்கனன் : அடே! நாவு தாங்கிப் பேசு. சிறுவனென்று பார்க்கப் பார்க்க, வாய் மிஞ்சிப் பேசுகிறாய். என்னை இன்னாரெனத் தெரிந்தனையோ? திரிலோக கண்ட தசகண்டனாகிய ராவணாதியரை வம்ச நாசஞ் செய்து வெற்றிமாலை சூடிய ஸ்ரீராமனின் கனிஷ்ட பாந்தவன். சத்ருக்கனனாக்கும். நீ எம்மாத்திரம்? ஐந்து வயது நிரம்பாத அறியாப் பாலகனாக இருக்கிறாய். உன்னாலென்ன முடியும்? - இங்கு நிற்போர்களெல்லாம், நான் கருணை பாராட்டிப் பேசுகிறேனென்று பார்த்துக் கொண்டிருக்கிறார்கள். இல்லையேல் இதற்குள் நீ செத்த இடம் புல் முளைத்திருக்கும். இன்னும் உன்மேல் இரக்கமே உண்டாகிறது. இப்பவும் சொல்கிறேன். குதிரையை விட்டு உன்னிருப்பிடம் போய்ச் சேர். இல்லையேல் எனக்குக் கோபமுண்டாகும். ஆஹா!

குசன் : ஓஹோ! நீ யுத்த வீரனாகயிருந்தால் இப்படிப் பேசமாட்டாய். எப்பொழுது பகை நேர்ந்ததோ அப்பொழுதே சிறியவர், பெரியவர் பெண்டு பிள்ளை என்று பாராமல் எதிர்த்து நிற்பதுதான் யுத்த வீரனுக்கழகு. நீ, இவன் சிறியவனாகயிருக்கிறான். வார்த்தையாலேயே மிரட்டினால், அந்த மிரட்டலுக்குப் பயந்து விட்டுவிடுவான், நாம் குதிரையைக் கொண்டு போகலாமென்று நினைத்து வாக்குவாதம் தொடுக்கிறாய். நீ வாய்ப்பந்தல் போடுகின்ற ஆசாமியென்று நான் தெரிந்து கொண்டேன். சீ! வீண் வார்த்தை எதற்கு? இதோ நான் விடுகிற பாணங்களைத் தடுத்துக்கொள் பார்ப்போம்.

(பாட்டு)

குசன் : ஆஹா! இதோ பாருன் மார்பே இலக்காக
அக்கினி யாஸ்திரத்தைத் தொடுத்தேன்.

சத்ருக்கனன் : அட்டியின்றி விட்ட அக்கினி யாஸ்திரத்தை
வருணாஸ்திரத்தால் கெடுத்தேன்.

குசன் : வில்லினைப் பற்றும் இடக்கை இலக்காக
விட்டேனிதோ ஒரு மேகாஸ்திரம்.

சத்ருக்கனன் : மேகாஸ்திரமும் சிதறுண்டு போகவே
விட்டேனான் பாரொரு வாய் வாஸ்திரம்

குசன் : கழுத்துமிலக்காக அர்த்தச் சந்த்ர பாணம்
கையிலெடுத்திதோ எய்துவிட்டேன்.

சத்ருக்கனன் : காணாமல் அர்த்தச் சந்த்ர பாணம் போக
இக்காலையில் நான் இருளாஸ்திரம் விட்டேன்.

சத்ருக்கனன் : ஆகா! என்ன அற்புதம்! இச்சிறுவன் அம்பு அறாத் தூணியிலிருந்து அஸ்திரம் எடுப்பதும், தொடுப்பதும், விடுப்பதும், கண்ணுக்குத் தெரியவில்லை. இவனது கரவேக சரவேகம் என்ன வென்று சொல்வது? இவ்வளவு சிறு வயதில் தனுர்வித்தை கற்பித்த ஆசிரியன் யாராயிருக்க லாம்? பேஷ்! பேஷ்! இவனை வில் யுத்தத்தில் வெல்ல முடியாதென்றே நினைக்கிறேன். இவனை அதிக்ரமித்து நாம் கொன்றுவிடக் கூடாது. தந்திரமாகக் கைப்பிடியாகப் பிடித்துக் கட்டிக் கொண்டு போய் ராமண்ணா முன்னிலையில் விடுவதே நலம். ஆகையால், இவன் கையிலுள்ள வில்லைக் கீழே வைக்கும்படி தந்திரமாய் ஏமாற்றி மல்யுத்தத்திற்கழைத்து ஓடுவது போல் அபிநயித்துத் தேர்க் காலில் லகுவாய்க் கட்டிக் கொண்டு போவோம்.

குசன் என்ன யோசிக்கிறாய்? சிறுவனுடைய தடக்கை எப்படியிருந்தது? இவ்வளவு நேரம் நடத்திய யுத்தமெல்லாம் தனுர் வேதத்தின் அறிவருக்கந்தான்! இனிமேலிருக்கிறது. அவைகளையும் சற்று நேரத்திற்குள் உனக்கு வாசித்துக் காட்டுகிறேன். மயங்காதே! நாவரட்சியாகயிருக்கிறதோ? அப்படியானால் தாக சாந்தி செய்து கொள்! அதுவரையில் நான் ஒன்றும் செய்யவில்லை. என்ன யோசிக்கிறாய்?

சத்ருக்கனன் : நான் ஒன்றும் யோசிக்கவில்லை. வில்யுத்தமேயன்றி வேறுயுத்தம் உனக்குத் தெரியாதென்று மதிக்கின்றேன். ஏன் அப்படித் தானே?

குசன் : எல்லா வித யுத்தங்களும் எனக்குத் தெரியும். வாள் யுத்தம் செய்வோமா? கதாயுத்தம் செய்வோமா? துவந்த யுத்தம் செய்வோமா? முஷ்டி யுத்தம் செய்வோமா? எந்த யுத்தம் நீ செய்ய விரும்புகிறாயோ அதே யுத்தம் செய்ய எனக்குச் சம்மதமே. சொல் சீக்கிரம்!

சத்ருக்கனன் : மல் யுத்தம் செய்கிறாயா?

குசன் : இதோ நிற்கிறேன் வா!

( இருவரும் சண்டை செய்கிறார்கள். பின்பு சத்ருக்கனன் ஓடுகிறான் )

குசன் : எங்கே ஓடுகிறாய்? ( தந்திரமாகப் பிடித்துக் குசனைத் தேர்க்காலில் கட்டி விடுகிறான் )

சத்ருக்கனன் : அடே அதர்மா! நீ ஒரு யுத்த வீரனா? வில்லில் என்னை வெல்ல வலியின்றி, மல் யுத்தத்திற்கழைத்து வஞ்சகமாக ஏமாற்றி என்னைக் கட்டுகின்றாயே! துஷ்டா! உனக்கு யுத்தமுறை கற்பித்த ஆசிரியனாரடா? இதுதானோ உன் ஆண்மைத்தனம்? சீ! போ! இனி உன்னிடத்தில் என்ன வார்த்தையிருக்கிறது?

( கமண்டலன் பயந்து ஆஸ்ரமத்துக்கு ஓடுகிறான் ).

( 16ஆவது காட்சி முடிகிறது )



## 17வது காட்சி

ஆஸ்ரமம் ( குசன் கட்டுண்டதைக் கமண்டலன் வந்து சீதையிடம் சொல்லி விடுகிறான் )

நாடக மாந்தர்கள்: சீதை, லவன்

( புலம்பல் ) ( பாட்டு )

சீதை : அப்பா மகனே அருமைச் சுதனே நான்
இப்பாரிலுன்னை ஐயையோ இழந்தேன்
இங்கு மிக மெலிந்தேன் - கண்ணீர்
பொங்கி உணர்வழிந்தேன்.
ஏழை மாது - வாழ்வதேது - ஏங்கி மனமும்
நொந்தேன் ( அ )
வேட்டையாட விடை கேட்டபோது தர

மாட்டேன் கூடாதென்று மீட்டும் மறுத்தால்
காட்டுக்கு நீ போவாயோ.. குதிரையை
மாட்டிக் கட்டலாவாயோ..
கட்டுப் பட்டுத் தட்டுக் கெட்டு
கண்மணியே நோவாயோ (அ)

சீதை : ஆ! வத்ஸா! கண்மணி! நான் என்ன செய்வேன். வேட்டைக்குப் போகலாகாதென்று எவ்வளவோ தடுத்தேனே! என் வார்த்தைக்கு இணங்கி-யிருந்தால், இவ்வளவு கேடு சம்பவித்திருக்காதே. உன் அண்ணன் சமீபத்தில் இருக்கிறான். அவனோடு நீ இருக்கிறவரை உனக்கு ஒரு துன்பமும் சம்பவிக்காதென்று நினைத்தல்லவோ பாவி உன்னை வேட்டைக்கு அனுப்ப மனமிசைந்தேன். அவனை விட்டு நீ ஏன் பிரிந்தாய்? உயிருக்குயிராகிய உன்னைப் பிரிய அவனும் எப்படிச் சம்மதித்தான்? பாலகா! அஸ்வ மேதப் பரியை நீயேன் பிடித்துக் கட்டினாய்? அதனாலன்றோ ஆபத்து விளையலாச்சு. என் கண்மணி! இனி உன்னழகிய திருமுகத்தைப் பார்க்கும் பாக்கியம் கிட்டுமா? ஆ! பாலகா! (அழுகிறாள்)

(அது சமயம் லவன் வருகை)

லவன் : சந்தேகமில்லை! என் அன்னையின் குரல்தான் இது. தம்பி முன்னமே சென்று நான் பின் வருவதாகச் சொல்லியிருப்பான். இவ்வளவு நேர மாகியும் நான் வரவில்லையென்றே என் மாதா வருத்தங் கொண்டு புலம்புகிறார்கள். நல்லது சமீபத்தில் போவோம். அம்மணி! இதோ! நான் வந்து விட்டேன். வருந்த வேண்டாமம்மா!

சீதை : பாலகா! உன்னை நம்பியனுப்பிய சிறுவனாகிய உன் தம்பியை நீ ஏன் பிரிந்தாய்? ஐயோ! அநியாயமாக அவனை இழக்கும்படி நேர்ந்ததே. நான் என் செய்வேன் கண்மணி?

லவன் : அம்மா! என்ன இப்படிச் சொல்கிறீர்கள்? நான் முன்னதாகவே கமண்டலனோடு தம்பியை இங்கனுப்பி வைத்தேனே! இன்னும் வந்து சேரவில்லையா? என்ன? கமண்டலா, எங்கேயடா குசன்? அம்மணி. என்ன சமாச்சாரம்? சொல்லுங்கள் சீக்கிரமாக!

சீதை : கண்மணி! நான் என்னவென்று சொல்வேன். கமண்டலனோடு குஜன் நமது ஆஸ்ரமத்தை நோக்கி வந்து கொண்டிருக்கும்போது, யாரோ ஓர் அரசன் பூப்பிரதக்ஷணம் செய்யவிட்ட அஸ்வமேதக் குதிரையைக் கண்டானாம். அதைப் பிடித்துக் காட்டு வாழைமரத்தில் கட்டி, அந்த அஸ்வக் காப்பாளரையெல்லாம் கொன்றானாம். அவர்கள் சேனாநாயகர் கோபங்கொண்டு, யுத்தம் செய்து தந்திரமாய் ஏமாற்றி உன் தம்பியைத் தன் தேர்க்காலில் பிடித்துக் கட்டிக் கொண்டு போகிறானாம். இவ்விபரங்களெல்லாம், கமண்டலனே எனக்குச் சொன்னான்; ஐயோ! அருமையான என் குழந்தையை என்று பார்ப்பேன்?

(பாட்டு)

லவன் ஆஹா என்ன?
என் தம்பியைத் தேர்க்காலில்
கட்டிப் போன பயல்
தலையைச் சேதிப்பேன்
தலையைச் சேதிப்பேன் - அவன் தலையைச்
சேதிப்பேன்
தக்க விதமாக யுத்தத்தைச் செய்து மென்
வெற்றியைச் சாதிப்பேன்
தடையில்லை தடையில்லை
தாயே இனி நீ நோவதேனம்மா
தாமதமேன் விடை ஜல்தியிலே கொடு
ஜல்தியிலே கொடு
அவன் தன் சமர்த்தை வாட்டி
நேரில் - என் சமர்த்தைக் காட்டி
சேனை - பின்புறவும் ஓட்டி
வெற்றியின் புகழை நாட்டி
மீட்டு குஜனைக் கூட்டி வருவேன்
மிக்க வருத்தமதுற்று நினைத்து நீ
வேதை கொள்ள வேண்டாம் (எ)
எத்தனை பேர் வந்தெதிர்த்தாலும் அஞ்சாமல்
என் கையில் வில்லினை எடுப்பேன்.
எண்ணிக்கையில்லாத அம்புக் கொம்புகளை
ஏற்றியே நாணியில் தொடுப்பேன்.
தொடுத்தெங்கும் தீசிந்திட விடுப்பேன்.
விடுத்தெல்லோருயிரையும் கெடுப்பேன்.
கெடுத்தின்றும் வருவோரைத் தடுப்பேன்.

தடுத்திங்குன் பாதந்தேடி யடுப்பேன்.
இதிலேது தடை கிடையாது
மனம் பதறாது நல்லவிடை யோது
ஏனிது வேளையிலே வொரு தாமதம்
நானிளை யோடு மீளுவேனாகையால்
இங்குச் சொல்வாய் ஆசி (என்)

லவன் : அம்மா! சிறு பிராயனான என் தம்பியை யுத்தத்தில் ஏமாற்றிப் பிணித்துப்போன துஷ்டப் பயல் எவனோ அவனின் தலையைச் சேதித்து அவனுக்குச் சகாயமானவர்களையும், கொன்று குவித்துத் தம்பியை மீட்டுக் கூட்டிக் கொண்டு வருகின்றேன். தாங்கள் யாதொன் றிற்கும் சஞ்சலப்பட வேண்டாம். நான் யுத்தத்திற்குப் போய்வர மனமங்களமாக ஆசீர்வதித்து விடைதரப் பிரார்த்திக்கின்றேனம்மணி.

சீதை : என் அருமைக்குழந்தாய்! இளையவனாகிய உன் தம்பியைப் பிரிந்த துக்கம் ஆறாத நிலையிலுள்ள என்னை நீயும் பிரிந்து போவதென்றால், என் பிராணன் நிலை நிற்குமா? பகைவரோ மஹா சுத்தவீரராகயிருப்பார். மேலும் சைன்ய பலமுள்ள வர்கள் அநேக அஸ்திராதி கருவிகளும் ரதகஜதுரக பதாதிக் கூட்டங்களுமுடையவர்களாயிருக்கிறார் களாம். அவர்களோடு நீ ஒண்டி, அதிலும் சிறுவன், எப்படியவர்களோடு யுத்தம் புரிவாய்? வேண்டாம். என் வார்த்தையைக் கேள்! அய்யர் வால்மீகர் வரட்டும். இதற்குத் தகுந்த ஆலோசனை செய்வோம்.

லவன் : அம்மா! என்ன இப்படிச் சொல்லுகிறீர்கள்? குருவினது அனுக்ரஹமும், எனது திடகாத்ர தேக பலமும், நினைத்ததைச் செய்து முடிக்கும் மனோ தைர்ய பலமும் ஏவின வேலையைச் செய்யும் உண்மையான ஊழியன் போன்ற மந்திராஸ்திர பலமும் ஒன்றுகூடி இருக்கின்றன. இவற்றோடு தங்களது அசீர்வாத பலமும் கூடினால் வேறு சகாயமும் எனக்கு வேண்டுமோ? மன்னர்-மண்டலீசர்-அதிரதர்-சமரதர்-அர்த்தரதர்-மஹாரதர்-அணித்தலைவர்- படைத் தலைவர்-தண்டத்தலைவர்-யூகத் தலைவர்-கெஜாரூடர்-அஸ்வாரோஹணர், இவர்கள் எல்லோரும் ஒருங்கு கூடி, என்மீது நானா விதமான போர் தொடுத்

தாலும், அவர்களால் எய்யும், விடுபடை விடாப் படைகளாகிய அஸ்திர சஸ்திரங்களை யெல்லாம் கேவலம் ஒரு சில்லம்பால், நடுப்பாதையில் கண்டித்து, ஒன்று, பத்து, நூறு, ஆயிரம், லக்ஷம், கோடி, சங்கம், மஹா சங்கம், அற்புதம், நிற்புதம் என்று புறப்படக்கூடிய ஒரு மந்திராஸ்திரமாகிய பேரம்பால், பஸ்மீகரப்படுத்தி என் தம்பியை மீட்டுக் கொண்டு வராமல் போவேனோ? எதற்காகக் கவலை கொள்ளுகிறாய் அம்மா?

(பாட்டு)

ஆசீர்வதித்தருள்வாய்
எனதம்மா மன மகிழ்வாய் (ஆசீ)
வாசவனோடு தேவர்கூடி வந்தாலும்
வாட்டிப் புறமிட வோட்டுவேன் முக்காலும் (ஆசீ)

சேனைப்படைகள் சிதறியரண்டோட
தீட்டுவேன் வெற்றியைக் கேட்டோர்கள்
கொண்டாட (ஆசீ)
தாயே இனிமேலும் தாமதிக்கலாமோ
தம்பியை விட்டுச் சகித்திருக்கப்
போமோ (ஆசீ)

வ-ம் : அம்மா! தடை செய்ய வேண்டாம். விடை கொடுங்கள்!

சீதை : கண்மணி! சிறியவனாகிய உன்னை ஒண்டியாகப் பகைவர்கள் சேனா சமுத்திரத்தில் போய் யுத்தம் செய்ய எப்படியனுப்புவேன்? என் மனம் மிகு சஞ்சலத்தை யடைகிறதே! நானென்ன செய்வேன்?

லவன் : அம்மா! தங்கள் மகிமையைத் தாங்கள் அறியாமல் பேசுகிறீர்கள். குரு உபதேசத்தால் முற்றும் நான் அறிந்திருக்கிறேன். உலகம் சக்தி மயமென்கிறது ஸ்ருதி, இனி யுக்தியாலே பார்ப்போ மென்றாலோ உலகில் தோன்றிய ஒவ்வொரு புருஷனும், கல்வி, செல்வம், பலம், இம்மூன்று நிலையையும் அடைய வேண்டியது அவஸ்யம். கல்வியில்லாத ஒருவனை, சரஸ்வதி கடாக்ஷமில்லாதவனென்று சொல்லும் வழக்குண்டு. அல்லாமல், பிரம்மகடாக்ஷ மில்லாதவனென்று சொல்லும் வழக்கில்லை. செல்வமில்லாத ஒருவனை லக்ஷிமி கடாக்ஷ மில்லாதவனென்று சொல்லும் வழக்கமுண்டே

யல்லாமல் விஷ்ணு கடாக்ஷமில்லாதவனென்று சொல்லும் வழக்கில்லை. பலமில்லாத ஒருவனைப் பராசக்தி கடாக்ஷமில்லாதவனென்று சொல்லும் வழக்கமுண்டேயல்லாமல் சிவகடாக்ஷம் இல்லாத வனென்று சொல்லும் வழக்கமில்லை. இவைகளி னால் மும்மூர்த்திகளும், ஸ்திரீ ரூபமாகிய தத்தம் சக்திமார்களினாலே, தங்களது ஸ்ருஷ்டியாதி தொழிலை நடத்தும் வல்லமைக்குள்ளடங்கி இருக்கிறார்கள் என்பது நன்கு விளங்குகிறது. சிவமெனும் பொருளும் ஆதி சக்தியோடு சேரின் எத்தொழிலும் வல்லதாம். "இவள் பிரிந்திடில் இயங்குதற்கு அரிதரிது என மறையிசைக்குமால்" என்னும் போதமும் இதனை வலியுறுத்தும். இம் மூன்று சக்திகளும், ஒருங்கு கூடி நீர் அவதரித்திருப் பதாக வால்மீக பகவான் எனக்கு உபதேசித் திருக்கின்றார். ஆகையால், அம்மணி! உம்மால் ஆகாத காரியம் இவ்வுலகில் ஒன்றில்லை. இப்பொழுதே உமது அனுக்ரகத்தால் ஓர் ஆயுதம் எடுத்து என் கையில் கொடுத்து ஆசீர்வதித்து அனுப்பினால் துஷ்டப் பகைவர் எவ்வளவு பலாட்டியத்தோடு கூடினவரானாலும், ஒரு கை பார்த்து வெற்றி பெற்றுத் தம்பியை மீட்டுக் கொண்டு வருகிறேன். அம்மா! காலந்தாழ்க்க வேண்டாம். தம்பியைக் கட்டிக்கொண்டுபோன துஷ்டன் வெகுதூரம் போவதற்குள் நான் போய் அவனை வழி மறித்து மடக்க வேண்டும். ஜல்தி விடை கொடுங்கள் அம்மா!

சீதை : தனயா! சுத்த வீரனாகிய நீ சற்றேனும் அச்சங் கொள்ளமாட்டாய். வெற்றியே பெறுவாய். தடையில்லை. இதோ நான் கொடுக்கும் ஆயுதங் களைப் பெற்றுக் கொள்! இதோ முறியாத வில்; அறாத நாணி; ஒழியாத அம்பறாத் தூணி. இக் கோதண்டம் மஹாதேவப் பிரசாதமுடையது. பிரம்மனுடைய காண்டீபமென்னும் வில்லும், விஷ்ணுவுடைய சாரங்கமென்னும் வில்லும், சிவனுடைய பிநாகமென்னும் வில்லும் இந்த வில்லுக்கிணையாகாது. நாணி தளர்த்தினா லல்லாது உருவியோடாது. இவ்வம்பறாத் தூணியிலுள்ள அஸ்திரங்களெல்லாம். மஹா மந்திராஸ்திரங்கள். எடுக்க எடுக்கக் குறைவுபடாது. ஒன்று அக்ஷயமாக வளர்ந்து கொண்டே வரும்,

பிரயோகித்த பாணங்கள் தனித்தனி உரிய லக்ஷியத்தைப் பார்த்து வீழ்த்தி அசுத்தம் நீங்க சப்த சமுத்திரத்திலும் மூழ்கி ஸ்நானம் செய்து மீண்டும் தூணியிலே வந்து சேரும். இவை நிற்க உனக்கு நானிப்பொழுது கூறும் நீதி போதத்தை மறவாது எப்பொழுதும் ஞாபகத்தில் வைத்துக் கொள்ள வேண்டும். அதாவது உன்னோடு எதிர்த்து யுத்தம் செய்து, தோல்வியுற்று, புறமுது கிட்டோடுபவர் மீதும் கையில் ஒன்றுமின்றி நிராயுதனாக நிற்பவர் மீதும், நீ பாணப் பிரயோகம் செய்யக் கூடாது. பகைவர்கள் உனக்குப் பயந்து பாதத்தில் வீழ்ந்து வணங்கு வார்களாயின் அவர்களை ஆதரிக்க வேண்டுமே யல்லாமல், அவர்மீது கோபங் கொள்ளலாகாது. ஆயுதமில்லாததினாலே ஆபத்து நேர்ந்ததற்கு வருந்தி நிற்கும் யுத்த வீரரைக் கண்டால் அவருக்கு அப்போது ஆபத்தை விளைவிக்காமல், அவர் விரும்பும் ஆயுதத்தை உதவி அப்பாலே அவரோடு போர் தொடங்க வேண்டும். தாகவிடாய்ப்பட்டே னென்போரையும் பசிப் பிணியுற்றேனென் போரையும், கருணை செய்து யுத்தகளம் விட்டுப் போக்க வேண்டும். பகைவர்கள் யுத்த களத்தில் பின்வாங்காது உயிர் விடச் சித்தமாய் மானங் காக்கும் வலியுள்ளவராகக் காணப்படின் அவர்கள் அபஜெயத்துக்குக் கைகொட்டி நகைக்கலாகாது. பெருத்த யுத்தத்தில் ஆபத்து நேருமென்றிருந்தால் அப்பொழுதுதான் மந்திராஸ்திரப் பிரயோகம் செய்யவேண்டுமே யல்லாமல், கேவலம், அற்பச் சண்டைகளுக்கெல்லாம் இவற்றை உபயோகப் படுத்தலாகாது. சில்லம்பே போதுமானது. நானிப்பொழுது சொல்லியவற்றையெல்லாம் வேத மொழியாக நம்பி நடந்துகொள். இன்னுமொன்று: நில்! உலகிலுள்ள சகல சக்தியையும் திரட்டி உருவாக்கினேன். இதன் பெயர் உக்ர வீரசக்தி. இதற்கு நிகர் இதுவேயன்றி வேறில்லை. இதனைத் தொடுத்தால் சர்வ சம்மாரகாலத்தில் நாசத்துக்கு நடுக்கம் கொள்வதைப் போல், சகல லோக ஜீவப் பிராணிகளும் நடுங்கும். சாமான்யத்தில் இதனைக் கையிலெடுக்க வேண்டாம். உன்னாலே மேல் யுத்தம் நடத்தக்கூடாத நிலை வருமேயானால், அப்பொழுது எடுத்து என்னை நினைத்து உன் பகையை முடித்துவிடு. அதோடு யுத்தம் முடியும். உடனே உன் தம்பியோடு இங்கு வந்து சேர்!

இனித் தாமதிக்க வேண்டாம். எனது பூர்ண ஆசீர்வாத பலமுண்டு. விஜயீபவா! விஜயீபவா! விஜயீபவா!

(பாட்டு)

சீதை : ஆசீர்வதித்தேன் நீ சென்று வா
அஷ்ட திசை கூடினாலும்
வெற்றி பெறுவாய் மென்மேலும் (ஆ)
மாசில்லாமல் நான் சொல்லிய
வார்த்தையொன்றும் மறவாது
வைத்துக் கொள் மனந்தனிலே
மைந்தனே குறை வராது
தூசிபோல் பகைவரைத்
தொலைப்பாய் ஜெயமுந் தப்பாது
சொன்னேன் தம்பியை மீட்டுச்
சுருக்கில் வருவாயிப்போது (ஆ)

(சீதை லவனுக்கு ஆசீர்வதித்து ஆயுதங்கள் கொடுத்தனுப்புகிறாள்)

(17ஆவது காட்சி முடிவு)




யுத்த களம் (காடு)

நாடக மாந்தர்கள்: லவன், சத்ருக்கனன், குசன், லக்ஷ்மணன், பரதன்

(பாட்டு)

லவன் : நில்லடா நில்லடா உன்னைக்
கொல்லாமல் எனது தேரைச்
செல்லவுமிங்கு விடேனடா - அடா
நெஞ்சுரமிஞ்சி என்தம்பியை நீ கட்டிக்
கொண்டு போவதேனடா - அடா
நிச்சயமாக உனக்கின்று வந்து
நேர்ந்த தனர்த்தம் தானடா - வில்லை
நீட்டிக்கணை பூட்டுவேனடா - உன்னை
வாட்டிப் போரில் மாட்டுவேனடா
நிகழ்த்துவதைக் கேட்டும் நீ
நிறுத்தாமல் திருடன் போல்
ரதத்தினைச் செலுத்தலேனடா - அடா (நில்)

வசனம்: யாரடா அவன் என் தம்பியைத் தேர்க்காலில் கட்டிக் கொண்டு போகிறவன்? துஷ்டா! மூர்க்கா!

பதிதா! நிர்லஜ்ஜா! நீ தேரைச் செலுத்தாதே! நிறுத்து! உன்னை எளிதில் விடுவேனென்று நினையாதே! நல்லது; என்தம்பியை எதற்காகக் கட்டிக் கொண்டு போகிறாய்?

சத்ருக்கனன் : ஓ! இதென்ன ஆச்சர்யம்! இதோ நிற்கும் சிறுவனைப் பார்த்தால் இத்தேர்க்காலில் கட்டியிருக்கும் சிறுவனைப் போலவே தோற்றப் படுகிறான். நிறம், குறி, அச்சு, அடையாளம், தேக வாகு, உயரம், பருமன், நடை, உடை, வகைகளில் வித்யாசம் காணப்படவில்லை. இத்தேவாம்சப் புதல்வர்களைத் தவஞ் செய்து பெற்ற புனிதவதி யார்? இரட்டைப் பிள்ளைகளாகவா பெற்றிருக் கிறார்கள்? அப்படி இரட்டைப் பிள்ளை பெறுவது உலக இயற்கையானாலும் இப்படி எவ்வகையிலும் வித்யாசமில்லாமல் பெறுவது அபூர்வ சம்பவமல்லவா! இவர்களிருவரும் எனதண்ணா ஸ்ரீராமச்சந்திரரைப் போலன்றோ விளங்கு கின்றார்கள்! இதென்ன பெரும் விபத்தாக முடிந்தது? வந்து நிற்பவன் கட்டுப்- பட்டவனுக்கு மூத்தவனென்றல்லவோ சொல்லுகிறான்! இளையவனிடத்தில் யுத்தம் செய்து பட்டபாடு நமது நெஞ்சறியுமே. அவன் கையில் வில்லோடு நின்றிருப்பானாகில் என் பராக்ரம விஜயம் பலிக்குமோ? தந்திரமாக வன்றோ மல்யுத்தம் தொடங்கச் செய்து ஓடுவதுபோல் பாவனை காட்டி நம் தேரில் குதிக்க நான் துரத்திக் கொண்டு வந்து, தேரிலேறிய சிறுவனை லகுவாய்ப் பாய்ந்து பிடித்துக் கட்டினேன். இல்லாவிடில் நம் கையில் கட்டுப்படுவானோ? ஐயோ! இளை யோனிடம் இவ்வளவு சிரமமானால் மூத்த வனாகிய இவனிடம் எவ்வளவு கஷ்டப் பட வேண்டிவரும். ஏதேது நமதண்ணா ஸ்ரீ ரகு வீரரது அஸ்வமேதயாகம் நிறைவேறுவதாக நான் கருதவில்லை. இந்த மட்டும் யுத்தத்தை விட்டு உன் தம்பியைக் கூட்டிக் கொண்டு போவென் றாலும், இவன் சமாதானத்துக்குடன்படுவா னென்று தெரியவுமில்லை. அடயேப்பா! என்ன ருத்ராம்ஸத்துடன் நிற்கிறான்! சரி. இன்று நமக்கு விதி முடிந்ததென்று நினைக்க வேண்டும். நல்லது; கூடியவரை பார்ப்போம்.

லவன் : என்னடா! நான் கேட்பதற்கு ஒன்றும் பதில் சொல்லாமல், ஏதேதோ ஆலோசித்துக் கொண்டிருக்கிறாய்?

சத்ருக்கனன் : குழந்தாய்! பதறாதே! ஞாயமாகப் பேசுவோம்.

லவன் : ஞாயமென்ன? என் தம்பியை எதற்காகக் கட்டினாய்? சொல் சீக்கிரம்!

சத்ருக்கனன் : நாங்கள் விட்ட அஸ்வமேதப் புரவியைப் பிடித்துக் கட்டி எவ்வளவு சமாதானங்கள் சொல்லியும்விட்டு விடாமல் அஸ்வகாப்பாளரையெல்லாம்கொன்ற குற்றத்திற்காகக் கட்டினேன்.

லவன் : ஆஹா! துஷ்டா! நெஞ்சமல்லாமல் கட்டினேன் என்கிறாயா? உங்கள் அஸ்வமேதக் குதிரையை உங்கள் தேசத்திலேயே சுற்றி வரவிட்டால் நலமா யிருக்கும். அதைவிடுத்து இந்தயிடத்திற்கு ஏன் வந்து சேரும்படி விட்டீர்கள்? ஆஸ்ரமத்தில் குதிரை வந்ததினால் அவன் பிடித்துக் கட்டியது ஞாயமே.

சத்ருக்கனன் : அவன் குதிரையைப் பிடித்துக் கட்டினதும் ஞாயம். நான் அவனைப் பிடித்துக் கட்டியதும் ஞாயந்தான்.

லவன் : ஆஹா! மட்டிப் பிரஷ்டா! என்ன வார்த்தை சொல்லினை? நீ அவனைக் கட்டியது ஞாயமா? இதோ பார்! ஞாயத்தைக் காட்டுகிறேன்.

( தர்க்கம் பாட்டு )

லவன் : நில்லடா நீ.. உன்னை.. இதோ
வில்லால் வெல்லுகிறேன் ( நில் )
வல்லமை இப்போது காட்டுகிறேன் - இன்று
வடிகணை தொடுத்துன்னை வாட்டுறேன்.
சில்லம்புக்கஞ்சி முன் சிறுவனை ஏமாற்றும்
திருடா திருடா திருடா மானமுண்டானால்
( நில் )

சத்ருக்கனன் : செல்லடா நீ.. சிறு பயல் உன்னால் என்ன
ஆகும்.. ( செல் )
ஏதேதோ நிந்தித்துப் பேசுகிறாய் - உனக்
கேற்றபடி கையை **வீசுறாய்**
தீதினிமேல் வந்து சேருமுனக்கின்று
சிறுவா.. சிறுவா.. சிறுவா.. உயிர் பிழைத்து
( செல் )

லவன் : வேங்கை பசுவினுக்கு அஞ்சுமா.. உந்தன்
வில்வலி என்னிடம் மிஞ்சுமா?
சாங்கோப சாங்கமாய் சரந்தொடுத்துக்
கொல்வேன்.
தடியா.. தடியா.. தடியா.. ரோஷமுண்டானால்
( நில் )

சத்ருக்கனன் : இளங்கன்று பயமொன்றும் அறியுமா உனக்..
கென் சேதி சற்றேனும் தெரியுமா..
விளங்கும்படி சொன்னேன்
வேதையடை வாயுத்தம்
வேண்டாம்.. வேண்டாம்.. வேண்டாம்.. உயிர்
பிழைக்க

லவன் : அரவம் கருடனையும் வெல்லுமா - உந்தன்
ஆண்மை என்னிடத்தில் செல்லுமா
வருமுன் தலைக்குக் கணைவலியிருந்தால்
தடுப்பாய்
மடையா.. மடையா.. மடையா..
வெட்கமுண்டானால் (நில்)

சத்ருக்கனன் : கும்மாளமிட்டுக் குதிக்கிறாய் - அற்பக்
குணத்தைக் காட்டித்தானே துடிக்குறாய்
சும்மா நான் இனி விடேன் தோன்று மெனக்குக்
கோபம்
சொன்னேன்.. சொன்னேன்.. சொன்னேன்..
உயிர் பிழைத்துச் செல்

லவன் : அடேவஞ்சகா! அதர்மயுத்தம் செய்தல்லவா சிறுவனை ஏமாற்றித் தேர்க்காலில் கட்டினை. அவன் வில்லோடு நின்றானாயின் நீ என்ன பாடுபட்டிருப்பாய்? இருக்கட்டும்; இப்பொழுதும் என்ன முழுகிப் போயிற்று. இதோ மந்திராஸ்திரம். எடுத்து அபி மந்திரித்து உன் மார்பை இலக்காகக் குறி வைத்துக் கொல்லுகிறேன் பார். (மந்திரித்துப் பாணம் விட, சத்ருக்கனன் இறந்தான் என) சரி! இவன் இறந்தான். இனி தம்பியைக் கட்டவிழ்த்து விடுவோம். (அவிழ்த்தவுடன்)

குசன் : (நாணமுடன்) அண்ணா! நமஸ்கரிக்கின்றேன்!

லவன் : தம்பி! மங்களமுண்டாகட்டும்! எல்லா விவரங்களும், கமண்டலனாலே தெரிந்து கொண்டேன். நாணங்கொள்ளாதே! ஒரு யுத்த வீரன் அஞ்சினாலும் புறமுதுகிட்டாலும்தான் அவமானம். மாற்றாரைக்காண வெட்கமடைய வேண்டும். துஷ்டப் பகைவன் மல்யுத்தத்திற்கு அழைத்து வில்லைக் கைவிட்டு நீங்கும்படிச் செய்து வஞ்சித்துப் பிடித்துக் கட்டினால் அது அவனுக்கு வெற்றியைக் கொடுக்குமா? அவன் வஞ்சனை அவனையே அழித்தது. மேலும் யானைக்கும் அடி சறுக்குமென்பார்கள். ஆகையால் கட்டுப்பட்டதை

எண்ணி வெட்கமடையாதே! இனிமேல் பெருஞ் சண்டை நேரிடும். அயோத்தியா புரியிலிருந்து அநேகம் சைன்யங்கள் வந்து சேருமென்று நினைக்கிறேன். இன்று நல்ல யுத்த விளையாட்டுக் கிடைத்திருப்பினும் ஓர் பாக்கிய சம்பவம். மறுபடியும் இக்குதிரையைப் பிடித்துப் பந்தித்து விட்டு இதோ சமீபத்தில் ஓடும் நதியில் இறங்கித் தேக சுத்தி செய்து தாகவிடாய் தீர்த்துக் கொண்டு மரத்தின் நிழலில் இளைப்பாறிக் கொண்டிருக்கலாம். வா போகலாம்!

குசன் : அண்ணா! பெரும்படை வந்ததானால்.. முதலில் என்னைத் தனியாக விட்டு யுத்தம் செய்யச் சொல்லித் தாம் பார்த்துக் கொண்டிருக்க வேண்டு மென்று பிரார்த்தித்துக் கேட்டுக் கொள்ளுகிறேன்.

லவன் : அதற்கென்ன பார்த்துக் கொள்வோம். உன் வீர பராக்ரம திடதைர்யம் எங்கே போகும்? வா! தாக சாந்தி செய்து கொள்ளலாம்! (இருவரும் தாக சாந்தி செய்து ஒருபுறம் மரத்தினடியில் சயனித்து இளைப்பாறிக் கொண்டிருக்கிறார்கள்)

லக்ஷ்மணன் : (பிரவேசம்) எல்லாம் ஆச்சர்யமாகத்-தானிருக்கின்றன. இரண்டு சிறிய பாலர்கள் நமது அஸ்வமேதக் குதிரையைப் பந்தித்து, நம் சேனா சைன்யங்களையெல்லாம் சின்னாபின்னப்படுத்தி மஹா பலாட்டி யனான எனது கனிஷ்டன் சத்ருக்னனையும் கொன்றார்களானால் அவர்கள் யாராயிருக்கலாம்! தேவாம்ஸ உற்பனர்கள் என்று சொல்லத் தடையென்ன? நமது ராமண்ணா யாக தீக்ஷை வகித்திருக்கின்றார். பரதண்ணாவோ யாகச்சடங்குகளுக்கு வேண்டிய சாமக் கிரியைகளை அப்போதைக்கப்போது, கொடுத்து உதவியும் யாகசாலைக்கு வரும் தவசிரேஷ்டர்கள், முனிபுங்கவர், வேதவேதியர், வித்வான்கள், பல தேச ராஜர்கள், யாவரையும் அவரவர்களுக்குத் தகுந்த உபசரணைகளை நடத்தியும் வருகிறார். ஆகையால், என்னையழைத்துச் சிறுவர்களைக் கைப்பிடியாகப் பிடித்துக் குதிரையையும் விடுவித்துக் கொண்டு வர ஆக்ஞாபித்திருக்கிறார். அச்சிறுவர்களை எங்கே தேடிப்பார்ப்பது? குதிரையுங் காணோம். வால்மீக முனிவர் ஆஸ்ரமத்தின் பக்கமே யுத்தகளமாக நேர்ந்தது என்று தப்பிப் பிழைத்து வந்த தூதர்கள்

சொன்னார்கள். ( பார்த்து ) இதுதானே வால்மீக முனிவர் ஆஸ்ரமத்தைச் சேர்ந்தயிடம்? இங்கு யாரையுங் காணோமே! சற்று அப்பால் போய்ப் பார்ப்போம். ஓகோ! அதோ இரு சிறுவர் நதிக் கரையின் மேட்டிலுள்ள விருக்ஷத்தினடியில் சயனித்து இளைப்பாறிக் கொண்டிருக்கிறார்கள். அவர்களாகத்தானிருக்க வேண்டும். தடையில்லை; தடையில்லை. பக்கத்திலுள்ள காட்டு வாழை மரத்தில் யாகப்பரியும் கட்டப்பட்டு நிற்கிறது; நல்லது போய் விசாரிப்போம்.

( பாட்டு தர்க்கம் )

**லக்ஷ்மணன்** : பாலர் நீங்கள் தானோ இப்பரியைப் பந்தித்தீர்
இப்பரியைப் பந்தித்தீர், என் எதிரில் சந்தித்தீர்
( பா )

**லவன், குசன்** : ஆமாம் நாங்கள் தானே பிடித்துக் கட்டினோம்
பிடித்துக் கட்டினோம் சேனையை மடித்து
வெட்டினோம் ( ஆ )

**லக்ஷ்மணன்** : ராமரசுவ மேத யாகப் புரவியிது
நலமோ நீர் பந்தித்தது - விடுமிப்போது ( பா )

**லவன், குசன்** : எங்களுக்குத் தெரியும் யாகப் பரிபட்டயம்
எழுதிவிட்டதால் நிச்சயம் ஈததிசயம் ( ஆ )

**லக்ஷ்மணன்** : போனதெல்லாம் போகட்டும்
போதும் யுத்தமிம்மட்டும்
போவீர் மரத்திலே கட்டும் புரவி
விட்டும் ( பா )

**லவன்** : சுத்த வீரன் நீயானால்
சுருக்கிலெங்களை வென்று
சுகமாய்ப் பரிகொண்ட கன்று
தொடர்வாயின்று ( ஆ )

**லக்ஷ்மணன்** : பாலர்களே! நியாயமில்லாத காரியத்தைச் செய்யாதீர்கள்! நான் சொல்வதைக் கேளுங்கள்!

**குசன்** : அக்கறையில்லை. இதோ வருகிற கணைகளைத் தடுத்துக் கொள்!

**லக்ஷ்மணன்** : சிறுவன் கைமிஞ்சினான். இனி நாம் சும்மாயிருந்தால் நாசம் சம்பவிக்கும்.

(பாட்டு : தர்க்கம்)

லவன் : விடுகிறேன் கணைகள்-இங்கு
வேகமாய் நாண் மாட்டி வில்லினிலே
பூட்டி (வி)
சுடு நெருப்பெனத் தோன்ற அங்கமெங்கும்
சுற்றி எட்டுத்திசை வான்பூமியெங்கெங்கும்
தோய்ந்திட - காய்ந்திட - பாய்ந்திட
சோனை மாரி மழைபோல இது வேளை (வி)

லக்ஷ்மணன் : இளஞ்சிறுவர்களே! நீங்கள்
எங்கள்பரி விடுத்துங்க ளிடஞ் சேரும் (இள)
தளம் படையெல்லாம் சிதைத்திட நின்றீர்.

தம்பியான சத்துருக்கனனையும் கொன்றீர்.
தாங்கொணாத் தீங்கீது - நீங்குமோ
தப்பிதமானாலும் - இப்போதயவாலும் (இள)

லக்ஷ்மணன்-வ-ம்: இவர்களைப் பார்த்தால் நமதண்ணா ஸ்ரீராமச் சந்திரமூர்த்தியினது உருவம் போல் காணப்படு கின்றார்கள். கரவேக சரவேகமும் அப்படியே தோன்றுகிறது.நாம் ஜானகி யன்னையாரை விட்டு வந்ததும் இந்த வனத்துக்குச் சமீபந்தான். அப்போது அன்னையார் கற்பமா யிருந்ததும் உண்மையே. சுமார் ஒன்பது வருஷமிருக்கலாம். இவர்களும் ஒன்பது வயது பிராயமுடையவராகவே காணப்படுகிறார்கள். சந்தேகமில்லை. சந்தேக-மில்லை. ஜானகியன்னையாரின் இரட்டைப் புத்திரர்களாகவேயிருக்கலாம்.

லவன் : என்ன? நல்ல யுத்தம் நடந்து கொண்டிருக்கையில் வில்லைக் கீழே வைத்துவிட்டு ஆலோசனை செய்து கொண்டிருக்கிறாய்? நிராயுதன் பேரில் பாணப் பிரயோகம் செய்யலாகாதென்று எங்கள் அன்னையார் சொல்லியனுப்பியிருக்கிறார்கள். அதனால், நாங்களும், அஸ்திரம் விடாமல் பார்த்துக் கொண்டிருக்கிறோம். எவ்வளவு நேரம் தாமதிப்பது? பொழுது அஸ்தமனமாவதற்குள் இங்குள்ள வேலைகளையெல்லாம் முடித்துக் கொண்டு எங்கள் அன்னையிடம் போய் நாங்கள் சேரவேண்டும். எடு வில்லை! தொடு பாணம்! படு யுத்த களத்தில்! இல்லையேல், எங்கள் பாதத்தில் வீழ்ந்து ஜீவதானம் கேட்டுக்கொள்! அடைக்கலம் புகுந்தோரை ஆதரிக்க வேண்டுமென்று எங்கள்

அன்னையார் சொல்லி யனுப்பியிருக்கிறார்கள். எங்கள் ஆயுள் உள்ள பரியந்தம் அன்னை மொழிக்குப் பின்னம் செய்யமாட்டோம். எது சம்மதம்? யுத்தம் செய்து மடிகின்றாயா? ஜீவதானங் கேட்டு ஓடிப் போகிறாயா? சொல் சீக்கிரத்தில்!

லக்ஷ்மணன் : குழந்தைகளே! உங்கள் மீது பச்சாதாபமுண்டா கிறது. நீங்கள் யார்? உங்கள் தாய் தந்தையர் பெயரென்ன? விவரமாகச் சொல்லுங்கள்!

லவன் : என்ன... படுகளத்தில் ஒப்பாரியா? அவைகளெல் லாம் சொல்லிக் கொண்டிருக்க அவகாசமில்லை. பொழுது போகிறது. இரண்டிலொன்று சொல்! உன் சம்மதப்படி செய்கிறோம்.

லக்ஷ்மணன் : அப்படியல்ல. நீங்கள் இன்னாரென்று சொல்லுங்கள்! அப்பாலே என் அபிப்பிராயத்தைச் சொல்லு கின்றேன்.

குசன் : அண்ணா! தாமதிப்பதில் பிரயோசனமில்லை. வந்தவர்களெல்லாம் நம்மை விசாரித்துக் கொண்டுதானிருப்பார்கள். அவர்களுக்கெல்லாம் நமது வரலாற்றை விஸ்தரித்துக் கொண்டிருந்தால் பொழுது போய் விடும். ஆகையால், நமதன்னையார் நம்மைக் காணாது வருந்து வார்கள். சீக்கிரம் வேலையை முடித்துக் கொண்டு ஆஸ்ரமத்துக்குப் போவோம்.

லவன் : வாஸ்த்தவம்தான் தம்பி! நிராயுதன் பேரில் பாணப் பிரயோகம் செய்ய லாகாதென்றே யோசிக்கின்றேன்.

குசன் : அண்ணா! இவனுக்குத் துணையாக நிற்கும் ஆயுத பாணிகள் மீது முன்பு பாணந்தொடுப்போம். அப்பால் இவன் என்ன செய்கிறான் என்பதாகப் பார்த்துச் சமயோசிதம்போல் நடந்து கொள்வோம்.

லவன் : அதுதான் யோசனை. முன்பு இவர்கள் ஓடிப் போகாமல் சரக்கூடங் கட்டுவோம். எடு வில்லை!

( பாணம் விடுகிறான் )

லக்ஷ்மணன் : சிறுவர்கள் கைமிஞ்சிவிட்டார்கள். இனி நாமென்ன சொன்னாலும் சமாதானப்பட மாட்டார்கள். நல்லது; சரக்கூடத்தைப் பேதிப்போம்.

( பாட்டு : தர்க்கம் )

லக்ஷ்மணன் : விட்டேனான் நாகக் கணையை
விரைவாயிது வேளையில் நீர் விழவே (வி)

லவன் : அட்டமத்துச் சனி ஆனதுனக்கினி
அறிவாய் கெருடாஸ்திரம் நான் விடுத்தேன்.
கெட்டேபோம் உனது கணை
கெடுவாய் நிஜமீதுயிர் நீ விடுவாய் (கெ)

லக்ஷ்மணன் : பர்வதாஸ்திரம் பாரெனது சரம்
படிமீதினில் நீர் விடுவீர் அழிவீர் (வி)

குசன் : எங்கே உனது அஸ்திரம்?
இடிகணை தொடுத்திதோ
விடுத்தனன் உடைத்தனன் (எங்)

லக்ஷ்மணன் : நம்மாலே விடப்பட்ட அஸ்திரங்களை எல்லாம் கண்டித்துச் சிறுவர்கள் நமது வில்லையும் முறித்து விட்டார்கள். ஏதேது நான் ஜெயம் பெறுவதாகத் தோன்றவில்லை.

லவன் : இவனோடு இன்னும் யுத்தமா? மந்திராஸ்திரம் விடுத்துக் கொல்லுகிறேன்.

( பாணப்பிரயோகமானபின் லக்ஷ்மணன் வீழ்கிறான் )

( காட்சி மாறுகிறது )

( டர்னிங் ஸீன் )

( ஒருபுறமாக சைன்யங்களுடன் பரதன் வருகிறான். தூரத்தில் அவர்களைப் பார்த்து )

பரதன் : நமதண்ணாவின் உத்தரவுப் பிரகாரம் இச்சிறுவர்களைக் கைப்பிடியாகப் பிடித்துப் போக வந்தோம். இவர்களோ - ஒட்டை ஜாணில்லை. இவர்கள் கையில் பிடித்திருக்கும் விற்களோ இவர்களிலும் இரண்டு பாகம் ( லவகுசர்கள் அருகே வரல் ) உயர்ந்ததாகத் தெரிகிறது. இவர்கள் பராக்ரமத்திற்கு நமதண்ணா ஸ்ரீராமச்சந்திரரும் இணையாகமாட்டார்கள் என்றால் நம்மால் என்ன முடியும்? இருந்தாலும் பார்ப்போம்.

( பாட்டு )

பரதன் : பரியைப் பிடித்துக் கட்டிக் கொண்டு
படையைக் கொன்றதாரடா.

குசன், லவன் : பாலர்கள் நாங்கள் இருவர்தான்
அப்பரியைக் கட்டினோம்

குசன் : வந்த படையை வெட்டினோம்

லவன் : இன்னும் பார்க்கக் கிட்டினோம்

பரதன் : நீங்கள் பற்றிய குதிரையை
விட்டிடும் விட்டிடும்
அட்டியுரைக்காது.

லவன் : அது மட்டும் நடக்காது.

குசன் : சொன்னோம் நிச்சயமிப்போது

பரதன் : பகருதல் நலமல சினம்வரில் உமதுயிர் அழிவது
தப்பாது.

லவன் : அமராடிட நிற்காது.

குசன் : மொழியாடுதல் ஒப்பாது.

லவன் : இனியரை நொடியினிலெமததிவலி தெரிகுவை
வருகுது கணை தடடா.

பரதன் : கணை முறிபட விடுவேனடா.

லவன் : வில்லின் மறுகணை தொடுவேனடா.

குசன் : கொஞ்சம் பொறு பொறு வருவேனடா.

பரதன் : வந்தாலென்ன.

குசன் : வந்தே உனதுடலை வாட்டி வலி காட்டுறேன்.

( பாண யுத்தம் நடக்கிறது )

லவன் ( வ-ம் ) : இவனோடு இன்னும் போர் செய்வதா?
இதோ! மந்திராஸ்திரம் விடுத்துக்
கொல்லுகிறேன்.

( பாணம் எய்யப் பரதன் விழுகிறான் மண்ணில் )

தம்பி! கவனித்தாயா? ( பல விதவாத்ய ஒலி கேட்டு ) அண்டமிடிந்து விழுவது போல

ரணபேரிகை முதலிய வாத்தியங்கள் தாம் தாம் என்று முழங்க.. குடை, கொடி, விருதுகளோடு அதோ ஒருவன் வருகிறான். அவன்தான் ராமனென்று நினைக்கிறேன். இல்லையேல் இவ்வளவு ஆடம்பரமிருக்காது. இவனோடு நமக்கு யுத்த வேலையும் ஒழியும். அப்பால் அன்னையிடம் போய்ச் சேரலாம். ஊழிக்காலத்திலே பெரும் புறக்கடல் பொங்கி ஒரு முகமாகத் திரண்டு வருவது போலச் சைன்யங்கள் வருகின்றன; நன்றாய்ப் பார்!

குசன் : ஆமாம் அண்ணா! அதோ இடது பாரிசத்தில் பாரும். குரங்குக் கூட்டங்கள் வருகின்றன. நல்ல வேடிக்கை எனக்கு! நகைப்புண்டாகிறது. யுத்த களத்திற்குக் குரங்குகளை ஏன் கூட்டி வருகிறான் ராமன்?

லவன் : தம்பி! விவரம் விளங்கவேயில்லை. ஒருவேளை இந்தக் குரங்குகளும் அதி பாலாஷ்டியத்தோடு முஷ்டியுத்தங்கள் செய்யும் போலிருக்கிறது. இல்லாது போனால்.. மற்கடங்களை ஏன் இவ்வளவு கூட்டிக் கொண்டு வருகிறான் ராமன்? இவ்வகையில் ஏதோ விசேஷமிருக்கிறது. எல்லாம் இன்னும் சற்று நேரத்தில் வெளிச்சமாய்விடும் பார்த்துக் கொள்ளலாம். யுத்தத்திற்குச் சித்தமாக நில்.

குசன் : அண்ணா! இந்தக் குரங்குக் கூட்டங்கள் யுத்தம் செய்வதாயிருந்தால் அவைகளோடு போய் விளையாடிவர எனக்கு உத்தரவு கொடுங்கள்!

லவன் : அப்படியே ஆகட்டும்! வா தாகசாந்தி செய்து கொண்டு வருவோம்!

( போகிறார்கள் )

18ஆவது காட்சி முடிகிறது



## 19வது காட்சி

காடு. அனுமான், ஜாம்பவான், முதலான குரங்குப்படை வருகிறது.

நாடக மாந்தர்கள்: அனுமான், ஜாம்பவான், குசன்.

அனுமான் : ஓய்! ஜாம்பவந்தரே! பரத லக்ஷ்மண சத்ருக்னர் களான மஹா பலாட்டியர்களை இரண்டு சிறுவர்கள் வென்று சைன்யங்களையெல்லாம் கொன்றார்களென்றால் அவர்கள் யாராகயிருக்க லாம்? அஸ்வமேதக் குதிரையைப் பிடித்துக் கட்டிக் கொண்டு விட முடியாதென்று யுத்தம் செய்ய இவர்களுக்கு என்ன தைர்யம்? பார்த்தீரா? இராமச்சந்திரப் பிரபுவே இப்போது யுத்தத்திற்கு வந்திருக்கிறார். முதலில் நாம்போய் அச்சிறுவர் களுக்குச் சமாதானங்கள் சொல்வோம். வாருங்கள்!

ஜாம்பவான் : ஓய்! அனுமாரே! உம்முடைய சாமர்த்தியம் அவர்களிடம் பலிக்காது. அவர்கள் சாமான்யப் பட்டவர்கள் அல்ல! ராவணாதியரைப் போரில் வென்று, ஜெயம் பெற்றதை எண்ணி இவர்களிடம் உம்முடைய வீரத்தைக் காட்ட வேண்டாம். அவமானம் நேரிடும்.

( தூரத்தில் லவகுசர் வரல் )

அதோ வருகிறார்கள் சிறுவர்கள் பார்த்தீரா? ஒரே நிறம்; ஒரே உயரம்; ஒரே உருவம்; ஒரே நடை நொடி பாவனைகளோடு விளங்குகிறார்கள். இவர்களை வெல்ல முடியுமா என்று யோசனை செய்யுங்கள்!

அனுமான் : ஐயா! ஜாம்பவானே! இவர்களைப் பார்த்தால் ஸ்ரீ ராமச்சந்திர மூர்த்தியின் உருவம் போல் இருக்கிறது. ஒரு வேளை அன்னைஜானகியாரின் புத்திரர்களாகயிருக்கலாமோ என்றும் நினைக் கின்றேன். சமீபத்தில் போய் விசாரிப்போம். வாருங்கள்!

( அருகில் லவகுசர் வருகிறார்கள் )

அனுமான் : ( குசனிடம் அணுகி ) குழந்தைகளே! நீங்கள் யார்? உங்கள் மாதா பிதாக்கள் பெயரென்ன? நீங்கள் எங்கிருப்பது? இந்த அஸ்வமேதக் குதிரையை ஏன் பிடித்துக் கட்டினீர்கள்? ஸ்ரீராமச்சந்திரமூர்த்தி யினால் பூப்பிரதக்ஷணத்திற்காக விடப்பட்ட புரவியை நீங்கள் பிடிக்கலாமா? மூவுலகத்தவர்களும் அவருக்கு விரோதமாக நடக்கமாட்டார்களே. அப்படியிருக்க நீங்கள் இத் தகாத காரியத்தில் தலையிடலாமா? வேண்டாம். நான் சொல்வதைக் கேளுங்கள்! ராமப் பிரபுவின் கோபத்திற்கு

ஆளாகாமல் போய்விடுங்கள்! இல்லையேல் நாசம் சம்பவிக்கும்.

( பாட்டு )

குசன் : நான் விடுவேனோ சும்மா நான் விடுவேனோ
நகை தருவித நட மிடுகறகபிகளை
வதைபுரிவது சரியலவெனினுமெளிதில் ( நா )
நாட்டிலில்லை நேரில் கணை
பூட்டி வாட்டி ஓட்டுகிறேன் ( நா )
நத்திய இக்கபி வர்க்க மரத்தினி
லுற்று மொளிக்க அடித்து முடுக்குவேன் ( நா )
நஞ்சு பெருங்கணை கொண்டு குரங்குகள்
எங்குமகன்று மறைந்து மொளிந்திடும் ( நா )
நாலுவாளி தூவுவேனேல்
யாவும் நேர் நில்லாமலோடும் ( நா )

வ - ம் : அடே! நீண்ட வாலைப் படைத்த குரங்கே! நீயோ என்னை விசாரிப்பது? நானோ உனக்குப் பதில் சொல்லுவது? காட்டிலுள்ள காய் கனிகளையும், கிழங்குகளையும் தின்று சுனை நீரைக் குடித்துப் பாறையில் தூங்கி உயிர் வாழ்வதை விட்டு யுத்த வீரன் போல் ரணகளம் தேடி வந்ததோடல்லாமல், என்னிடத்தில் சம்பாஷணை செய்யவும் நேர்ந் தாயோ? மரமேறி விளையாடும் தொழிலென்று போராடும் தொழிலையும் நினைத்துக் கொண் டாயோ? இதோ பார்! உனது சரீராத்யந்தமும் ரத்தம் பீரிட்டோட அஸ்திரங்களைத் தொடுக் கிறேன். உன் ரோமக் கால் ஒன்றொழியாது என் அஸ்திரம் நிற்கும் நிலையைப் பார்!

அனுமான் : அடே பயலே! என்னை யாரென்று நினைத்தாய்? ராவணாதி ராக்ஷஸர்களை யெல்லாம் துவம்ச நாசம் செய்தவர்களாக்கும். என் கையால் ஓர் அறை விட்டால் தரை மட்டமாகிவிடுவாய். ஜாக்ரதை! "குட்டி கொழுத்தாலும் வழுக்கல் வழுக்கல்தானே" என்பதற்கிணங்கப் பேசுகிறாய். உனக்கென்ன தெரியும்? சிறு பயல் நீ! இப்போதும் சொல்லுகிறேன், ஓடிப்போய்விடு!

குசன் : ( பாணம் தொடுக்கிறான் )

ஜாம்பவான் : ( பாணப்ரயோகம் தாங்காமல் ) அய்யா! அனுமானே ஓடி வாரும்! ஓடி வாரும்! நம்மால்

முடியாது. அடேயப்பா! என்ன தீக்ஷண்யமான பாணப் பிரயோகம் செய்கிறான்! வாரும்! வாரும்!! போய் விடுவோம்.

**அனுமார்** : அய்யா! ஜாம்பவந்தரே! உடம்பெல்லாம் ரண களமாகயிருக்கிறது. இனிமேல் இவர்களோடு யுத்தம் செய்ய நம்மாலாகாது. வாரும்!

( இருவரும் போதல் )

19ஆவது காட்சி முடிகிறது



20வது காட்சி

யுத்த களம். ( ராமன் வந்து புலம்புகிறார் )

நாடக மாந்தர்கள்: ராமர், லவன், குசன், ஜாம்பவான், அனுமான்.

( பாட்டு )

**ராமர்** : தம்பி மார் மூவர்களும் தரையில்
மடிந்துருண்டார்
சகிக்க முடியவில்லையே ( த )
வெம்பி மனமுருகி வேதனையடையலானேன்
விதியை வெல்லவும் போமோ. ( த )
அறியாத இருபாலர்
அடித்துக் கொன்றார்களென்றால்
அவமானம் இது போலுண்டோ
நெறி நீதி தவறி நான் நீச்சர் தொழில்
செய்தேனோ
நேர்ந்த துயர் சகிப்பேனோ ( த )

**லவன்** : தம்பி! என்னையறியாமலே எனக்குத் துக்கம் சம்பவிக்கின்றது. காரணம் தெரியவில்லை. யுத்தத் திற்கு வந்த இந்த ராஜன் இறந்த தம்பிகளைப் பார்த்துப் புலம்புவதைக் கண்ட என் மனம் மிகு சஞ்சலத்தையடைகிறது. நமதன்னையார் முக வாட்டமடைந்தால், நமக்கு எவ்வளவு துன்பம் உண்டாகுமோ. அவ்வளவும் இந்த அரசனால் எனக்கு விளைகின்றது. விளங்கச் சொன்னால், நம் அன்னையார் மீது செல்லும் அன்பிலும் இந்த அரசன் மீது மிகுதியான அன்பே விளைகின்றது. மனதை எவ்வளவு திடப்படுத்தினாலும், இந்த

ராஜனோடு யுத்தம் செய்யத் தைர்யம் கொள்ள வில்லை. வில்லை வளைக்கவும், கை நாடவில்லை. இந்தப் பரிதாபத்திற்கு என்ன செய்வது?

குசன் : அண்ணா! என்ன இது பைத்தியம்? நாம் வந்து நிற்குமிடம் யுத்தகளம். இரக்கச் சித்தம் இங்கு கொள்வது கூடாது. இந்த ராஜனே இவ்வளவு விபரீதத்திற்குக் காரணமானவன். இவன் வீரப்ரதாபத்தை வெளிப்படுத்த வேண்டி இந்த அஸ்வமேதயாகம் துடங்காதிருந்தால் இவ்வளவு கணக்கில்லாத ஆத்மாக்கள் மடியுமா? இவனை நேரில் கண்ட மாத்திரத்திலேயே நமது வேலையை முடித்துக் கொண்டு நம்மைக் காணாது கவலை கொண்டிருக்கும் அன்னையாருக்கு மகிழ்ச்சி பொங்க அவர்களுடைய பாத சேவைக்குப் போவதற்குத் தாமதம் செய்யலாமா? எடும் வில்லை! பூட்டும் நாணி! காட்டும் குணத்தொனி! பிரயோகித்து விடும் மந்திராஸ்திரத்தை! என்ன இன்னும் யோசிக்கின்றீர்? இதோ நான் கொல்லுகிறேன்.

லவன் : பொறு! பொறு!! அப்படியல்ல தம்பி. என்னை அன்னையார் அனுப்பும்போது அநேக புத்திமதிகள் சொல்லியனுப்பினார்கள். அம்மொழிக்கு நாம் மாறு செய்யக் கூடாது. நம் மீது எதிர்த்து, ஆயுதபாணியாக நில்லாமல், தன் சகோதரர்கள் மடிந்த சோகத்தில் ஆழ்ந்து புலம்பிக் கொண்டிருக்கும் நிராயுதபாணியாகிய இவ்வரசன் மீது நாம் பாணப் பிரயோகம் செய்வது ஞாய விரோதம். மேலும், அப்படிச் செய்வது யுத்த முறைமையும் அன்று. நில்! எடுத்த அஸ்திரத்தைத் தூணியில் செருகி விடு! பின் பார்த்துக் கொள்ளலாம்.

குசன் : அப்படியே அண்ணா!

இராமர் : இச்சிறுவர்கள் நம்மைப் பார்த்து ஏதேதோ பேசிக் கொள்கிறார்கள். இவ்விளஞ்சிறுவர்கள் என்ன வீரபராக்ரமத்தோடு விளங்குகிறார்கள்! இச்சிறு வயதில் தனுர்வேத நிலைகளை எவ்வளவு தெளிவாகக் கற்றறிந்திருக்கிறார்கள்! ஆஹா! இப்படிப்பட்ட தேவாம்ஸப் புதல்வர்களை நான் கண்டதில்லை. அறியாத இரண்டு பாலர்கள்,

இவ்வளவு பெரும் சேனா சமுத்திரத்தை நிர்மூல மாக்கி, மஹா பலம்பொருந்திய எனது பாந்தவர் களையும் அடித்துக் கொன்றார்களானால் இதை விட அவமானமும் எனக்கு வேண்டுமோ? என்று ஜானகி என்னை விட்டு நீங்கினாளோ அன்று முதல் எனக்கு அனர்த்தமாகவேயிருக்கின்றன. என்ன மந்த ஹாசமான வதனம்! என்ன சாமர்த்திய சாலிகள்! இவ்வளவு புத்தி நுட்பமுடைய இக் குழந்தைகளை ஈன்றெடுத்தவர்கள் எவ்வளவு பாக்யசாலிகளாயிருப்பார்கள்? ஆஹா! ஆச்சர்யம்!! ஆச்சர்யம்! நல்லது. இக்குழந்தைகளின் மழலைச் சொற்களைக் கேட்க என் நெஞ்சம் ஆவலடை கின்றது. இவர்களை யாரென்று விசாரிப்போம். (நெருங்கி) குழந்தைகளே! நீங்கள் யார்? உங்கள் பெயரென்ன? உங்களின் தாய், தந்தையர் பெயர் யாது? நீங்கள் ஏன் இந்த அஸ்வமேதப் புரவியைப் பிடித்துக் கட்டினீர்கள்? இவ்விபரத்தைச் சொல்லக் கூடுமானால் நான் கேட்கப் பிரியப்படுகின்றேன்.

குசன் : அவைகளையெல்லாம் விஸ்தரித்துக் கொண்டு நிற்க எங்களுக்கு அவகாசமில்லை. பொழுது அஸ்த்தமன மாவதற்குள் ஆஸ்ரமம் போய்ச் சேர வேண்டும். எங்களைக் காணாமல் எங்கள் அன்னையார் வருந்திக் கொண்டிருப்பார்கள். எடும் வில்லை! யுத்தம் செய்வோம்!

லவன் : தம்பி! பொறு! பொறு! அவர் கேட்பது தோஷ மில்லை. அய்யா! என் பேர் லவன். இவன் பெயர் குசன். இவன் எனக்கிளையவன். என் தாய் பேர் ஜானகியம்மன். எங்கள் ஆசிரியர் பெயர் வால்மீக முனிவர். நாங்கள் ஆஸ்ரமத்தில் வசிப்பவர்கள். ஆகையால், எங்கள் ஆஸ்ரமத்திற்குள் வந்து, பச்சென்ற புல்லை மேய்ந்து கொண்டிருந்த இக் குதிரையின் நெற்றியில் கட்டியிருந்த வீரப் பட்டயத்தில் எழுதிய எழுத்துக்களை வாசித்துத் தம்பி குதிரையைப் பந்தித்தான். அது விஷய மாகவே இவ்வளவு கோலாகலங்கள் நடந்தேறின. வீரப் பட்டயம் இல்லாதிருந்தால், குதிரை பந்திக்கப்பட மாட்டாது. ஒருவேளை வேடிக்கை யார்த்தமாகப் பந்திக்கப்பட்டாலும் இவ்வளவு உயிர்ச் சேதமான சம்பவங்கள் நேர்ந்திருக்க மாட்டாது. இவ்வளவு தான் விருத்தாந்தம். உம்மையும் இன்னாரென்று தெரிந்து

கொண்டோம். தாங்கள் சுகமாக அயோத்யா புரிக்குச் சென்று இறந்த உமது தம்பியர் முதலானோருக்கு வேண்டிய கருமக் கிரியை செய்து அவர்கள் ஆத்மா திருப்தியோடு நல்லுலகில் வசிக்கச் செய்யும். குதிரையை நாங்கள் கொண்டு போகிறோம். குதிரையை நீங்கள் கொண்டு போக வேண்டுமானால், எங்களோடு யுத்தம் செய்யும்! உமது தம்பியர் போயிருக்கும் இடத்தில் நீரும் போய் சௌக்கியமா யிருக்கும்படிச் செய்கிறோம். இவ்விரு வகையில் உமக்கிஷ்டமெது? சொல்லும் சீக்கிரத்தில்! நேரம் போகுது!

( ராமர் அதிசயிக்கிறார் )

ராமர் : இச்சிறுவர்களின் மழலைச் சொற்கள் என் காதுக்கு அணிகலனாயிருக்கின்றன. "குழலினிது யாழினிது என்பர் தம் மக்கள் மழலைச் சொற் கேளாதவர்" என்றப்படி உலகத்தில் வீணையினது நாதமும், புல்லாங்குழல் ஓசையும்தான் காதுக்கு இனிமையானது என்று சொல்லுவார்கள். ஆனால், குழந்தைகளின் மழலைச் சொற்களைக் கேட்டபின் அவைகள் பிரயோஜன மற்றன எனத்தோன்றும். அப்படியே இக்குழந்தைகள் இன்னும் பேச மாட்டார்களா என நினைக்கிறேன். நல்லது. இச் சிறுவர்க்ளின் யுத்த விளையாட்டைக் காண வேண்டுமென்று ஆசையுண்டாகிறது. ஆகவே, நாம் கையில்ஆயுதமில்லாமல் நின்றால் சிறுவர்கள் யுத்தம் புரியமாட்டார்கள். ஆகையால், வில்லை யெடுத்து யுத்தம் செய்யும் பாவனையிலிருப்போம். குழந்தைகளே! குதிரையை நான் கொண்டு போக வேண்டுமானால், உங்களோடு யுத்தம் செய்ய வேண்டுமா?

குசன் : ஆம். தடையில்லை.

ராமர் : நல்லது. பாணப் பிரயோகம் செய்யுங்கள்!

லவன் : இதோ இந்திராஸ்திரம்!

குசன் : இதோ மேகாஸ்திரம்!

லவன் : இதோ வருணாஸ்திரம்!

குசன் : இதோ வாயுவாஸ்திரம்!

**லவன்** : இதோ அக்னியாஸ்திரம்

**குசன்** : இதோ! சந்த்ராஸ்திரம்!

**லவன்** : இதென்ன ஆச்சரியமாயிருக்கிறது! நாம் விடும் அஸ்திரங்களெல்லாம் இந்த ராஜனை வலம் சுற்றிப் பாத நமஸ்காரம் செய்கின்றனவே!

**குசன்** : அண்ணா! இந்த ராஜன் மஹா மந்திரங்கள் கற்ற மாயக்காரன் போல் காண்கின்றான். தேவதாஸ்த் திரங்களையெல்லாம் பாத வணக்கம்செய்யச் செய்து கொண்டானானால் இவனது மாயா வல்லபங்களை எவ்விதம் மதிப்பது? இனி மஹா மஹா அஸ்திரங்களையே ஜாக்ரதையாகத் தொடுக்க வேண்டும்.

**ராமர்** : குழந்தைகளே! கை சலித்துப் போய் விட்டீர்களா?

<u>பாட்டு</u>

இனியாவது குதிரையை விடுவீர்கள்
எனக்கு வருத்த மில்லை (இனி)
அனியாய வகை நீர் செய்திருந்தாலும்
அதற்குங்கள் மீது கோபமாகே னெக்காலும்
(இனி)

சேனை வகைகளெல்லாம் சிதறிட அடித்தீர்
செல்வத் தம்பியர் விண்போய்ச் சேரவுமடித்தீர்
ஆனவரையிலும் பொல்லா அடம் பிடித்தீர்
அதிக்ரமித் தென்னுடனே மிகவீம்பு படித்தீர்
(இனி)

**ராமர் (வ-ம்)** : குழந்தைகளே! ஏன் சிரமப்படுகிறீர்கள்? வேண்டாம்; நான் சொல்வதைக் கேளுங்கள்! நீங்கள் எவ்வளவு துன்பம் செய்திருந்தபோதிலும், அதைப்பற்றி நான் உங்கள் மீது கோபங்- கொள்ள வில்லை. என் அருமைத் தம்பிமார்களைக் கொன்றதைப் பற்றியும் வருத்தமில்லை. உங்களால் என்னைக் கொல்ல முடியாது. ஆகவே, போனது போகட்டும்; இனியாவது குதிரையை விட்டுவிடுங்கள்!

(பாட்டு)

**லவன்** : அம்புக் கொம்பனேகமாம் தூணியிலே
ஆஹா ஹா நான் எய்கிறேன் (அ)

நம்பிய பின்னவனாம் தம்பியர் போனவழி
நடைபெறு இதுததி நாடியேக வாளிதூவ ( அ )
அந்தரமீது வரும் சந்திர சூரியரும்
ஆதிபயமடையவும் அதிர்ச்சி கொடுக்கும்
ஒளிக்க முடுக்கும் ( அ )

வ-ம் : இதோ நாராயணாஸ்திரம்!

ராமர் : இதோ கையில் பற்றினேன்!

லவன் : இதோ பாசு பதாஸ்திரம்!

ராமர் : இதோ பாசுபதாஸ்திரத்தின் நிலையைப் பார்!

குசன் : அண்ணா! இந்த ராஜன் மஹா மாயாவி என்று முன்னமேயே சொன்னேனே. ஜாக்ரதையாக யுத்தம் செய்ய வேண்டும்.

லவன் : தம்பி! கொஞ்சம் பொறு! இதோ உக்ர வீரசக்தியால் இந்த ராஜன் உயிரைப் போக்கிவிடுகிறேன். நீ பார்த்துக் கொண்டிரு!

( விருத்தம் )

வேதத்தில் அன்னை பிதா தெய்வமென்று
விதித்தது உண்மையாயிருந்தால்
விரைவாய்ச் சென்று
நாதத்தை முழக்கியிந்த ராஜன் மார்பின்
நடுவகுத்து வீழ்த்தி எனதன்னை சொற்கும்
பேதத்தை விளைக்காமல் வெற்றி காட்டி
பெருமையோடும் விளங்குகின்ற மகிமையாம்பிர
சாதத்தை எனக்களிப்பாய் உக்ரவீர
சக்தியே உனைத் தொழுதேன்
தயை செய்வாயே..

வ-ம் : ஹு! உக்ரவீர சக்தியே! அன்னையும், பிதாவும் முன்னறி தெய்வமென்னும் வாக்கு வேத சம்மதமென்பது உண்மையாயின் நீ இந்த ராஜன் மார்பை இலக்காகச் சென்று எனக்கு வெற்றியை நிலை நாட்டுவாயாக!

( லவன். 'உக்ர வீர சக்தி' என்ற பாணத்தை விடுத்ததும் ராமர் அப்படியே... )

ராமர் : ஆ! ஜானகி! ( என்று மூர்ச்சையாகிறார் )

( பாட்டு தர்க்கம் )

லவன் : வந்த காரியம் முடிந்து விட்டது.
வா போகலாம்
வா போகலாம் இனி நாமேகலாம் ( வந் )

குசன் : வார்த்தை ஒன்றுண்டு கேளண்ணா

லவன் : நேத்தியாக நீ சொல்வாய் முன்னால்

குசன் : வரு மன்னர்ஜோதி க்ரீட அணியாதி
களை இதுபோதில் கொள்ளுமொரு சேதி
எனக்கு நீர் உரைத்திடில்
அனைத்தையும் திரட்டுவேன்.

லவன் : ஏதுக்கு நீயிந்தவாறு மொழிந்தனை
இச்சை கொண்டதுரை கேட்கலாம்.

குசன் : இம்மை முனிப்பெண்கட் கீந்து மகிழ்ந்தின்று
பொம்மை விளையாட்டுப் பார்க்கலாம்

லவன் : உன் இச்சைப்படியெல்லாம் சேர்க்கலாம்.

குசன் : என் எண்ணம் நிறைவேற்றித் தீர்க்கலாம்.

லவன் : இதிலேது தடைகிடையாது - இன்னும்
அவகாசமது உதவாது.

குசன் : எடுத்து நான் வரும் வரை
இருப்பீர் நீரது வரை ( வ )

லவன் ( வ-ம் ) : தம்பி! பக்தி ஆஸ்ரம முனிப் பெண்கள் பொம்மை விளையாட்டிற்காக இங்கு வந்த ராஜர்களின் ஆடையாபரணங்களையெல்லாம் மூட்டையாகக் கட்டிக் கொண்டு போய்க் கொடுக்க வேண்டுமென்று நீ பிரியப்படுவதால், அதனைத் தடுக்க எனக்கு மனமில்லை. உன் இஷ்டம் போல் சேகரித்துவா! அதுவரை நான் தாமதித்து இருக்கிறேன்.

குசன் : இதோ! கொண்டு வந்தேனண்ணா!
( போகிறான் )

( டர்னிங் ஸீன் )

( குசன், இரண்டு மூட்டைகளைக் கட்டி வருகிறான் - வந்ததும் )

( பாட்டு )

லவன் : வந்த காரியம் முடிந்து விட்டது.வா போகலாம்!

குசன் : வார்த்தை யொன்றுண்டு கேளண்ணா!

லவன் ( வ-ம் ) இன்னுமென்ன வார்த்தையிருக்கிறது?

குசன் ( வ-ம் ) : இருக்கிறது. இல்லாமல் சொல்வேனா?

லவன் : இருந்தால், தாமதப்படுத்தாது சொல்லு!

குசன் : இவ்வளவு பெரிய மூட்டையை நாம் தூக்கிக் கொண்டு போவது கௌரவமா? வண்ணாரப் பயல் மூட்டை போலல்லவோயிருக்கிறது!

லவன் : அதற்கென்ன செய்யலாம்? நீ சொன்னதினாலே மூட்டை கட்டச் சொன்னேன். இது தூக்குவதற்கு ஆள் எங்கே தேடுவது? இங்கு வந்த எல்லோரும் மடிந்து போனார்களே.. யாராவது உயிரோ-டிருந்தால் அவரைச் சிறையாளராகப் பிடித்து இந்த மூட்டையைத் தலைச் சுமையாக ஏற்றி நடத்திக் கொண்டு போகலாம். இதற்கென்ன செய்யலாம்?

குசன் : அண்ணா! கவலைப்பட வேண்டாம். முன்னாலே வந்த குரங்குகளிரண்டும் சாகாமல் உயிரோடிருக் கின்றன. நான் ஆடை அணியணி கழற்றி வரும் போது பார்த்தேன். நமக்குப் பயந்து பிணங்களை யிழுத்துத் தங்கள் தலையிலே போட்டுக் கொண்டு பதுங்கிச் செத்த சனங்களைப் போல் அபிநயித்துக் கிடக்கின்றன. உத்தரவு கொடுத்தால், அக் குரங்குகளைக் கூட்டிக்கொண்டு வருகிறேன்.

லவன் : ( டர்னிங் ஸீன் ) அப்படியே செய்! ( குசன் போய் அங்கு மறைந்து பதுங்கியிருக்கும் அனுமான் ஜாம்பவானைத் தட்டி எழுப்பி )

குசன் : ஹே! வானரங்களே! நீங்கள் பிணங்களுக்குள் பதுங்கினால் விட்டுவிடுவோமென்றெண்ணினீர்களா? வெளியில் வாருங்கள்! சமாச்சாரமிருக்கிறது கேளுங்கள்!

ஜாம்பவான் : அய்யா! வீரர்களே! எங்களை ஒன்றும் செய்ய வேண்டாம்!

அனுமான் : நாங்கள் வேண்டுமானால் குட்டிக் கரணம் போடுகிறோம். கும்பிட்டுக் கொள்கிறோம்.

ஜாம்பவான் : கெஞ்சிக் கேட்டுக் கொள்கிறோம் ( குட்டிக்கரணம் போடுகிறார்கள் )

பாட்டு

குசன் : குட்டிக் கரணம் போட்டாலும்
கும்பிட்டென்னைக் கெஞ்சிக் கேட்டாலும்
கெஞ்சிக் கேட்டாலும் ( கு )
கொண்டு போகாமல் விடேன்
நானொருக்காலும்
கூடவருவீர் துன்பம் செய்யேனெக்காலும்
கொற்றவரணி பணியாவும் மூட்டைக்
கட்டிய துண்டவை தலைமேலும்
கொண்டு நீர் வந்திடில் உங்கள் மீது தயை
அன்புடன் செய்குவோம் மென்மேலும்
கோபமேதானாலும். ( குட்டிக் )

குசன் ( வ-ம் ) : என் வார்த்தையைக் கேளுங்கள்! உங்களை ஒரு இம்சையும் செய்யவில்லை. இந்த யுத்தத்தில் மடிந்த ராஜர்களின் ஆடையணிபணிகள் யாவையும் மூட்டைகளாகக் கட்டி வைத்திருக்கிறோம். அந்த மூட்டைகளைத் தூக்கிப் போக ஆட்கள் இல்லை. நீங்கள் அவைகளைத் தலையிலே தூக்கிச் சுமந்து கொண்டு எங்களோடு ஆஸ்ரமத்துக்கு வாருங்கள்! என்ன சொல்லுகிறீர்கள்?

அனுமான் : அப்படியே ஆகட்டும்.

ஜாம்பவான் : எங்களை இம்சிக்காமலிருந்தால் போதுமானது.

குசன் : ( பயந்த குரங்குகளைக் கூட்டி வருகிறான் )

( காட்சி முடிவு ) ( டர்னிங் ஸீன் )
( குசன் குரங்குகளோடு லவனிடம் வருகிறான் )

குசன் : அண்ணா! இதோ! இவர்களைக் கொண்டு வந்திருக்கிறேன். அடே! வானரங்களே! இந்த மூட்டைகளைத் தலைமீது தூக்கிக் கொள்ளுங்கள்!

( பாட்டு )

லவன் : வந்த காரியம் முடிந்துவிட்டது. வா போகலாம்.

குசன் : வானரங்கள் நீங்கள் வாருங்கள்.

லவன் : வந்து ஆஸ்ரமத்தில் சேருங்கள்.

குசன் : நல்ல வழி நோக்கி மனம் பயம் நீக்கி
எங்கட்கு மகிழ்வாக்கி இந்தச் சுமைதூக்கி
வந்திடில் உங்களை ஒன்றுமே செய்திடோம்.

அனுமான்,
ஜாம்பவான் : வாட்டி யடித்திட
வேண்டா முங்கள் பின்னே
மூட்டையைத் தூக்கியே
ஓட்டமாக வாரோம் (வந்)

(எல்லோரும் போகிறார்கள்)

20ஆவது காட்சி முடிகிறது



21ஆவது காட்சி

ஆஸ்ரமம். (ஸீதையிடம், லவகுசர்கள் குரங்குகளுடன் வந்து வணங்குகிறார்கள்)

நாடக மாந்தர்கள்: லவன், குசன், சீதை, அனுமான், ஜாம்பவான், வால்மீகி

லவன் : அம்மா! உம் கட்டளைபோல் யுத்தத்திற்கு வந்த அரசர்களையெல்லாம் கொன்று அக்கம் பக்கமுள்ள முனி ஆஸ்ரமச் சிறுபெண்கள் பொம்மைக் கல்யாணம் செய்து விளையாடப் பரிசு கொடுப்பதற்காகத் தம்பி அபிப்பிராயப்படி இதோ மூட்டைகளாகக் கட்டிக் குரங்குகள் தலைமீது சுமையேற்றி எடுப்பித்துக் கொண்டு வந்திருக்கிறோம்.

குசன் : ஆம்! அம்மா! வந்து பாருங்கள்! குரங்குகளைக் கூத்தாடச் சொல்லி உங்களுக்கு வேடிக்கை காட்டுகிறேன். குட்டிக் குரங்கைப் பார்க்கிலும் கிழட்டுக் குரங்கு நன்றாக ஆடுமம்மா!

சீதை : எங்கே?

குசன் : இதோ பாருங்கள்!

அனுமான்,
ஜாம்பவான் : தாயே! நமஸ்காரம்! (பாதத்தில் விழல்)

(பாட்டு)

சீதை : ஐயோ அனுமானே
நல்லருமைக் குணவானே (ஐ)
வையகமீதிவ்வாறு வருமென்று
மெய்யாக எண்ணாமல் போனேனே நானின்று (ஐ)

சுபசேதி சொன்ன தூதா
சுருதி தெரி ஸங்கீதா
உபகாரஞ் செய்தாற்கு
உதவாமல் போனேனே
அபகாரம் அபாக்கியமானேனே (ஐ)

வ-ம் : ஓ! ஆஞ்சநேயா! ஜம்புவந்தரே! உபகாரம் செய்த உங்களுக்கு அபகாரம் செய்த அபாக்கியவதியாகி விட்டேனே! விபரம் தெரியாமல் சிறுவனை யுத்தத்திற்கு அனுப்பி உங்களுக்கு இவ்வளவு துன்பத்தை உண்டு பண்ணினேன். என் பிராண நாயகர் முதலான யாவரும் மரணமடைந்துவிட்டார்களோ?

அனுமான் : தாயே! எங்களுக்கு அப்போதே தெரியும். என்ன செய்யலாம்! நாங்கள் அருகில் சென்று சந்தேக நிவர்த்தி செய்து கொள்ளக் கேட்கலாமென்று பார்த்தாலும், எங்களை நெருங்க விடுகிறார்க-ளில்லை. அய்யோ! அம்மா! எங்கள் தேகமெல்லாம் ரத்த வெள்ளம் வழிந்தோடும்படி அடித்து விரட்டினார்கள். ரோமத் துவார- மெல்லாம் அம்பு நுழைந்து மரணாவஸ்தை யிலிருக்கிறோம். உயிர்தான் போகவில்லை. தாங்கள் அன்று கொடுத்த சிரஞ்சீவிப் பட்டத்தால் வந்தது இவ்வளவும். இல்லாவிடில் நாங்கள் செத்த இடம் இந்நேரம் புல் முளைத்துப் போயிருக்கும். ராம லக்ஷ்மண பரத சத்ருக்கனர் முதலானோர்கள் எல்லாம் நிர்ஜீவியாய் விட்டார்கள் அம்மா!

சீதை : ஆ! பிராணேசா! (கீழே சாய்தல்)

(பாட்டு)

: இந்த விதி வந்ததேனோ ஏழை நான் சகிப்பேனோ
அந்த நாளில் செய்த பாவம்
அடையலான துக்கந்தானோ (இ)
தந்தையென்று மறியாமல்
தனயர் கொல்ல நேர்ந்ததையோ
சிந்தை நோகுதென்ன செய்வேன்.
தேவரீரின் வாழ்வும் பொய்யோ.

( சீதை புலம்புவது கேட்டு வால்மீகர் வந்து )

வால்மீகி :ஆகா! இதென்ன? ( ஞான திருஷ்டியால் உணர்ந்து ) ஓஹோ! அறிந்தேன். அம்மா! ஜானகி! வருந்தாதே! இதோ! யுத்தத்தில் இறந்த யாவரையும் எழுப்பித் தருகிறேன். விசனிக்காதே. சீக்கிரம் நீயுன் நாயகனையடையுங் காலம் நேர்ந்திருக்கிறது. அயோத்திக்குப் புறப்படத் தயாராகயிரு! இதோ! நான் போய் வருகிறேன்.

( போகிறார் ).

( 21ஆவது காட்சி முடிகிறது )



## 22ஆவது காட்சி

யுத்தகளம்

நாடக மாந்தர்கள்: வால்மீகி, ராமர், சீதை, லக்ஷ்மணன், பரதன், சத்ருக்கனன்

( வால்மீகி வந்து இறந்து கிடக்கும் ராம லக்ஷ்மண பரத சத்ருக்கனர் முதலான யாவரையும் கமண்டல நீர் தெளித்து உயிர் பெற்றெழச் செய்கிறார். அனைவரும் எழுந்த பிறகு ) -

வால்மீகி : ராமச்சந்திரா! இதென்ன மானுஷ்ய ஜெனன மோகாந்தகாரத்திற் குட்பட்டு நடிப்பவனாகக் காணப்படுகிறாய்? பூர்வம் பாற்கடல் பள்ளி கொண்ட நீ, பார்மகள் துன்பம் நீங்கவும், தேவர்கள் இடுக்கண் களையவும், பூவுலகில் அவதரித்து இவ்விதமெல்லாம் லீலா விநோதங் களை இயற்றுகின்றாய். குழந்தைகள் வேறு யாருமிலர். நம்முடைய ஜானகியின் அருமைப் புத்திரர்களே. உன் கோபத்தையும், விசனத்தையும் ஒழி! நீங்கள் யாவரும் அயோத்திக்குச் செல்லுங்கள்! இதோ! நான் ஜானகியையும் குழந்தைகளையும் அழைத்துக் கொண்டு அவ்விடம் வருகின்றேன்.

ராமர் : சுவாமி! தேவரீர் சித்தம் அடியேன் பாக்யம். நமஸ்காரம்.

வால்மீகி : மங்களமுண்டாகுக! சுகீபவா! விஜயீபவா!

( வால்மீகர் ஒருபுறமாகவும் ராம லக்ஷ்மண பரத சத்ருக்கன, படை வீரர் முதலானோரெல்லாம் மற்றொரு புறமாகப் போகிறார்கள் )

( 22ஆவது காட்சி முடிகிறது )




<u>தர்பார்</u>

( ராம, லக்ஷ்மண, பரத, சத்ருக்கன, ஆஞ்சநேய, வஸிஸ்ட,

சுமந்திர மற்றும் பிரதானியர் அனைவரும் சபையை அலங்கரித்து நிற்கிறார்கள் )

நாடக மாந்தர்கள்: ராமர், வால்மீகி, சீதை, லக்ஷ்மணன், அக்கினி, பரதன், சத்ருக்கனன், ஆஞ்சநேயன், சுமந்திரர், பிரதானியர்கள்.

( வால்மீகி, சீதையையும், லவகுசரையும் அழைத்து வருகிறார் தர்பாருக்கு. ராமர் எழுந்து வால்மீகரை வணங்குகிறார் ).

ராமர் : சுவாமி! வரவேண்டும். இவ்வாசனத்தில் அமருங்கள்!

**வால்மீகி** : ( ஆசீர்வதித்து அமருகிறார் )

( பாட்டு )

<u>பல்லவி</u>

**சீதை** : குற்றம் பொறுப்பீரே தயை
கொண்டு காப்பீரே.. எங்கள் ( குற் )

<u>அனுபல்லவி</u>

சற்றும் தெரியோமேதோதீது
தரும நெறியை நினைத்திப்போது ( குற் )

<u>சரணம்</u>

சிறியோர் செய்தல் பிழையானாலும்
பெரியோர் பொறுத்தல் கடனாம் மேலும்
குறுகிநின்று பணிவதாலும்
கோபம் வந்தாலும் - மென்மேலும்
தறுகண் நீங்கியே அன்பாலும்
சாந்தங் கொள்வீர் தண்ணீர் போலும்.
அறியோ மதனாலே தான் வந்த
அனர்த்தம் நினைத்தோ மடுத்தோமிந்தக் ( குற் )

**வால்மீகி** : ராமச்சந்திரா! குழந்தைகளும், ஜானகியும் வந்து மன்னிப்புக் கேட்டுக் கொள்ளுகிறார்கள். அவர்களை ஸ்வீகரித்துக் கொள்!

( பாட்டு )

ராமர் : உலகம் பழிக்கும் நிலையதனை
ஒழிப்பதற்கு ஒரு பிரமாணம் வேண்டும் ( உ )
கலகமிக வலுக்கக் கதைகள் பல கற்பித்து
கதனித்து நிற்பதுவுங் கருதுவார் விகற்பித்து ( உ )
தசக்ரீவன் நாசத்தின் பின்
நெருப்புக் குழியில் மூழ்கித்
தன்மகிமை காட்டினாலும்
தரும தேவதையும், விண்ணமரர் குலாதிபரும்
தாமறிந்த துண்டானாலும்
இசைக்கு மிரு சிறுவர்
இங்குத் தோன்றுவதாலும்
இன்னுமொருதரம் அக்கினி
மூழ்கவேணும் மேலும் ( உ )

ராமர் வ-ம் : சுவாமி! ராவண சம்ஹாரமானதும், ஜானகியை அக்கினி மூழ்கச் செய்து, உலகத்தவர், அவள் மாசற்றவள் என்று தீர்மானித்த பிறகே அவளை நான் அங்கீகரித்துக் கொண்டேன். ஆனாலும், சிலர் வசை கூறி நிந்திப்பதை விடமாட்டார்கள். நேரில் சொல்லத் தயங்கினாலும், அந்தரங்கத்தில் அவர்கள் கலகக் கதைகள் பேசிப் பழிக்கும்படி ஏற்படுமாகையினாலும், இரண்டு சிறுவர்கள் இங்கிருப்பதினாலும், ஜானகி மீண்டும் ஒருமுறை இவ்விரு குழந்தைகளுடன் அக்கினி ஸ்நானம் செய்தால் பிறகு நான் ஸ்வீகரித்துக் கொள்ளுகிறேன்.

வால்மீகி : அப்படியே ஆகட்டும்!

ராமர் : லஷ்மணா! அக்கினி குண்டம் சித்தப்படுத்து!

லக்ஷ்மணன் : அப்படியே அண்ணா! ( போகிறான் )
( எல்லோரும் போதல் )

23ஆவது காட்சி முடிகிறது



## 24ஆவது காட்சி

( டர்னிங் சீன் ) அக்கினி குண்டம்.

நாடக மாந்தர்கள்: ஜானகி, ராமர், அக்கினி, வால்மீகி, லவன், குசன்

ஜானகி : வத்ஸர்களே! வாருங்கள்! உலகிலுள்ள யாவரும் பஞ்சபூதங்களில் ஒன்றாகிய அப்புவாகிய

நீரிலேதான் ஸ்நானஞ் செய்கிறார்கள். நாமும் இப்பொழுது பஞ்ச பூதத்தில் ஒன்றான தேயு வாகிய நெருப்பிலேதான் ஸ்நானஞ் செய்யப் போகிறோம். இதில் விரோதமொன்றுமில்லை. இறங்குங்கள் விரைவில் இந்த அக்கினிக் குழியில்!

( அக்கினி குண்டத்தை வணங்கி, சுற்றி மும்முறை வலம் வந்து, சீதை லவகுசர் இறங்குகிறார்கள். )

( வெளிவரும்போது குசன் மட்டும் அக்கினிக்கு இறையாகி விடுகிறான். மற்ற இருவரும் வருகிறார்கள். ராமய்யன் சந்தேகிக்கிறான் ).

( பாட்டு - தர்க்கம் )

ராமர் : சந்தேகமானதோர் பிள்ளை
தன்னைக் காணோமே
எந்த விதமிது இளையவனின்று
வந்தணுகவில்லை மறைந்தனனகன்று ( சந் )

அக்கினி : இன்றுமுனக்குச் சந்தேகம்
ஏனோ ராகவா ( இ )
அன்னையிவள் கற்புத் தீயதனாலே நானே
முன்னமொரு நாள் முறையிட்டு நொந்தேனே
( இ )

ராமர் : எனது வீரியத்தினில்
இருந்தெழு பிள்ளையானால்
இவனைப் போல் வருவதற்
கிசைவான் வராததினால் ( ச )

அக்கினி : மந்திர சக்தியினால் வந்தவனானதினால்
மதித்தென்னிடத்தில் ஐக்ய
மாக்கிக் கொண்டேனதனால் ( இன் )

ராமர் : ஸ்வாமி! இன்னொரு குழந்தை மறைந்துவிட்ட காரணமென்ன?

வால்மீகி : இராமச்சந்திரா! இந்த லவன் சிறு குழந்தையா யிருந்தபோது ஜானகி என்னிடம் வைத்துவிட்டு ஜலம் திரட்டப் போய்விட்டாள். பிறகு நான் நிஷ்டை கூடி விட்டதால், ஜானகி மறுபடியும் வந்து குழந்தையை எடுத்துப் போனதை நான் என் ஊனக் கண்ணால் பார்க்கவில்லை. ஆகவே, குழந்தையை ஏதோ துஷ்டமிருகம் கௌவிக் கொண்டு போனதாக எண்ணி ஜானகி வந்ததும், குழந்தையைக் காணோமென்று துக்கத்தால்

பிராணனை விட்டுவிட்டால் என் செய்வது என்று, தர்ப்பைப் புல்லாகிய குசையை எடுத்து இந்த லவனைப் போல் சிருஷ்டித்து வைத்துவிட்டேன். பிறகு, குழந்தையோடு வந்த ஜானகி, இக்குழந்தை ஏதெனக் கேட்க, குசையினால் உண்டாக்கப் பட்டதால் குசலவன் என்று காரணப் பெயரிட்டு, இதுவும் உன் குழந்தைதானம்மா வென்று கொடுத்து வளர்த்துக் கொள்ளச் சொன்னேன். அந்தக் குசனே, இப்போது அக்கினியில் மறைந்தவன். அவன் மந்திர சக்தியினால், உண்டானவனாதலால், தர்ப்பைப் புல்லுக்குக் காரண பூதனான அக்கினி பகவான் அவனைத் தன்னுள் ஐக்கியப் படுத்திக் கொண்டான். ஆகையால் ஒழி உன் சந்தேகத்தை!

ஜானகி : இன்னும் நாயகர் சந்தேகிப்பதானால் நான் ஏன் இவ்வுலகில் இருக்க வேண்டும்? என் அன்னையாகிய பூமா தேவியே! நான் சொல்வதைக் கேள்!

/ கஜல்/

வினைப் பாசத்தையறுத்த முனி வேள்வி காத்து
மிதிலை சென்றே
எனக்காக யீசன் வில்லறுத்தெனைக்
கைப்பிடித்த எழிலாகும்
புனைக் காயாம்பூ நிறத்தானையன்றி
மற்றோர் பூமனையான்
மனத்தாலும் வாக்காலும் நினையேனேல்
வழி தாயெனக்கு மண்மகளே.

( பூமி வாய் பிளக்கிறது. சீதை அதனுள் மறைந்து விடுகிறாள் )

ராமர் : ( சினந்து ) ஆஹா!. என்ன?

பாட்டு

கொண்டு வா லக்ஷ்மணா
கோதண்டத்தையின்று மூதண்டம் பேதிக்க
கொஞ்சமும் எண்ணாமல் ( கொ )
பூமியாள் சீதையைக்
கொண்டு போனாள் கண்முன்
தந்திட்டாள் வேதையை
பூமியைப் பிளந்து கணை
பூட்டிப் பாதாளம் வரை
புண்படுத்திச் சாகரத்தில்
தூற்றுவேன் பொய்யேனுரை
பூவை சீதையைக் கொள்ளுவேன் ( கொண்டு )

ராமர் வ-ம் : லக்ஷ்மணா! கோதண்டத்தைக் கொண்டுவா! கொஞ்சமேனும் எண்ணாமல் பூமாதேவி ஜானகியைத் தூக்கிக் கொண்டு பூமிக்குள் செல்கிறாள். என்ன மமதை? இப்பொழுதே பூமியைப் பிளந்து சாகரத்தில் எறிந்து ஜானகி எங்கிருந்தாலும் தேடிக்கொண்டு வருகிறேன். எடுத்து வா என் கோதண்டத்தை!

பாட்டு

வால்மீகி : பொறு பொறு. ராமச்சந்திரா.
சினங் கொள்ளாதே (பொ)
மறுவில்லாத ஜானகி வந்த வினை முடித்து
வைகுந்தத்திற் கெழுந்தாள்
வாடாதே நீ துடித்து (பொ)
பூமிதேவி மேல் சினம் பொருந்துதல் சரியில்லை
பூரணமாயுன்னை எண்ணலை கேளென்சொல்லை
தாமதம் வேண்டாம் நாணி
தளர்த்துவாய் இந்த வில்லை
சகல லோகமும் உன்னால்
அடையலாகுமே தொல்லை (பொ)

வ-ம் : இராமச்சந்திரா! இதென்ன லீலா வினோதனென் பதற்கிணங்க நடிக்கிறாய்! பொறு! பொறு! பதறாதே! நீ முனிந்தால் உலகம் என்னாவது? பூமி தேவி மேல் சினங்கொள்ளாதே! பார்மகள், துன்பம் நீங்கவன்றோ பரமபத நாதனாகிய நீ அவதரித்தாய்? அவளையே இப்போது நீ இம்சிப்ப தென்றால் ஞாயவிரோதமாகவன்றோ முடியும்? நான் சொல்வதைக் கேள்! ஜானகி இவ்வுலகில் வந்த காரியம் முடிந்துவிட்டது. அவள் வைகுந்தத் திற்கு எழுந்தருளினாள். நீயும் குழந்தை லவனுக்கு இந்த ராஜ்யத்தை மகுடாபிஷேகம் செய்துவிட்டு முன்போல் வைகுந்தத்திற்கு எழுந்தருள வேண்டும். அதுவே என் போன்ற முனிவர்கள் கோரிக்கை. தேவர்கள் எல்லோரும், உன் வருகையை எதிர் பார்த்துக் கொண்டிருக்கிறார்கள். ஆகவே, நீ பரம பதக்காக்ஷி கொடுத்து எங்கள் எல்லோரையும் மகிழ்விக்கச் செய்யவேண்டுமென்று கேட்டுக் கொள்ளுகிறேன்.

ராமர் : அப்படியே ஸ்வாமின்.

(டர்னிங் சீன்)

(24ஆவது காட்சி முடிகிறது)



## 25ஆவது காட்சி

### தர்பார்

( அனைவரும் சூழவிருந்து மகுடாபிஷேகம் லவனுக்கு நடத்தி மகிழ்கிறார்கள் )
( டர்னிங் )

## 26ஆவது காட்சி

### பரமபதக்காக்ஷி

ஸ்ரீராமர் - மஹாவிஷ்ணுவாகவும் சீதை - மஹாலக்ஷ்மியாகவும் லக்ஷ்மணன் - ஆதிசேடனாகவும், பரத சத்ருக்களர் - சங்கு சக்கரமாகவும் மாறி, சகலருக்கும் காக்ஷி தருகிறார் ).

********************

மங்களம். சுபம்

## தவத்திரு தூ.தா. சங்கரதாஸ் சுவாமிகள்

இயற்றிய

# லவகுச நாடகம்

## அருஞ்சொற்பொருள் அகராதி

### அ

அகடவிகடம் - குறும்பு, வஞ்சகம், இரண்டகம்
அகம் - அகங்காரம், செருக்கு, மனம்
அக்ஞானதிருஷ்டி - தெய்வ அறிவில்லாத பார்வை
அக்ரமம் - அநீதம், கொடுமை
அசத்தியம் - பொய்
அசுத்தங்கள் - தூய்மையற்றவை
அடம் - பிடிவாதம்
அட்டியின்றி - தடையில்லாமல்
அணிபணி - அணிவதற்குரிய ஆபரணம்
அதர்மா - அறமல்லாதது
அதிக்ரமித்து - கடத்தி, நீக்கி, போகவிட்டு
அதிதுரிதம் - மிக விரைவு
அதிரதர் - முழுத்தேரரசர்
அதிரதவீரன் - முழுத்தேர் வீரன்
அதிர்ஷ்டசாலி - பார்வைக்கெட்டாத நன்மை பெற்றவன்
அத்யாவஸ்யம் - இன்றியமையாமை
அநியாயம் - அறமற்றது, மறம்
அந்தகாரம் - இருள், நரகம்
அந்தரங்கம் - இரகசியம், ஏகாந்தம், மனம்
அபகாரம் - நன்மைக்குத் தீமை செய்தல், தவறு, பொல்லாங்கு
அபகீர்த்தி - பழி
அபக்ஞானமொழி - தெய்வீக அறிவில்லாத சொல்
அபச்சாரம் - துன்னடை, தீயொழுக்கம்
அபவாதம் - பழிச்சொல், குற்றச்சாட்டு
அபிநயித்து - கைமெய்காட்டி
அபிப்ராயம் - எண்ணம்
அப்யசிக்கவேண்டும் - பழகவேண்டும்
அப்பியாசிக்கின்றோம் - பழகுகின்றோம்
அப்பு - நீர்
அமராட - போரிட
அமரேசன் - இந்திரன்
அமிர்தம் - அமிழ்தம், தேவஉணவு
அம்சம் - கூறு, உரிமைப்பாங்கு
அரண்டு - அஞ்சி
அரி - திருமால்

அருந்ததி - வசிட்டன் மனைவி, அவள் கற்பில் சிறந்தவள்
அர்த்தம் - பொருள்
அலங்கிருதம் - அலங்காரம், அழகு
அலக்ஷியம் - அற்பமானது, கணிசக்குறைவானது
அவஸ்யம் - இன்றியமையாமை
அறிவருக்கம் - அறிவுடையோர் கூட்டம்
அற்பம் - சிறுமை
அற்புதம் - அதிசயம்
அனர்த்தம் - பொல்லாங்கு, பயனின்மை
அனுக்கிரஹித்தல் - அருள்செய்தல்
அனுஷ்டானம் - நிலைநிறுத்தல்
அன்னம் - சோறு, ஒரு பறவை
அக்ஷயமாக - கேடின்மையாக
அஸ்தமனம் - மறைதல், அற்றுப்போதல்
அஸ்திரசஸ்திரங்கள் - அம்பும் வாட்களும்
அஸ்திரம் - அம்பு
அஸ்வமேதயாகம் - ஒருவகையாகம், குதிரையை உலகில் வலம் வரவிட்டுச் செய்யும் யாகம்
அஸ்வரக்ஷகத்துக்காக - குதிரையைக் காப்பதற்காக
அஸ்வாரோஹணர் - குதிரையின்மீது ஏறுபவர்
அஷ்டதிசை - எட்டுத்திசைகள்
அஹம்பிரஹ்மாஸ்மி - யசுர்வேதமகாவாக்கியம் நான்கில் ஒன்று

## ஆ

ஆக்ஞாசக்ராதிகாரம் - ஆணைச்சக்கர அதிகாரம்
ஆக்ஞாபித்திருக்கிறார் - கட்டளையிட்டிருக்கிறார்
ஆக்ஞை - ஆணை, கட்டளை
ஆச்சாரம் - ஒழுக்கம், நெறி
ஆச்சாரியார் - ஒழுக்கநெறியாளர்
ஆத்மஞானி - ஆன்மாவை அறியும் அறிஞர்
ஆத்மார்த்தம் - ஆத்தும ஆக்கத்திற்குரியது, தன்பயனுக்குரியது
ஆத்மானந்தம் - ஆன்ம மகிழ்ச்சி
ஆரண்யம் - காடு
ஆரோபமான - ஏறுதற்குரியதான, ஒன்றை வேறொன்றாக அறிதற்கான
ஆலீட நிலை - வலக்கால் மண்டலித்திடக்கால் முந்துறுநிலை
ஆலோசனை - சிந்தனை
ஆஸ்ரமங்கள் - இளைப்பாறும் இடங்கள், பன்னசாலைகள்
ஆஸ்ரயித்தல் - ஒருவனை அடுத்திருத்தல், பாதுகாத்தல்
ஆக்ஷேபனை - தடைபண்ணுதல், மறுப்பு

## இ

இகபரசவுக்கியம் - இம்மை மறுமைகளுக்கடுத்த நலம்
இச்சை - விருப்பம், ஆசை

இச்சித்தல் - விரும்புதல், ஆசைப்படுதல்
இத்ததி - இந்தப்பருவம்
இந்திரவர்ணம் - மேன்மையான புகழ், மேன்மையானவை
இம்சை - துன்பம்
இம்மை - இப்பிறப்பு
இஷ்டகாமியம் - இச்சித்த பொருளை நினைத்தபடி பெறுதல்
இஷ்டம் - விருப்பம்

உ
உக்ரவீரசக்தி - கடுமையான வீர ஆற்றல்
உச்சாடனம் - அகற்றல், ஏவுதல்
உச்சிதம் - அரியது, அழகு, உயர்ச்சி, கொடை, தகுதி, நெஞ்சில் மேன்மை
உத்தண்டம் - அதிகாரம், கொடை
உத்தரபிரதியுத்தர சம்பாஷணைகள் - மறுமொழி கேட்கும் பொருள்கள் பற்றிய உரையாடல்கள்
உத்தரவு - ஆணை
உபசாரம் - உபகாரம், உதவி
உபநிடதம் - வேதசாரசாத்திரம், வேதத்தின் உட்பொருள்
உபாயம் - தந்திரம், சூழ்ச்சி
உருப்படி - வடிவத்தின்படி, மறுவடிவம்
உலகரக்ஷை - உலகைக்காத்தல்
உவர் - உவர்ப்பு, கடல், கடுகடுப்பு, வெறுப்பு
உள்ளபரியந்தம் - உள்ளவரைக்கும், முடிவுவரை

ஊ
ஊழிக்காலம் - உகாந்தகாலம், உலகம் அழியும் காலம், நெடுங்காலம்

எ
எச்சிநாயே - எச்சில்நாயே
எத்தனிப்பதை - எண்ணுவதனை

ஏ
ஏககாலம் - ஒரே காலம்
ஏகபத்தினி விரதம் - ஒரே மனைவியுடைய விரதம்
ஏகாலி குலத்தினன் - துணி வெளுக்கும் குடியினன்

ஐ
ஐந்து பூதம் - நிலம், நீர், காற்று, வெளி, தீ ஆகியவை
ஐக்யம் - ஒற்றுமை

க
கஞ்சம் - தாமரை
கடாட்சம் - கருணை, அருள்தன்மை

கண்டாங்கி - ஒருவகைப் புடவை
கப்பணம் - இரும்பு, நெருஞ்சின்முள், கழுத்திடுமிரும்புத்தகடு, கைவேல்
கருணை - அருள்
கர்ம சண்டாளன் - செருக்கு முதலான செயல்களையுடைய துரோகி
கர்ஜனை - முழக்கம்
கல்யாணம் - திருமணம்
கற்பவதி - கருக்கொண்டவள்
கனிஷ்டர் - பின்னால் பிறந்தவர்
கனிஷ்டபாந்தவன் - பின்னால் பிறந்த உறவு முறையுடையவன்
கஷ்டம் - துன்பம்

## கா

காசினி - உலகம்
காதகன் - கொலையாளி
காதகி - கொலைகாரி
காமவியாதி - காமநோய்
காயாம் பூ நிறத்தான் - நீலவண்ணமுடையவன்
காலக்ரமம் - காலாட்சம், காலமுறை
காலாக்கினிருத்ரன் - ஊழித்தீயாகிய பெருங்கோபி

## கி

கிட்டினோம் - கிடைத்தோம், அணுகினோம்
கிரியை - செயல்
கிருத்தியங்கள் - கடமைகள், கிரியை முறைகள்

## கீ

கீர்த்தி - புகழ்

## கு

குசை - தருப்பை
குதை - பணிப்பூட்டு, முனை, வில்குறை
கும்மாளம் - குதியன், குதிப்பு
குருமகராஜ் - ஆசானாகிய பேரரசர்
குரூரம் - கொடுமை
குரூரராக்ஷஸக்கூட்டம் - கொடிய அரக்கர் கூட்டம்
குலோற்பவ - குடியில் தோன்றியவனே
கெருடாஸ்திரம் - கருட அம்பு

## கெ

கெஜாரூடர் - யானையைப் பற்றிய கலைஞானத்தில் தேறியவர்

## கே

கேசி - சிங்கம்

## கோ

கோதண்டம் - வில்
கோலாகலம் - இடம்பம், பேரொலி

*ச*

சகலம் - எல்லாம்
சகலகலா விற்பன்னர் - எல்லாக் கலைகளிலும் புலமையுள்ளவர்
சகலருக்கும் - எல்லாருக்கும்
சகஜம் - இயற்கை
சகாயம் - உதவி, நன்மை
சகிக்கலாமோ - பொறுத்துக்கொள்ளலாமோ
சங்கம் - கூட்டம்
சஞ்சலம் - துன்பம்
சஞ்சரிக்கும் - உலாவும்
சடவா - மூடனே
சண்டாளன் - துரோகி
சதிபதிகள் - கணவன் மனவையர்
சதுஷ்டயம் - நான்கு மடங்கு கொண்டது
சத்கர்மாக்கள் - இறைவனுக்குரிய செயல்கள்
சத்துருகோபா - பகைவர்களைச் சினப்பவனே
சத்யஸ்வரூபி - வாய்மை வடிவானவன்
சத்வஸ்வரூபி - கடவுள் வடிவானவன்
சந்ததம் - எப்பொழுதும்
சந்தர்ப்பம் - சூழ்நிலை
சந்தை - கூட்டம், கடைவீதி, வேதம் ஓதுமிடம்
சந்தோஷம் - மகிழ்ச்சி
சப்தசமுத்திரம் - ஏழுகடல்கள்
சமர் - போர்
சமர்த்து - திறமை
சமாச்சாரம் - செய்தி
சமாதி - சமப்படுத்தல், சாவு, சவக்குழி, அமைதி, பற்றற்ற நிலை
சமேத - கூடியிருப்பவனே
சம்சாரம் - மனைவி
சம்பவிக்கும் - நிகழும்
சம்மாரம் - அழிவு
சயனித்திருப்போம் - உறங்கி இருப்போம்
சரணாம்புஜம் - அபயம் அளிக்கும் முன்கை
சரம் - அம்பு
சரியை - சைவசாதனத்தொன்று, ஒழுக்கம்
சரீரத்யந்தமும் - உடலிருக்கும் முடிவு காலம் வரையிலும்
சர்வசம்மாரகாலம் - அனைத்தும் அழியும் காலம்
சல்லாப நாயகி - கூடிப்பேசும் தலைவி
சவம் - பிணம்
சவிஸ்தாரம் - விரிவு
சற்குணம் - நற்பண்பு

சா

சாகரம் - கடல்
சாங்கோபசாங்கம் - அணியப்பட்டதன் ஒழுங்கு
சாதித்தாய் - வென்றாய்
சாந்தம் - அமைதி
சாமக்கிரியைகள் - மரணச்சடங்குகள்
சாமான்யம் - பொது, முழுவதும்
சாம்ராட் - பேரரசன்
சாம்ராஜ்யம் - பேரரசு
சாரணர் - ஒற்றர், புலவர்
சாவகாசம் - விரைவின்மை, நிதானம்
சாஸ்திரம் - கலை

சி

சிங்காரக்ருகம் - அழகிய இல்லம்
சிட்சித்து - தண்டித்து
சித்தம் - உள்ளம்
சித்ரம் - ஓவியம்
சித்தஸ்வரூபா - உள்ளத்தில் உருக்கொண்டவனே
சித்தஸ்வாதீனம் - மனம் தன் கட்டுப்பாட்டில் இருத்தல்
சித்தாந்தம் - முடிந்த முடிவு
சிருஷ்டித்தல் - படைத்தல்
சிரேஷ்டன் - சிறந்தவன் , மேன்மையானவன்
சிஷ்யர்கள் - மாணவர்கள்
சிக்ஷிப்பது - ஒறுப்பது, தண்டிப்பது

சீ

சீக்கிரம் - விரைவு
சீதளம் - குளிர்ச்சி, ஈரம்
சீதளாதி - குளிர்ச்சியானவை முதலியன

சு

சுகதுக்கங்கள் - இன்பதுன்பங்கள்
சுகர்மம் - தன்பணி
சுகிப்பது - இன்பமடைவது
சுத்த ஆகாயம் - தூயவெளி
சுந்தரம் - அழகு
சுபசேதி - நற்செய்தி
சுபதினம் - நன்னாள்
சுயநலம் - தன்னலம்
சுவறி - காய்ந்து
சுவாதீனம் - சுயாதீனம், சொந்தம்
சுற்றார் - சுற்றத்தார்

## சூ
சூரியோதயம் - கதிரவன் தோற்றம்

## செ
செண்ணுக்காது - வடிவம் கொள்ளாது, உருக்கொள்ளாது
செண்ணம் - வடிவு

## சே
சேதித்து - அறுத்து, வெட்டி
சேவித - சேவகனே, ஊழியனே
சேவை - தொண்டு
சேனாநாயகர் - சேனைத்தலைவர், படைத்தலைவர்

## சை
சைன்யம் - சேனை, படை

## சொ
சொர்ணப்பதுமை - தங்கப்பதுமை

## சோ
சோனைமாரி - சொரியும் மழை

## சௌ
சௌகரியம் - நலம்
சௌக்யம் - நலம், வசதி
சௌரியம் - வலிமை, ஆண்மை, வீரம்

## ஞா
ஞாயசத்தயர் - நியாய வாய்மையாளர், நேர்மையுடைய வாய்மையாளர்
ஞாயம் - நியாயம்
ஞானத்திருஷ்டி - ஞானக்கண்
ஞானம் - அறிவு

## த
தகிக்கிறான் - சாடுகிறான்
தசகண்டன் - இராவணன்
தசக்ரீவன் - இராவணன்
தட்டுக்கெட்டுப்பூட்டுது - தன்மை கெட்டுவிட்டது
தட்டுவாணிச் சிறுக்கி - இளம்பரத்தை
தண்டம் - படை
தண்டத்தலைவர் - படைத்தலைவர்
தந்திக்கடவுள் - விநாயகர்
தந்த்ர உபாயம் - தந்த்ரோபாயம், உபாயம்

தந்த்ரோபாயம் - தந்திர உபாயம்
தர்க்கம் - வாது
தயாசிந்து - அருள்சொரியவனே
தயிலம் - எண்ணெய்
தயிலாரி - தயிலம் + அரி, எண்ணெய்ப் பிசுக்கைக் களைவது
தர்பார் - அரசவை
தர்மம் - தருமம், அறம்
தவஸ்ரேஷ்டர்கள் - தவத்தில் மேன்மையானவர்கள், தவமுனிவர்கள்
தனயா - மகனே
தனவந்தன் - செல்வன்
தனு - வில்
தனுர்வித்யாப்யாசம் - வில்வித்தைப் பயிற்சி
தன்யனாகினேன் - செல்வமுடையவனாகினேன்

## தா

தாகசாந்தி - நீர்வேட்கைத் தணித்தல்
தாசரதிநாயகன் - இராமன்
தாபம் - தாகம், துக்கம், துன்பம்
தாம்பூலம் - வெற்றிலை
தாரணி - உலகம்
தாரகமந்திரம் - ஆதாரமந்திரம், ஒருமந்திரம்
தாரதம்மியம் - ஏற்றத்தாழ்ச்சி
தாரம் - மனைவி

## தி

திகம்பரம் - இருள், நிருவாணம்
திக்பிரமை - திசை அறியாமை, ஏதும் தோன்றாமை
திடகாத்ரதேகபலம் - உறுதியான உறுப்புகள் அமைந்த - உடல்வலிமை
திரிகாலம் - முக்காலம்
திரிலோகம் - மூன்றுலகம்
தியங்கி - சோர்ந்து
திவ்யதயாபரா - மேன்மையான அருளாளா
திவ்யகற்பு - மேன்மையான கற்பு
திவ்யபோதம் - மேன்மையான போதனை
திவ்யம் - தெய்வீகம், மேன்மை
திவ்யவந்தன் - மேன்மையானவன்

## தீ

தீர்க்கம் - தெளிவு, நிச்சயம், நிறைவு, முழுமை
தீர்க்காலோசனை - தெளிவான ஆய்வு
தீனம் - எளிமை, குரூரம், குறை, கேடு
தீஷண்யம் - வெப்பம்
தீக்ஷகுரு - உபதேசகுரு

## து

துக்கம் - துயரம்
துரை - அதிகாரி, மேன்மகன்
துவந்தயுத்தம் - நெருக்கமானபோர்
துவம்சநாசம் - அழிவு
துஷ்டநிக்ரக சிஷ்டபரிபாலனம் - துட்டரையழித்து நல்லோருக்கு அருளல்
துஷ்டபாபாத்மா - தீயபாவ ஆன்மா

## தூ

தூர்த்தண்ட - வஞ்சகமான பகைவனே
தெய்வானுக்ரஹம் - கடவுளின் அருள்

## தே

தேசசஞ்சாரம் - நாட்டில் திரிதல்
தேட்டம் - ஆராய்வு, கவலை, சேகரிப்பு
தேயு - நெருப்பு
தேவடிச்சிறுக்கி - இளம்பரத்தை
தேவப்பிரசாத ஞானசாஸ்திர இதிகாசம் - கடவுள் அருள்பெற்ற அறிவுக்கலை - இதிகாசம்
தேவாம்ஸ உற்பன்னர்கள் - கடவுளின் உரிமைப்பாங்குடன் தோன்றியவர்கள்
தேவரகஸ்ய விருத்தாந்தம் - தேவ அந்தரங்க ( மறைவு ) மான கதை அல்லது காரியம்

## தோ

தோட்டி - வெட்டியான், அழகு
தோமரம் - எறிபடை
தோஷம் - குற்றம்

## ந

நடுநிசி - நள்ளிரவு
நந்தன - மகனே
நமஸ்கரிக்கிறேன் - வணங்குகிறேன்
நரமாம்சபக்ஷணிகள் - மனித இறைச்சி உண்பவர்கள்
நற்குணசிகாமணி - நல்ல பண்புள்ள சிறந்தவன்
நற்சற்குண விவேகி - நல்ல பண்புள்ள அறிவாளி

## நா

நாகாஸ்திரம் - நாகபாணம் ( அம்பு )
நாணி - வில்நாண்

நாதகீதம் - இசையொலி
நாயகர் - தலைவர்
நாயகி - தலைவி
நாரி - பெண்
நானாவிதமான - பலவிதமான

## நி

நிச்சயம் - உறுதி, மெய்
நிணங்கள் - கொழுப்புகள்
நித்தியசுகம் - வீடுபேறாகிய இன்பம், என்றும் இன்பம்
நியாயாதிபதி - நீதிபதி
நிருமித்த - நியமித்த
நிர்மூலமாக்கி - முழுதும் அழித்து
நிர்லஜ்ஜா - கூச்சமின்மை, வெட்கமின்மை
நிர்த்தனசாலை - நடன அரங்கம்
நிர்மானுஷ்யம் - மனிதப்பிறப்பின்மை
நிர்வகுப்பாரோ - ஒழுங்காக நடத்துவாரோ
நிர்ஜீவியாய் விட்டார்கள் - வாழமுடியாதவர்கள் ஆகிவிட்டார்கள்
நிவர்த்தி - நீக்கம்
நிற்புதம் - ஓர்எண்
நிஷ்டாபரன் - நிட்டை தவறாதவன்
நிஷ்டை - மனம் வாக்குக் காயங்கள் அசைவின்றி இருத்தல்
நிஜம் - உண்மை

## நீ

நீச்சர் - ஈனமானவர்கள்
நீதி - நியாயம், முறைமை
நீலமேகஸ்யாமளம் - நீலமேகநிறம்

## நே

நேசசல்லாபம் - நட்புடன் கூடிப்பேசுகை, அன்புடன் கூடிப்பேசுகை
நேசி - நட்புக்கொள், காதலி

## ப

பச்சாதாபம் - இரக்கம்
பஞ்சமாபாதகர் - ஐந்து பெரிய துரோகங்கள் செய்தவர்கள்
பஞ்சவர்ணங்கள் - ஐந்து நிறங்கள்
படல் - மூடி, தட்டி
படிமீதினில் - உலகில்
பதிவிரதை - கற்புள்ளவள்
பத்மபதம் - தாமரைப்பாதம்
பந்தித்தல் - கட்டுதல்

பரராஜ பயங்கர - பகையரசர்கட்கு அச்சம் தருபவனே
பரராஜகோளரி - பகையரசர்கட்கு ஆண்சிங்கம் போன்றவன்
பரமபதக்காக்ஷி - மோட்சக்காட்சி, விட்டுணு காட்சி
பராக்ரமம் - வீரம், ஆண்மை
பரிதாபம் - இரக்கம்
பரீக்ஷிக்கும் பொருட்டு - ஆராயும் பொருட்டு
பர்ணசாலை - ஆச்சிரமம்
பர்வதம் - மலை
பலாட்டியர் - பலமுள்ளவர்கள்
பதாதி - காலாள்
பஸ்மீகரம் - சாம்பலாதல்
பக்ஷமுடன் - நேசமுடன், உருக்கமுடன்
பக்ஷி - பறவை
பக்ஷித்து - உண்டு, விழுங்கி

## பா

பாக்கியசாலி - அதிட்டமுள்ளவன்
பாணிக்கிரகம் - கைபிடித்தல், திருமணம்
பாதம் - அடி, தாள்
பாதுகை - செருப்பு, மிதியடி
பாந்தவர்கள் - உறவுமுறை உள்ளவர்கள்
பாரிசத்தில் - ஒருமலையில், பக்கத்தில், திசையில்
பாலாஷ்டியத்தோடு - பலவந்தத்தோடு

## பி

பிசகு - தவறு
பிசாசு - பேய்
பிரதாபம் - உயர்ச்சி, கீர்த்தி
பிரதானம் - மூலம், விசேடம்
பிரசவசிகிச்சை - மகப்பேற்று மருத்துவம்
பிரதி - மாற்று
பிரதியாலிட நிலை
பிரமாணம் - அத்தாட்சி
பிரயத்தனம் - முயற்சி
பிரயோகிப்போம் - செலுத்துவோம்
பிரயோஜனம் - பயன், பலன்
பிரவேசம் - தோற்றுதல்
பிரஷ்டபாகம் - புட்டம்
பிரஸ்தாபித்து - அறிவித்து
பிரமேந்திர தேவராதியர் - பிரம்ம இந்திர தேவர் முதலியோர்
பிரஜைகள் - மக்கள்
பிரதேசம் - இடம்
பிரமாதம் - கொல்லல், தவறல், மோகம், வருத்தம், வெறி
பிராயம் - வயது

பிரார்த்திக்கிறேன் - விண்ணப்பம் செய்கிறேன்
பிரீதி - உவப்பு

## பீ

பீதி - அச்சம்

## பு

புத்தி - அறிவு
புத்ரவாத்ஸல்யம் - மகன்மேல் அருள்
புத்ரி - மகள்
புயகம் - பாம்பு
புருஷன் - ஆண்மகன், கணவன்
புஜபலம் - தோள்வலிமை
புஷ்பம் - மலர்

## பூ

பூப்பிரதக்ஷணம் - புவியை வலம் வருதல்
பூரண மெய்ஞானம் - முழுமையான மெய்யறிவு
பூரணம் - நிறைவு, முழுமை
பூரண கர்ப்பிணி - நிறைகருப்பம் உடையவள்
பூர்ண ஆசீர்வாதம் - முழுமையான வாழ்த்து
பூர்த்தி - நிறைவு
பூர்வஜென்மம் - முற்பிறவி
பூலோகம் - உலகம்
பூமனை - பிரம்மனை, நான்முகனை
பூமி - உலகம்

## பெ

பெருநடை - உயர்ந்த நடை

## பே

பேஷ் - நன்று

## பை

பைசாசநிலை - ஒருதாளினின்று மற்றைத்தாள் முடக்கி நிற்றல், இது யுத்தநிலை நான்கிலொன்று

## பொ

பொஞ்சாதி - பெண்சாதி, மனைவி

## போ

போதம் - அறிவு, ஞானம்
போதித்தல் - கற்பித்தல்

## ம

மகத்தான - பெரிதான, மேன்மையான
மகாவீரப்பிரதாபர் - பெரிய வீரப்பு கழுடையவர்
மகிபா - மன்னவா
மகிமை - பெருமை
மகுடாபிஷேகம் - முடிசூட்டுதல்
மஞ்சம் - கடல், கட்டில், சப்பரம்
மட்டிப்பயல் - அறிவற்றவன்
பிரஷ்டர் - தீயபண்பினர்
மண்டலீசர் - நாட்டுக்கு அரசர்
மண்டல நிலை - இருகாலும் பக்கல் வளைய வட்டமிடுதல்
மந்தமாருதம் - தென்றல் காற்று
மந்தஹாஸம் - புன்னகை
மமதை - அகந்தை, செருக்கு
மரகதம் - பச்சைமணி
மரணாவஸ்தை - சாவுத்துன்பம்
மராமரம் - அரசு, ஆச்சா, கடம்பு
மவராசாவே - பேரரசரே
மற்கடங்கள் - குரங்குகள்
மனப்பிராந்தி - மன உறுதியின்மை
மனஸ்தாபம் - மனத்துயர்
மனுதர்மம் - மனுநீதி
மனுஸ்மிருதி - மனுமந்திரம்
மனுஸ்ருதி - தருமநூல் பதினெட்டில் ஒன்று
மஹாசங்கம் - பெரியகூட்டம்
மஹாரதர் - பதினோராயிரம் தேர்களுக்கு முதல் தேர் உடையவர்
மஹாபலாட்டியன் - பெரிய வலிமையுடையவன்

## மா

மாடத்தி - அறிவற்றவள்
மாதா - தாய்
மாதோஸ்திரீ - பெண்
மார்க்கம் - வழி, நெறி
மாற்றார் - பகைவர்
மானுஷ்ய ஜெனனம் - மனிதப்பிறவி
மான்யம் - அரசர்கள் சம்மானத்தால் விட்ட நிலம்

## மி

மிருது - மென்மை
மித்திரவர்க்கம் - நட்பு இனம்
மின்போல் - மின்னல்போல்

## மு

முட்டுக்கட்டை - தடை
முணுமுணெனல் - ஒலிக்குறிப்பு

முண்டைகள் - விதவைகள்
முறண்டு - மாறுபாடு
முனிந்தால் - சினமடைந்தால்
முஷ்டியுத்தங்கள் - கைக்குத்துப்போர்கள்

### மூ

மூதேவி - சேட்டை, திருமகளுக்கு மூத்தவள்
மூப்பனார் - முதன்மையானவர்
மூர்க்கர் - கீழ்மக்கள்

### மொ

மொணமொணன்னு - ஒலிக்குறிப்பு

### மோ

மோகனம் - மயக்கம்
மோகாந்தகாரம் - மயக்க இருள்

### யா

யாக அவிர்ப்பாக உணவு - யாக அவிப்பாக உணவு; அவிப்பாகம் - தேவருணவு
யாக எக்கியங்கள் - யாக கர்மாக்கள்
யாகாதி நற்கருமங்கள் - யாகம் முதலிய நல்ல செயல்கள்

### யு

யுக்தி - யுத்தி, ஆராய்வு, உபாயம், பொருத்தம்

### யூ

யூகம் - யோசிப்பு, விவேகம்
யூகத்தலைவர் - ஆய்வுத்தலைவர்

### யோ

யோகம் - கூடல்

### ர

ரகுநந்தன - ரகுமைந்தன்
ரஞ்சிதத்தாம்பூலம் - இன்ப வெற்றிலை
ரணபேரிசை - போர்முரசு
ரணரங்கசூரயுத்தவீரன் - போர்க்களப் போர்வீரன்
ரதகஜதுரகபதாதி - தேர், யானை, குதிரை, காலாள்படைகள்
ரக்ஷிக்கவேணும் - காக்கவேண்டும்
ரக்ஷை - காப்பு

### ரா

ராட்சதன் - அரக்கன்
ராமநாமோச்சாடனம் - ராமன்பெயரை ஒலித்தல்

ராஜவீதி - அரசர் தெரு
ராஜா - அரசர்
ராஜ்யலக்ஷ்மி - அரசத்திருமகள்
ராஜ்யம் - அரசு
ராஜ பாரம் - அரசுச்சுமை
ராஜ்யாபிஷேகம் - அரசுத்திருமஞ்சனம், அரசாபிடேகம், அரசேற்கும் நீராட்டு

## ல
லகு - இலகு, கனமின்மை, நொய்மை
லக்ஷியம் - அடையாளம்
லஜ்ஜை - இலச்சை, கூச்சம், வெட்கம்

## லா
லாபம் - இலாபம், ஆதாயம்

## லீ
லீலாவிநோதங்கள் - சுரதவிளையாட்டுகள், புணர்ச்சி விளையாட்டுக்கள்

## லோ
லோகமுறை - உலகமுறை
லோகோபகாரம் - உலக உபகாரம்; உபகாரம் - உதவி, நன்மை

## ரி
ரிஷி - முனிவர்
ரிஷிபுத்ரவர்க்கம் - முனிமக்கள் இனம்

## ரு
ருத்ராம்சம் - பெருங்கோபக்கூறு

## ரூ
ரூபம் - உருவம், வடிவம்

## ரொ
ரொம்ப - நிரம்ப

## ரோ
ரோஷம் - மானம், வெட்கம்
ரோமம் - புறமயிர், மயிர்

## வ
வசீகரமொழி - ஈர்க்கும் சொல்
வத்ஸர்கள் - மைந்தர்கள்
வம்சம் - மரபு, பரம்பரை

வருணாஸ்திரம் - மழையம்பு
வருஷிப்பது - பொழிவது
வலசை - கூட்டம்
வனசஞ்சாரியாக - வனத்தில் திரிபவராக
வனச்சர கிராதன ஜீவஹிம்சை - வனத்தில் திரிந்து செய்யும் பண்பற்ற உயிர் வதை
வன்மீகம் - புற்று
வஜ்ஜிரம் - வைரம்
வஸ்த்திரம் - ஆடை, உடை, சீலை

## வா

வாக்சாலகன் - பேச்சுப் பெருமையுடையவன்
வாக்குச்சாதுரியம் - பேச்சுத்திறமை
வாசவன் - இந்திரன்

## வி

விகற்பித்து - வேறுபடுத்தி
விக்கினம் - இடையூறு, தடை, தீமை
விசனம் - வருத்தம்
விசேஷா - மேன்மையானவனே
வித்துவான் - புலவன்
வித்யாசம் - வேறுபாடு
வித்வசிரேஷ்டர்கள் - புலமைச் சிறப்புடையவர்கள்
விசேஷமாக - மேன்மையாக
விபத்து - ஆபத்து, துன்பம்
விபரம் - விரிவு
வியாகுலம் - கலக்கம், துக்கம்
வியாகூலசந்தாபகாரத்தை - துன்பப்பொல்லாங்கை
விரதா - தவமுடையவனே
விருத்தாந்தம் - கதை, செய்தி, காரியம்
விருத்தி - வளர்ச்சி
விருக்ஷம் - மரம்
வில்லங்கம் - தடை
விஸ்தரி காமாட்டிப்பயல்கள் வெருட்டி - விரிவாக மூடப்பயல்கள் அச்சுறுத்தி
விஸ்தரித்து - விரித்துச்சொல்லி
விஸ்வாசன் - நம்பிக்கையுள்ளவன்
விஷஜெந்துக்கள் - நஞ்சுள்ள உயிரினங்கள்
விஜயம் - வெற்றி
விஜயீபவ - வெற்றி உண்டாகட்டும்

## வீ

வீணபவாதங்கள் - வீண்பழிகள், வீண்குற்றச்சாட்டுகள்
வீரபராக்கிரமம் - வீரவலிமை
வீரபுயாச்சல - மலையொத்த தோள் உடைய வீரனே

**வே**

வேதம் - மறை, ஆகமம், தருமநூல்
வேதை - துன்பம்

**வை**

வைதேகி - சீதை
வையாளி - குதிரையின் மிருகதி

<u>பிற</u>

ஸ்ருதி - சுருதி
ஸ்ருஷ்டி - படைப்பு
ஸ்லோகம் - ஆரியச் செய்யுள்
ஸ்திரீ - பெண்
ஸ்வாமி - அரசன், அருகன், உவாத்தி
ஸ்வீகரித்தல் - அங்கீகரித்தல், தனதாக்குதல்
ஜல்தியில் - விரைவில்
ஜரிகை - பொன் முதலியவற்றின் நூல்
ஜலவசதி - நீர்வசதி
ஜலக்ரீடை - நீர்ப்புணர்ச்சி, நீரிடைப்புணர்தல்
ஜன உபகார இடம் - மக்களுக்கு உதவும் இடம்
ஜீவன் - உயிர்
ஜெந்து - உயிர்ப்பிராணிகள், ஊர்வன
ஜென்மம் - பிறவி
க்ஷணம் - அழிவு
க்ஷேமம் - நலம்
ஹேது - காரணம், நிமித்தம்.

*******

# உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம்
## சென்னை – 600 113

### அண்மை வெளியீடுகள்

| | |
|---|---|
| செந்தமிழ் அகராதி | 150. 00 |
| சொற்பிறப்பு – ஒப்பியல் தமிழ் அகராதி | 200. 00 |
| ஐங்குறு நூறு | 85. 00 |
| நன்னூல் மூலமும் விருத்தியுரையும் | 225. 00 |
| தனிநாயகம் அடிகளாரின் சொற்பொழிவுகள் | 40. 00 |
| தமிழ்ச்சொற் பிறப்பாராய்ச்சி | 30. 00 |
| பொருள் புதிது | 35. 00 |
| ஆளும் தமிழ் | 28. 00 |
| தமிழின் பா வடிவங்கள் | 35. 00 |
| சங்க இலக்கியம் – கவிதையியல் நோக்கு... | 110. 00 |
| நாடக மேடை நினைவுகள் | 160. 00 |
| சின்னணைஞ்சான் கதை | 65. 00 |
| தொல்காப்பிய இலக்கியக் கோட்பாடுகள் | 110. 00 |
| நன்னூல் மூலமும் கூழங்கைத்தம்பிரான் உரையும் | 65. 00 |
| யாப்பருங்கலம் | 170. 00 |
| மண்டல புருடர் வழங்கிய சூடாமணி நிகண்டு | 65. 00 |
| தமிழ் நாடகமேடை முன்னோடிகள் | 40. 00 |
| காஞ்சிபுரம் ஏகாம்பரநாதர் கோவில் – ஓர் ஆய்வு | 60. 00 |
| திருக்குற்றாலநாத சுவாமி கோயில் வரலாறும் பண்பாடும் | 60. 00 |
| வெள்ளுடை வேந்தர் தியாகராயரின் வாழ்வும் பணியும் | 65. 00 |
| தமிழ்நாட்டு வரலாற்றில் இலக்கிய ஆதாரங்கள் | 100. 00 |
| இந்திய விடுதலைக்கு முந்தைய தமிழ் இதழ்கள், தொகுதி – 1 | 100. 00 |
| கதிர்வேற்பிள்ளை – தமிழ்ச் சொல்லகராதி, மூன்று பாகங்கள் | 600. 00 |
| சங்கத் தமிழர் வாழ்வியல் | 75. 00 |
| வேதகிரியார் சூடாமணி நிகண்டு | 65. 00 |
| தமிழக மேடை நாடகப் பெண் கலைஞர்கள் – குறிப்பேடு | 25. 00 |
| Persona in Tolkapiyam | 50. 00 |
| Studies in Tamil Prosody and Poetics | 45. 00 |
| Literary Criticism in Tamil and Sanskrit | 45. 00 |
| Tamil India | 40. 00 |
| Critical Studies in Kural | 30. 00 |
| Tani pacura togai (மொ.நூ.ம.ப) | 30. 00 |
| Dedication (மொ.நூ.ம.ப) | 25. 00 |
| Temple chimes (மொ.நூ.ம.ப) | 20. 00 |
| Nala venba (மொ.நூ.ம.ப) | 45. 00 |
| Tamil Heroic Poems (மொ.நூ.ம.ப) | 40. 00 |
| Six Long Poems From Sangam Tamil (மொ.நூ.ம.ப) | 30. 00 |